# திருவாசகத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்

'செந்தமிழ்ச்செல்வர்', 'தமிழாகரர்', 'நல்லாசிரியர்'
முனைவர் ச. சாம்பசிவனார் எம்.ஏ.,பிஎச்.டி.,
சிறப்புநிலைப் பேராசிரியர்
சைவசித்தாந்தத்துறை, ம.கா. பல்கலைக் கழகம்

வளவன் வெளியீடு
அ.பெ.எண். 155
மதுரை - 625 001.

முதற்பதிப்பு, செப்டம்பர் 1997

விலை ரூ. 60/-

THIRUVACAKATHIL SAIVA SIDDHANTA KARUTHUKKAL

By

Dr. S. SAMBASIVANAR, M.A.,Ph.D.,
(Research Fellow., Dept. of Saiva Siddhanta Philosophy,
M.K. University, Madurai)

This book is published with the financial assistance of TIRUMALA TIRUPATI DEVASTHANAMS, under their scheme aid to publish Religious Books. My sincere thanks to T.T.D.

*-AUTHOR*

*Published by* :
Dr. S. SAMBASIVANAR
VALAVAN VELIYEEDU
Post Box No. 155 (Beat No. 36)
MADURAI - 625 001. (Tamilnadu)
Phone : 532335

---

*Amuthachakam*, MADURAI - 625 016. Phone : 602029

# முன்னுரை

*"வான்கலந்த மாணிக்க வாசக!நின் வாசகத்தை*
*நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே*
*தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து,என்*
*ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே!"*

என்பது அருட்பிரகாச வள்ளலார் வாக்கு! "திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்" என்பது தமிழகப் பழமொழி.

இத்தகு திருவாசகத்தில், மணிவாசகப் பெருந்தகை அருளிய 'சைவ சித்தாந்தக் கருத்துக்கள்' பலவாகும். திருவாசகத்தை நாளும் ஓதி வழிபடுவோர் பலராவர்! அத்தகையோரும் பிறரும், திருவாசகப் பாடல்களோடு சைவசித்தாந்தக் கருத்துக்களையும் தெரிந்து கொண்டு, அதன் பயனாகச் சிவபரம் பொருளின் திருவருளுக்கு ஆளாக வேண்டும் எனும் நோக்கத்தால் உருவானதே **'திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள்'** என்ற இவ் ஆய்வு நூல்! மதுரைக் காமராசர் பல்கலைக் கழகச் சைவசித்தாந்தத் தத்துவத்துறையில் 'சிறப்புநிலைப் பேராசிரியர்'க்குரிய ஆய்வுத்திட்டத்தின்கீழ் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு இது!

இத்துறையில் இவ் ஆய்வினை யான் மேற்கொள்ளவும், நூலாக வெளியிடவும் எனக்கு ஆணைதந்து உதவிய பெருந்தகை, ம.கா. பல்கலைக் கழகத் **துணைவேந்தர் - 'தமிழ்க்கடல்' மறைமலையடிகளாரின் பெயரர் - பெருமைமிகு பேராசிரியர் கு. ஆளுடையபிள்ளையவர்களாவர்!** அவர்கட்கு எழுமையும் கடப்பாடுடையேன். பதிவாளர் **முனைவர் பெருமைமிகு அ. இராமசாமி அவர்களும்**, முன்னாட் பதிவாளர் **பெருமைமிகு சி. சந்திரசேகரன் அவர்களும்**, ஆட்சிக்குழுவினர்களும், அலுவலர்களும் செய்த பேருதவிகட்கு நன்றியுடையேன்!

இத்துறையின் ஒருங்கிணைப்பாளர் முனைவர் - பேராசிரியர் **ச. செயப்பிரகாசம்** அவர்களும், துறைத் தலைவர் - முனைவர் - பேராசிரியர் **ச. கங்காதரன்** அவர்களும் என்பால் காட்டிவரும் அன்பை என்றென்றும் மனத்திற் கொள்வேன். என் கெழுதகை நண்பரும் - துறை இணைப் பேராசிரியருமான முனைவர் **ஆ. ஆனந்தராசன் அவர்கள்**, இவ் ஏட்டினை முழுமையாகப் படித்துப் பார்த்து, வேண்டும் திருத்தங்கள் செய்து உதவினர். மற்றும் துறைசார்ந்த ஆசிரியர்களும் அலுவலர்களும் அவ்வப்போது செய்துவரும் உதவிகள் பலவாம்! இவர்கள் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி!

**இது, நூல் வடிவில் வெளிவருதற்கு நிதி உதவியளித்த 'திருமலை-திருப்பதி தேவத்தானத்'தைச் சார்ந்த அனைவர்க்கும் மனங்கனிந்த நன்றி!** இதனை நன்முறையில் அச்சிட்ட அமுதச்சகத்தார்க்கும் நன்றி. தமிழ்ப்பெருமக்கள் இதனை வாங்கி ஆதரவு நல்குமாறு அன்புடன் வேண்டுகின்றேன்.

தோன்றாத்துணையாயிருக்கும் எம்பெருமானின் திருவருளைநினைந்து வழுத்துவன்!

வாழ்க தமிழ்!

மதுரை-1
திவ.ஆ. 2028
27-9-97

அன்பன்
**ச. சாம்பசிவனார்**

# உள்ளுறை

# 1
# தோற்றுவாய்

## முன்னுரை

*"வள்ளுவர்நூ லன்பர்திரு **வாசகந்**தொல் காப்பியமே*
*தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை - ஒள்ளியசீர்த்*
*தொண்டர் புராணந் தொகைச்சித்தி யோராறுந்*
*தண்டமிழின் மேலாந் தரம்"*

என்னும் 'தனிப்பாடல்', தண்டமிழின்கண் தோன்றிய அருமைத் திருநூல்களுள் 'திருவாசகத்'தையும் சேர்த்துக் கூறுவது கருதத்தக்கது. இத்தகு திருவாசகத்தில், சைவ சித்தாந்தக் கருத்துக்கள் இடம்பெற்றுள்ள பான்மையை ஆராய்கிறது இவ் 'ஆய்வு'.

## ஆய்வின் நோக்கம்

திருவாசகத்தை நாளும் ஓதி வழிபடுவோர், அதனோடு தொடர்புடைய சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது இவ் ஆய்வின் நோக்கம். அன்றியும் இவற்றைத் தெரிந்து கொள்வதன் வாயிலாகச் சைவ சித்தாந்தம், இவ் உலக வாழ்விற்கு எத்துணை நலம் பயக்கும் என்பதும், பின்னர்ச் 'சிவப்பேற்'றிற்கு வழிவகுக்கும் என்பதும் புலனாகும்.

## ஆய்வு முன்னோடிகள்

திருவாசக விரிவுரை நூல்கள் பல வெளிவந்துள்ளன. மறைமலையடிகளார் எழுதிய 'மாணிக்கவாசகர் மாட்சி' (மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்), திருவாசக விரிவுரை, சிவஞானபோத ஆராய்ச்சி ஆகிய நூல்கள்; கா. சுப்பிரமணியபிள்ளை எழுதிய 'திருவாசக மூலமும் உரையும்'; மு. கதிரேசச் செட்டியார் எழுதிய 'திருவாசகம் - கதிர்மணி விளக்கம்';

(திருமதி) இராதா தியாகராசன் எழுதிய ஆங்கில நூல் (A Study of Mysticism in Tiruvacakam); சி. அருணைவடிவேலு முதலியார் எழுதிய, 'சிவஞானபோத மாபாடியப் பொருள்நிலை விளக்கம்'; வ.ஆ. தேவசேனாபதி எழுதிய 'சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள்'; வை. இரத்தினசபாபதி எழுதிய 'திருமுறைத் தெளிவே சைவ சித்தாந்தம்', ந. சுப்புரெட்டியார் எழுதிய 'சைவ சமய விளக்கு', ஆ. ஆனந்தராசன் எழுதிய 'சிவஞானபோதம் வழித் துணை விளக்கம்', ச. கங்காதரன் எழுதிய 'சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும்', டி.பி. சித்தலிங்கையா எழுதிய ஆங்கில நூல் (Origin and Development of Saiva Siddhanta), (திருமதி) கோமதிசூரியமூர்த்தி எழுதிய 'திருஞானசம்பந்தர் தேவாரமும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும்', ர. இராமானுஜம் எழுதிய 'சைவ சித்தாந்தம்', தருமை ஆதீனம் வெளியிட்டுள்ள 'மெய்கண்ட சாத்திரம் (சைவ சித்தாந்தம்), மு. திருவிளங்கம் எழுதிய 'சிவஞான சித்தியார் சுபக்கம் - புத்துரை' நூல்களும் பிறவும் இவ் ஆய்வுக்கு முன்மாதிரியாகக் கொள்ளத்தகுவன.

## ஆய்வின் அடிப்படை

இவ் ஆய்விற்கு மணிவாசகர் அருளிய 'திருவாசகம்'; மெய்கண்டார் அருளிய 'சிவஞானபோதம்'; மற்றும் 'சிவஞான சித்தியார்' போன்ற சைவ சித்தாந்தச் சாத்திர நூல்கள்; இவற்றின் விளக்க - விரிவுரைகள் முதலாயின, இவ் ஆய்வுக்கு அடிப்படையாய் அமைகின்றன.

## ஆய்வு எல்லை

'திருவாசகத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்' எனும் ஆய்வு, பரந்துபட்டது; விரிந்தது. மணிவாசகர் அருளிய ஒவ்வொரு பாடலிலும் ஏதோ ஒரு சைவ சித்தாந்தக் கருத்து இடம்பெறுகின்றது எனலாம். அத்துணையும் விரிவாக விரித்துரைக்க, இவ் ஆய்வுக்கென அளிக்கப்பட்ட கால எல்லை (ஓராண்டு) இடந்தராது. ஆதலின், 'பதி, பசு, பாசம், நால்வகை நெறிகள், சிவப்பேறு' என்னும் அடிப்படையில் ஆங்காங்கு இடம் பெறும் ஒருசில கருத்துக்கள் மட்டுமே இதன்கண் ஆராயப்படுகின்றன. இவை குறித்து இன்னும் ஆராய இடனுண்டு.

## அணுகுமுறை

இவ் ஆய்வு, 'பகுப்புமுறை' ஆய்வாகவும், 'விளக்கமுறை' ஆய்வாகவும், 'ஒப்பீட்டுமுறை' ஆய்வாகவும், 'திறனாய்வுமுறை' ஆய்வாகவும் அமைகின்றது.

மணிவாசகர் அருளிய 'திருவாசகம்', 'சிவஞானபோதம்' முதலான சைவ சித்தாந்த நூல்களின் வாயிலாக அறியலாகும் 'பதி, பசு, பாசம்,

நால்வகை நெறிகள், சிவப்பேறு' பற்றிய கருத்துக்கள், 'பகுப்பு, விளக்கம், ஒப்பீடு, திறனாய்வு' எனும் வகையில் விளக்கப்படுகின்றன.

## ஆய்வுப் பகுப்பு

இவ் ஆய்வு பின்வரும் எட்டுப் பகுப்பு நிலைகளைக் கொண்டுள்ளது :

1. தோற்றுவாய்
2. மணிவாசகரும் திருவாசகமும்
3. திருவாசகத்தில் 'பதியியற் கொள்கை'
4. திருவாசகத்தில் 'பசுவியற் கொள்கை'
5. திருவாசகத்தில் 'பாசவியற் கொள்கை'
6. திருவாசகத்தில் 'நால்வகை நெறிகள்'
7. திருவாசகத்தில் 'சிவப்பேறு'
8. முடிவுரை

இவைதவிரப் 'பின்னிணைப்பு'ம் இடம் பெற்றுள்ளது.

'தோற்றுவாய்' எனும் இவ் இயலில். 'ஆய்வு நோக்கம்' முதலாயின இடம்பெறுகின்றன. 'மணிவாசகரும் திருவாசகமும்' எனும் இயலில், மணிவாசகர் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம், திருவாசகப் பெருமை, 'சைவ சித்தாந்தம்' என்பதன் விளக்கம் உரைக்கப்படுகின்றன. 'திருவாசகத்தில் பதியியற் கொள்கை' எனும் இயலில், 'பதி'யின் இயல்பு, 'பதி' பற்றி மணிவாசகர் மொழிவன, அவற்றோடு இயைபுடைய தோத்திர - சாத்திர நூற் கருத்துக்கள் ஆகியன இடம்பெறுகின்றன. இவ்வாறே 'பசுவியற் கருத்துக்கள்', 'பாசவியற் கருத்துக்கள்', 'நால்வகை நெறிகள்', 'சிவப்பேறு' முதலாயின பிற இயல்களிலும் ஆராயப்படுகின்றன. 'முடிவுரை'யில், ஆய்வு முடிபுகள் சுருக்கமாக உரைக்கப்படுகின்றன. 'பின்னிணைப்பி'ல் 'முதன்மை ஆதாரம், துணைமை ஆதாரம்' என நூற்பட்டியல் இடம்பெறுகின்றது.

## மேற்கோள் விளக்கம்

இவ் ஆய்வில், திருவாசகம், 'சிவஞானபோதம்' முதலான சாத்திர நூல்கள், 'தேவாரம்' முதலான தோத்திர நூல்கள், தேவையான இடங்களில் இவைபற்றி அறிஞர்கள் கூறிய கருத்துரைகள் முதலாயின மேற்கோள்களாகக் காட்டப்படுகின்றன. சிலவிடங்களில் முழுமையான பாடல்கள், சிலவற்றில் பாடலடிகள் அல்லது தொடர்கள் இடம்பெறுகின்றன. பாடலின் முடிவில் வளைவு கோட்டிற்குள் அவற்றின் எண்கள் தரப்படுகின்றன. "முதல் எண் - பதிகம்; அடுத்தது - பாடல் எண்; அதனை அடுத்தது - பாடல் அடி எண்" என்ற முறை பின்பற்றப்படுகின்றது.

# 2
# மணிவாசகரும் திருவாசகமும்

## முன்னுரை

'அழுது அடி அடைந்த அன்பர்' எனப் போற்றப்படும் மணிவாசகரைப் பற்றியும், அவரருளிய 'திருவாசகத்'தைப் பற்றியும் ஒரு சிறிது ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

## 'மணிவாசகர்' வரலாற்றுச் சுருக்கம்

*"எழுதரு மறைகள் தேறா இறைவனை எல்லிற் கங்குல்*
*பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து*
*தொழுதகை தலைமே லேறத் துளும்புகண் ணீருள் மூழ்கி*
*அழுதடி யடைந்த அன்பன் அடியவர்க் கடிமை செய்வாம்"*[1]

என்பது மணிவாசகரைப் பரஞ்சோதி மாமுனிவர் போற்றும் துதிப்பாடலாகும். இத்தகு அருளாளரான மணிவாசகரின் முழுமையான வரலாறு செப்பும் நூல் எதுவும் இல்லை. எனினும் சில புராண நூல்களின் வாயிலாகச் சிலவற்றைத் தெரிந்து கொள்ள முடிகின்றது. அத்தகு நூல்களில் குறிப்பிடத்தக்கன: பெரும்பற்றப்புலியூர் நம்பியின் 'திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம்', கடவுள் மாமுனிவரின் 'திருவாதவூரர் புராணம்', பரஞ்சோதிமா முனிவரின் 'திருவிளையாடற்புராணம்', 'மகாவித்துவான்' மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் 'திருப்பெருந்துறைப் புராணம்' முதலாயின. இந்நூல்களில் சொல்லப்படுவனவற்றை உட்கொண்டு மணிவாசகர்தம் வாழ்க்கை வரலாற்றை ஒருசிறிது அறியலாம்.

'பாண்டி நாடே பழம்பதி'; அதன் தலைநகர் மதுரை; அதற்கு அணித்தே அமைந்துள்ளது 'திருவாதவூர்', சங்கப்புலவர் 'கபிலர்'

தோன்றியதும் இவ்வூரே. இத்தகு ஊரில், ஓர் அந்தணர் குலத்தில் திருவவதாரம் செய்தார் மணிவாசகர். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் யாதெனத் தெரியவில்லை. 'கணியன் பூங்குன்றனார், மாங்குடி மருதனார், கோவூர் கிழார்' என்னும் சங்கப் புலவர்களின் பெயர்கள், தாம்தாம் பிறந்த ஊர்ப்பெயர்களோடு விளங்குதல் போல, மணிவாசகருக்கும், 'வாதவூரர்' என்னும் பெயரே விளங்குவதாயிற்று. இளமையிலேயே கல்வி, கேள்விகளிற் சிறந்து விளங்கினார் மணிவாசகர்.

*"கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்"*[2]

என அவரே கூறுவதால் இதனை அறியலாம். இவரது புலமை நலமறிந்த பாண்டிய அரசன் (அரிமர்த்தன பாண்டியன் என்பர் பரஞ்சோதி முனிவர்), இவரைத் 'தலைமை அமைச்ச'ராக ஆக்கிக் கொண்டான். அன்றியும் அமைச்சுப் பணியைச் செம்மையாகப் புரிந்து வந்த வாதவூரர்க்குத் 'தென்னவன் பிரமராயன்' எனும் பட்டமும் அளித்துப் பெருமைப்படுத்தினான். வாதவூரர், தம் பணிகளுக்கிடையேயும், அரனடிக்கு அன்புடையவராகவே விளங்கி வந்தார்.

சில ஆண்டுகள் கழிந்தன. பாண்டியன், தன் படை வலிமையைப் பெருக்கிக் கொள்ளக் 'குதிரைகள்' வாங்கத் திட்டமிட்டான்; எனவே வாதவூரரிடம் பொன்னும் பொருளும் கொடுத்துக் கீழைக் கடற்கரையில் வந்திறங்கும் நல்ல குதிரைகளை வாங்கி வருமாறு பணித்தான். வாதவூரரும், அரசனது பணியினை ஏற்றுத் 'திருவாலவாயுறை ஆதி'யை வணங்கிச் சென்றவர் 'திருப்பெருந்துறை' என்னும் 'பதி'யினை அடைந்தார். அவ்வூரின் எல்லையை மிதித்தவுடனேயே வாதவூரருக்கு 'முன் உணர்வு' மூளத் தொடங்கிவிட்டது. ஊரருகே உள்ள சோலை ஒன்றின் நடுவே ஒரு குருந்தமரம்; அம்மரத்து நிழலில், எல்லாம் வல்ல பரம்பொருளாகிய சிவபெருமானே, வாதவூரரை வலிய ஆட்கொள்ளத் திருவுளம் கொண்டு, 'குரு'வாக அமர்ந்து, அடியவர்கட்கு அருளுரை வழங்கிக் கொண்டிருந்தான். இறைவனது திருக்கையில் 'பொய்ம்மைஇலாச் சிவஞானபோதம்' எனும் மெய்யுணர்வு நூலும் இருந்தது. அக்காட்சியைக் கண்டார் வாதவூரர்; 'குரு'வின் காலில் வீழ்ந்து பன்முறை பணிந்தார்;

*"தொழுத கையினர் துளங்கிய முடியினர் துளும்ப*
*அழுத கண்ணினர் பொடிப்புறு மியாக்கையர் நாக்குத்*
*தழுத முத்தவன் புரையினர் தமையிழந் தழல்வாய்*
*இழுதை யன்னமெய் யினர்பணிந் தேத்துவா ரானார்"*[3]

என்று வாதவூரரின் நிலைமையைப் பரஞ்சோதியார் காட்டுவர். இறைவனும் வாதவூரருக்குத் 'திருவைந்தெழுத்தை' அருளி, 'மாணிக்கவாசகன்' எனும் 'தீட்சைத்திருப்பெய'ரும் சூட்டி ஆட்கொண்டனன். 'மாணிக்கவாசகன்' எனத் திருப்பெயரின் பொருத்தம் குறித்துப் பரஞ்சோதியார் கூறும் காரணம் இது :

*"பழுதி லாதசொன் மணியினைப் பத்திசெய் தன்பு*
*முழுது மாகிய வடத்தினான் முறைதொடுத் தலங்கல்*
*அழுது சாத்துமெய் யன்பருக் ககமகிழ்ந் தையர்*
*வழுவி லாதபேர்* **மாணிக்க வாசகன்** *என்றார்"*[4]

வாதவூரரும் தன்வசம் இழந்தார்; தன் 'உடல், பொருள், உயிர்' மூன்றையும் தேசிகன் திருவடியில் ஒப்புவித்துவிட்டார்; குதிரை வாங்குதற்கெனக் கொண்டுவந்த பொன்னும் பொருளும் 'குரு'வுக்கே என்றாயின.

இதனை மணிவாசகரே,

*"அந்தண னாகி யாண்டுகொண் டருளி*
*இந்திர ஞாலம் காட்டிய இயல்பும்"*[5]

என வியந்து பேசுகின்றார்.

மணிவாசகருடன் வந்த பணியாட்கள், செய்வதறியாது திகைத்துப் பாண்டியனிடம் வந்து, நிகழ்ந்தன கூறினர். பாண்டியன் தன்னை வந்து உடனே காணுமாறு பணியாளிடம் ஓலை கொடுத்து அனுப்பினான். அவ் ஓலையைக் கண்ட பிறகே மணிவாசகருக்கு உலகியல் நினைவு தோன்றுகின்றது. உடனே தம்மை ஆட்கொண்ட வள்ளலாம் இறைவனிடம் முறையிடுவதே தக்கது என்று எண்ணித் திருக்கோயிலுக்குச் சென்று, இறைவன் திருமுன்பு தொழுது நின்று அழுது வேண்டினர்.

இறைவன் திருவுளங்கொண்டு, "அன்ப! அஞ்சேல்! ஆவணி மூலத்தன்று யாமே குதிரைகளைக் கொண்டு வருவோம். இதனைப் பாண்டியனுக்கு அறிவித்து விடுக!" என்றருளினன். மணிவாசகரும் பாண்டியனிடம் வந்து குதிரைகள் வரும் செய்தியைக் கூறினார். பாண்டியனும் 'ஆவணிமூல' நாளை ஆவலுடன் எதிர் நோக்கியிருந்தான்.

இறைவனும், மணிவாசகரின் துன்பத்தைப் போக்கத் திருவுளம் கொண்டு. குதிரைச் சேவகனாக எழுந்தருளிக் கணக்கற்ற குதிரைகளைக் கொண்டு வந்து, பாண்டியனிடம் சேர்ப்பித்தான். குதிரைகளைக் கொடுப்பதற்கு அடையாளமாக அவற்றின் கயிறுகளைத் தம் கையாலேயே பெற்றுக் கொண்டான் பாண்டியன். எனவே குதிரைகளின் பொறுப்புப்

பாண்டியனுக்கு வந்துவிட்டது எனலாம்; மணிவாசகரின் பொறுப்பும் முடிந்தது.[6]

மணிவாசகரே இவ் அரிய நிகழ்ச்சியை,

*"மதுரைப் பெருநன் மாநக ரிருந்து*
*குதிரைச் சேவக னாகிய கொள்கையும்"*

*"பந்தம் பறியப் பரிமேற் கொண்டான்"*

*"பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்*
*கொற்றக் குதிரையின்மேல் வந்தருளி"*

*"பாவார ஏறி மதுரைநகா புகுந்தருளி"*[7]

எனப் பலவிடங்களிலும் குறிப்பிடுகின்றார்.

ஆனால், மறுநாள் இரவு, அக் குதிரைகள் எல்லாம் நரிகளாக மாறி, ஊரவர் மருள ஊளையிட்டு ஓடிவிட்டன.

*"நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்"*

*". . . . . . . . . . . . . . . நரிகளெல்லாம்*
*பெருங்குதிரை ஆக்கியவா றன்றேஉன் பேரருளே"*

*"நரியைக் குதிரைப் பரியாக்கி"*[8]

என்று. இதனையும் குறிப்பிடுவர் மணிவாசகர்.

இதனையறிந்த பாண்டியன் பெருஞ்சினமுற்றான். மணிவாசகரை வரவழைத்தான், "இவரைக் கடும்வெயிலில் நிறுத்தித் தண்டிக்க!" என்று ஏவலர்கட்குக் கட்டளையிட்டான். அவ்வாறே, அவர்களும், மணிவாசகரை, வையை மணலில், கடும் உச்சிவெயிலில் நிறுத்தினர். மணிவாசகர் திருவருளை நினைந்து, "உன்னையன்றி எதுவும் அறியாத எனக்கு இத்துன்பம் வருவது முறையோ?" என அழுது அரற்றினார். இறைவன் கருணை கூர்ந்து. வையை யாற்றில் பெருவெள்ளம் கரைபுரண்டு ஓடச் செய்தான்; நீரும், மதுரை நகருக்குள் பாயத் தொடங்கியது. 'வீட்டுக்கு ஒருவர்' எனும் கணக்கில், வையை வெள்ளத்தைத் தடுத்து நிறுத்த அணை கோலினர். மகப்பேறில்லாத 'வந்தி' என்னும் முதிய 'பிட்டுவாணிச்சி'யின் பொருட்டும், மணிவாசகர் பொருட்டும், எல்லாம் வல்ல பரம்பொருளே, இம் மதுரை மண்ணில் கூலியாளாக வந்தான். ஆனால் வந்த அவனோ, தன் பணியினைச் செவ்வனே செய்யாமை கண்டு, பாண்டியன், தன் கைப் பொற்பிரம்பால் அவனது முதுகில் ஓங்கி அடித்தான். கூலியாளாக வந்த

இறைவனோ, கொண்டுவந்த மண்கூடையை ஆற்று உடைப்பில் கொட்டி மாயமாய் மறைந்தனன்; வெள்ளமும் வற்றியது!

இறைவனது முதுகில் பாண்டியன் ஒச்சிய அப்பிரம்படி, அடித்த அவனது முதுகில் மட்டுமன்று, அண்டசராசரங்கள் மீதும் பட்டது!

இவ் விந்தை நிகழ்ச்சியை மணிவாசகர், ஊனும் உள்ளமும் கரைந்துருகப் பாடுகின்றார் :

*"பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்*
*பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்*
*விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்*
*கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை*
*மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு*
*புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்!"*[9]

என்பது அப்பாட்டு.

இறைவன், பாண்டியன் காதில் விழுமாறு,

*"இத்தனை எல்லாம் செய்த திவன்பொருட் டிந்த வேத*
*வித்தகன் றன்மை யொன்றும் அறிந்திலை! வேட்கை எம்பால்*
*வைத்துனக் கிம்மை யோடு மறுமையும் தேடித் தந்த*
*உத்தமன் றொடைசந் தாதிப் புறப்பற்றும் ஒழிந்த நீரான்"*[10]

என்னும் 'அசரீரி'யால் அறிவுறுத்தினான். உண்மை உணர்ந்த பாண்டியன், மணிவாசகரின் பெருமை உணர்ந்து அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கினான். மணிவாசகர், தமது அமைச்சர் பதவியை நீத்துத் திருப்பெருந்துறை நண்ணினார். ஆங்கே ஞானதேசிகன் திருவடியில் வீழ்ந்து வணங்கினார் மணிவாசகர். இறைவன் திருவுளப்பாங்கின்படி, ஆங்கே ஒரு திருக்கோயிலை உருவாக்கினார்.[11] இறைவன், "நலமலி தில்லையுள், கோலமார்தரு பொதுவினில் வருக" எனப் பணித்தனன். மணிவாசகர் உத்தரகோசமங்கை, இடைமருது, அண்ணாமலை, கழுக்குன்றம், காஞ்சி முதலிய பல திருத்தலங்களை வணங்கித் திருவாசகப் பாடல்கள் பாடிக் கொண்டு திருத்தில்லை வந்து, நடராசப் பெருமானை வணங்கினார். ஆங்கே புத்தர்களை வாதில் வென்று, புத்த ஊமர்களைப் பேசச்செய்து அவர்களைச் சைவர்களாக்கினர்.[12]

பிறகு, சிலகாலம் சென்றபின், இறைவனே ஓர் அந்தணவுருக் கொண்டு, மணிவாசகரிடம் வந்து, தான் பாண்டி நாட்டிலிருந்து வந்ததாகக் கூறித் திருவாசகம் முழுமையும் சொல்லச் செய்து, அதனையும்

'திருக்கோவையாரை'யும் தன் திருக்கையினால் ஓலையில் எழுதி, "மாணிக்கவாசகன் சொல்ல அழகிய திருச்சிற்றம்பலமுடையான் எழுதியது" என்று கைச்சாத்திட்டு, சிற்சபையின் பஞ்சாக்கரப்படியில் எவரும் காணாதவாறு வைத்துவிட்டு மறைந்தனன். தில்லைவாழ் அந்தணர்கள் அந்த ஏட்டினைக் கண்டு மணிவாசகரிடம் காட்டி, "இவ் ஏட்டில் உள்ள பாடல்களின் பொருளை எங்கட்குத் தெரிவிக்க வேண்டும்" என்று வேண்டினர். மணிவாசகர், அவர்களை அழைத்துக் கொண்டு, தில்லைக் கூத்தனைச் சுட்டிக்காட்டி, 'இவனே பொருள்' என்றுகூறி, அக்கூத்தனின் திருவடியில் - ஆனி மாமகத்தில் - இரண்டறக் கலந்தனர்.[13]

மணிவாசகருக்கு இறைவன் அருள் சுரந்த பேரருட்டிறம் குறித்து மறைமலையடிகளார் கூறுவது இங்குக் குறித்தல் சாலும்:

> *"திருப்பெருந்துறையில் குருந்தமரநீழலில், அடியவர் குழாத்தொடும் போந்தமர்ந்து, தம்மை ஆட் கொண்ட குருவடிவினையும், அதன்பின் குதிரைகள் கொணர்ந்த வாணிகச் சாத்திற்குத் தலைவனாய் ஓரழகிய பரிமீது இவர்ந்து பாண்டியன்முன் போந்து, தம்பொருட்டு அக்குதிரையின் பல்வேறு நடைகளையும் அவ்வரசன்முன் நடாத்திக் காட்டிய சேவகன் வடிவினையும், அதன்பின் மதுரைப் பிட்டுவாணிச்சி பொருட்டு மண் சுமக்குங் கொற்றாளாய்ப் போந்து, பாண்டி வேந்தன் கையாற் பிரம்படியுங் கொண்டு, மறைந்த ஐயன் அருமைத் திருவுருவினையும், மாணிக்கவாசகர் நேரே கண்டவராதலின், பொல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட மக்களுக்காகத் தேவர்க்கும் அரியனான சிவபிரான் அத்துணை எளியனாய் வந்து செய்த பேரருட்டிறத்தை நினைந்து நினைந்து ஆற்றா நிலையினராகி, அவ் ஆண்டவன்பால் வைத்த பேரன்பால் ஆவியோடு ஆக்கை புரைபுரை கனியப் பெற்றார். பலகாற் பல்லாருங் காணவந்து இறைவன், மாணிக்கவாசகர்க்கு அருள் செய்தவாறு போல் வேறெவர்க்குஞ் செய்திலர்!"*[14]

இறைவனின் 'சிவப்பேற்'றுக்கு ஆளான மணிவாசகப் பெருந்தகையாரின் வாழ்வு குறித்துப் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் கூறுவது வருமாறு :

"திருப்பெருந்துறை செல்ல நேர்ந்தவிடத்துச், சிவபெருமானது திருவருட்சார்பால், **பாசஒழிவும், சிவத்துவப்பேறும் பெறும்** பருவம் உற்றதாக, அங்கு ஒரு குருந்த மரத்து நீழலில், சிவகணங்களாகிய மாணவர் சூழ, இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளியிருக்கும் அரிய காட்சியைத் தம் கண்குளிரக் கண்டு, உள்ளம் நெக்கு நெக்கு உருகத் தம் வயமிழந்து வணங்கி நின்றனர். அந்நிலையில், அடிகளது பந்தமறும் எல்லையது பார்த்தினிதிருந்த இறைவன், தன் அருள்நோக்கால் அடிகளைத் தீர்த்த நீராட்டி, ஆட்கொண்டு, **திருவைந்தெழுத்தை** உபதேசித்து, ஞானப்புதல்வராக ஏற்றுக்கொண்டனன். பின்னர்த் தமிழ் மக்கள், அரிய சிவாநுபவ உண்மைகளை உணர்ந்து நலம் எய்தும்வண்ணம், ஆண்டவன், அடிகளை 'நிலவுலகத்துச் சின்னாள் இருத்தி' எனக் கட்டளையிட்டு உருக்கரந்தனன் ஆக, அடிகள் அப்பிரிவு பொறாது, பலவாறு வருந்திப், பின் இறைவன் கட்டளைப்படியே திருவுத்தரகோசமங்கை, திருக்கழுக்குன்றம் முதலிய தலங்களை அடைந்து, இறைவழிபாடு செய்து, முடிவில் தில்லைப்பதியைச் சார்ந்து, ஞானப்பொதுவெளியில் ஐந்தொழில் திருக்கூத்து இயற்றும் கூத்தப்பெருமான் திருவடி நீழலில் இயைந்து, அழிவில்லாப் பேரின்ப நுகர்ச்சியில் தலைப்பட்டனர்"[15]

மணிவாசகரின் திருவாசகத்தை விரிவாக ஆராய்ந்த திருமதி. இராதா தியாகராசன்.

"திருப்பெருந்துறையில் 'குரு'வாக எழுந்தருளிய இறைவன், மணிவாசகருக்குச் 'சூக்கும பஞ்சாக் கரத்'தை உபதேசித்து, அவரின் தலையில் தன் திருவடி சூட்டினன், இதுவே மணிவாசகர் வாழ்வில் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சி"[16]

என்பர்.

இத்தகு சிறப்புடைய அருளாளராம் மணிவாசகர் வாழ்ந்த காலத்தைப் பற்றி அறிஞரிடையே கருத்து வேறுபாடுகள் உண்டு. மறைமலையடிகளார்,

'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்' எனும் மிகப்பெரிய ஆராய்ச்சி நூலில், "மூவர் முதலிகட்கும் (சம்பந்தர், அப்பர், சுந்தரர்) முந்தியவர்" என்று குறிப்பிடுகின்றார். தஞ்சைச் சீனிவாசபிள்ளை, தமது 'தமிழ் வரலாறு' எனும் நூலில், 'மூவர்க்கும் பிற்பட்டவர்' என்பார். அ.ச.ஞானசம்பந்தன், "மணிவாசகப் பெருமான் 9ஆம் நூற்றாண்டின் இறுதியில் திகழ்ந்தார் என்று கொள்வதில் தவறில்லை"[17] என்பார்.

## திருவாசகமும் அதன் பெருமையும்

மணிவாசகர் அருளியவை திருவாசகமும், திருக்கோவையாருமாகும்.

> "*தேனூறும்* **வாசகங்கள்** *அறுநூறும்* **திருக்கோவை**
> *நானூறும் அமுதூற மொழிந்தருளும் நாயகனை*
> *வானூறும் கங்கைநிகர் மாணிக்க வாசகனை*
> *யான்ஊறு படாதவகை இருபோதும் இறைஞ்சுவனே"*

என்பது 'செவ்வந்திப் புராணம்'[18]. இவ்விரண்டனுள் 'திருவாசகத்'தைப் பற்றிய குறிப்புக்கள் இவண் எடுத்துரைக்கப்படுகின்றன.

திரு + வாசகம் = திருவாசகம். திரு - கண்டாரால் விரும்பப்படும் தன்மை. வாசகம் - சொல். ஈண்டுச் சொல்லால் ஆகிய நூலினை உணர்த்திற்று.

'திருவாசகம்' என்பதற்குக் கா. சுப்பிரமணியபிள்ளை தரும் விளக்கமாவது:

> *"திருவாசகம் என்ற சொற்றொடர், 'அழகியமொழி' என்று பொருள்படும். அதாவது, வீடு விரும்புவாரது உள்ளத்தைக் கவரும் பேரழகுடைய, அருட் பாடல்களாலாகிய நூல் என்பதாம். அழகு கண்டாரால் விரும்பப்படும் தன்மை. திரு - வீடு. திருவாசகம் - வீடளிக்கும் அருண்மொழி"*[19]

இத்'திருவாசகம்' முழு - முதன்மை **நூல்**. இதன்கண் 'சிவபுராணம்' முதலாக, 'அச்சோப்பதிகம்' ஈறாக 51 பதிகங்கள் உள்ளன. இவற்றில் உள்ள பாடல்களின் எண்ணிக்கை 658 ஆகும். **இவை** தவிர 'மிகைப்பாடல்கள்' சிலவும் காணப்படுகின்றன.[20] **மணிவாசகர்,** எந்தெந்தத் திருத்தலத்தில் எழுந்தருளி, என்னென்ன பதிகம் பாடினார் என்பதும், பதிகத்தின் தொடக்கத்தில் குறிக்கப்பட்டுள்ளது. அவ்வாறு இடம்பெற்ற திருத்தலங்கள் : திருப்பெருந்துறை, தில்லை, உத்தரகோசமங்கை, திருவண்ணாமலை, திருக்கழுக்குன்றம், திருத்தோணிபுரம், திருவாரூர் முதலியன. இவற்றுள்,

திருப்பெருந்துறையிலும் தில்லையிலுமிருந்து அருளிய பதிகங்கள் மிகுதியாக உள்ளன. "கலிவெண்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்-குறளாசிரியப்பா, கட்டளைக் கலித்துறை, வெண்டளையால் வந்த இயல் தரவிணைக் கொச்சகக் கலிப்பா, தரவு கொச்சகக் கலிப்பா, அறுசீர், எழுசீர், எண்சீர், பன்னிருசீர் ஆசிரிய விருத்தங்கள், கலித்தாழிசை, கலிவிருத்தம், நேரிசை வெண்பா, கொச்சகக் கலிப்பா" முதலான யாப்பில் பாடப்பட்டவையாக உள்ளன.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டில், **எட்டாவது** திருமுறையாக வைத்து எண்ணப்படுவது இத் 'திருவாசகம்'.

மெய்கண்டார் அருளிய 'சிவஞானபோதத்'தில் **எட்டாவதாக்** அமைந்த நூற்பா வருமாறு:

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் **குருவுமாய்த்** தவத்தினில் உணர்த்தவிட்டு*
*அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே"*

எட்டாவது திருமுறையாக விளங்கும் இத் திருவாசகத்திற்கும், சிவஞானபோதத்தில் வரும் 'ஐம்புல வேடரின்' எனும் எட்டாவது நூற்பாவுக்கு மிடையே உண்டான பொருத்தத்தை வை. இரத்தினசபாபதி, பின்வருமாறு விளக்குகின்றார்:

*"பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம் மூழ்கிய புனிதன் மொழிந்த **திருவாசகமே** வாசகம் எனக் கொண்டு அவர் பெற்ற கந்தழிநிலை அனுபவமே, ஏனைச் சார்புகளின் மூலமாக வந்த ஞானத்திலும் முதிர்ந்த ஞானமாக இருந்தது; . . . அந்நிலை ஞானம் பெறுவதற்குரிய வழிகள் மூன்று எனினும் தம்மையே 'பொய்' எனவும், அனைத்தும் 'பொய்' எனவும் உணர்ந்து தெளிந்த வகையில், மணிவாசகப் பெருந்தகைக்குக் கந்தழிநிலை உபதேசத்தையும் அனுபவத்தையும் தம் முதலே குருவாக வந்து நேர் நின்று கொடுத்து, அவற்றைத் தவத்தினில் உணர்த்த விட்டு, உணர்ந்து தெளிய வைக்கும் நிலையில் இவ் வுலகில் விட்டுச் சென்றது; . . . . அத்தகைய கந்தழி நிலை அனுபவம் பெற்ற மணிவாசகப் பெருந்தகை அயர்ச்சியின் நீங்கிய வளர்ச்சியைப் பெற்றுச் சிறந்து, இறைவனடியில்*

*இணைந்து நின்று பேரானந்தப் பேரனுபவம் பெற்றார் . . . . . இது இறைவன் தானே முற்படப் போந்து அருளிய நெறியாதலின் இது பெருந்துறை எனப் பெற்றது; இக் கந்தழிநிலை அனுபவ விளக்கமாக எழுந்த திருவாசகத்தை மூலமாகக் கொண்டு தெளிந்தவகையில்* **'சிவஞான போத' எட்டாம்** *நூற்பா மலர்ந்தது!"*[21]

இத்தகு சிறப்புமிகு திருவாசகத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்த அருளாளர்களும் உண்டு. அவருள் குறிப்பிடத்தக்கவர் இராமலிங்க அடிகளார். திருவாசகத்தை ஓதிஓதி, உணர்ந்து உணர்ந்து, ஊற்றெழும் கண்ணீரதனால் நனைந்து நனைந்து, ஏத்திப் பாடிய பாடல்கள் பல. அவற்றுள் ஒன்று:

*"வான்கலந்த மாணிக்க வாசக!நின் வாசகத்தை*
*நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே*
*தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்து,என்*
*ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே!"*[22]

சிவப்பிரகாச சுவாமிகள், நால்வர் நான்மணிமாலை' எனும் நூலின்கண் 'மணிவாசகரை'யும் அவரருளிய 'திருவாசகத்'தையும் வேறெவரும் கூறமுடியாவண்ணம் ஏத்திப் பாடுகின்றார். அவற்றுட் சில வருமாறு:

"வேதம் சிறந்ததா, திருவாசகம் சிறந்ததா ?" எனும் ஒரு வினாவை எழுப்பி, அதற்கு விடைகூறுமுகத்தான்,

*"வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி*
*நெஞ்சம்நெக் குருகி நிற்பவர்க் காண்கிலோம்!*
*திருவா சகம்இங் கொருகால் ஓதின்*
*கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்*
*தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய!"*

என்கின்றார். மேலும் அவர்,

*"வாசகன் புகன்ற* **மதுர வாசகம்**
*யாவரும் ஓதும் இயற்கைத் தாகலின்*
**பொற்கலம் நிகர்க்கும்**! *பூசுரர் நான்மறை*
*மட்கலம் நிகர்க்கும்!* **மதுர வாசகம்**
**ஓதின் முத்தி உறுபயன்**!
*வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே!"*[23]

எனவும் கூறுகின்றார்.

திருவாசகத்தின் அருமையும் பெருமையும் கருதியே மேலைநாட்டுக் கிறித்தவப் பாதிரியாராம் ஜி.யு. போப்ஐயர், இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, உலகறியச் செய்தார்.

திருவாசக மேன்மை குறித்துத் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் கூறுவதும் இங்கு எண்ணத்தகும்:

> *"திருவாசகம் தமிழகத்தின் தவநூல்; ஞானப்பனுவல்; பத்திப் பெருநூல், தத்துவக் கருவூலம்; உணர்ந்த உள்ளத்திலிருந்து எழுந்த உயர்ஞான மொழிகள்; அறிவாற் சிவனேயாய மணிவாசகரின் மணிமொழிகள்; காதலால் கசிந்து கண்ணீர் மல்கிய வாதவூரரின் வண்மைத்தமிழ்; ஆணவமல வெப்பத்தைத் தணிவிக்கும் தண்ணருள் நிறைந்த திருமொழி;பிறவிப் பெருநோய் தீர்க்கும் மருந்து!"*[24]

இதனால்தான், 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒருவாசகத்திற்கும் உருகார்' எனும் பழமொழியும் எழுந்தது.

> *"திருவாசகம், இறைவழிபாட்டுக்கு மிக மிக உகந்தது"*[25]

என்கிறார் தேவபூபதி நடராசா. இதன்கண் இடம்பெறும், "ஈசன் அடி போற்றி, எந்தை அடிபோற்றி" என்பனபோல் வருவன, நாளும் அருச்சனையாக வழிபடத்தக்கன.

> *"இறைவனை அடைய ஒரே ஒரு வழி! அதுதான் அன்புநெறி! பத்திநெறி! 'வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே!' என்பார். இறைவனை எண்ணுவோம்; ஏத்துவோம்; அன்பினில் உருகுவோம். அப்போது அவன், நமக்கு அருள் சுரப்பான். இதுவே மணிவாசகர், மன்பதைக்கு உணர்த்தும் மாண்பார் சிந்தனைக் கருத்தாம்!"*[26]

எனச் ச. சாம்பசிவனார் கூறுவது இங்குக் குறிக்கத்தகும்.

### திருவாசகத்தில் 'சைவ சித்தாந்தம்'

சைவம் + சித்தாந்தம் = சைவ சித்தாந்தம். சைவம் - சிவத்தோடு சம்பந்தமுடையது. சித்தாந்தம் - முடிந்த முடிபு. சைவத்தின் முடிந்த

முடிபினைக் கூறுவது 'சைவ சித்தாந்தம்'. இது குறித்து ஔவை. சு. துரைசாமி கூறுவது வருமாறு:

"சைவ சித்தாந்தம் என்பதை ஒரு தொடராக வைத்தும், தனித்தனிச் சொற்களாக வைத்தும் பொருள் காண்பதுண்டு. தொடர்மொழியாகக் காணுமிடத்துச் 'சைவத்தின் முடிந்த முடிபு' என்ற பொருள் காணப்படும். சைவத்தின் உட்பிரிவாகப் 'பாசுபதம், காபாலம்' முதலாக அறுவகையுண்டு. அவற்றை யாராய்ந்து, வேண்டாதன விலக்கி, வேண்டுவன கொண்டு, இந்நாட்டிற்கே உரித்தாய்த் தொன்றுதொட்டு வந்த சைவத்தோடு கூட்டிமுடிந்த முடிவாகக் கொண்ட சமயம் என்றற்குச் 'சைவ சித்தாந்தம்' என்று வழங்குவதாயிற்று . . . . இத்தொடரைப் பிரித்து நோக்கின், 'சைவம், சித்தாந்தம்' என்ற இரு சொற்கள் தோன்றக் காணலாம். 'சைவம்' என்பது 'சிவசம்பந்தம்' என்று பொருள் தரும். 'சைவம் சிவத்தோடு சம்பந்தமாவது' என்பது திருமந்திரம். 'சிவம்' என்பது கடவுளைக் குறிக்கும் சொல்லாகும்....சிவசம்பந்தம், 'சைவம்' ஆதலால் சிவத்துக்கும் உயிர்கட்கும் உள்ள சம்பந்தம் 'சைவம்'; சிவத்துக்கும் உயிரில்லாத உலகிற்கும் உள்ள தொடர்பு 'சைவம்'; ஆகவே உயிர்கட்கும் அவ்வுலகிற்கும் உள்ள தொடர்பு சைவமாம். உயிரின் வேறாய் அதற்கு நிலைக்களமாய் விளங்கும் உடம்பு உலகியற் பொருளாய் விடுவதால், உயிர்க்கும் உடம்புக்கும் உளதாகிய தொடர்பும் சைவமாம். உயிர்க்கும் உடம்புக்கும் தொடர்பாவது 'அன்பு' என்றார் திருவள்ளுவர்; 'சிவம்' எனக் கண்டார் திருமூலர் . . . இச் சம்பந்தத்தை அறிந்தொழுகும் திருநெறி சைவமாயிற்று. இதனை அளவைகளாலும் பொருந்தும் நெறியாலும் ஆராய்ந்து தெளிந்து முடிவு கண்டு, அன்பர்பணி செய்தொழுகுவது 'சைவ சித்தாந்தம்' எனப்படுவதாயிற்று!"[27]

இத் 'திருவாசகம்' என்னும் செழுந்தமிழ்த் தெய்வப் பனுவலின்கண், இத்திருநாட்டில் தொன்றுதொட்டு உளதாகிய 'சைவ சித்தாந்த'க்

கருத்துக்கள் விரிவாக இடம்பெற்றுள்ளன. நூலினை நுணுகி நோக்கினால், கற்கண்டின் எப்பாகமும் இனித்திடுதல் போலத் திருவாசகத்தின் ஒவ்வொரு பாடலிலும் சைவ சித்தாந்தம் அமைந்து ஆராஇன்பத்தைத் தருவது காணலாம்.

> *"சிவம் தானேவந்து அருள்செய்யப் பெற்றார்தம்முள் மாணிக்கவாசகப் பெருமானே, தாம் பெற்ற அப் பெறலரும் பேற்றைத் தம்மைச் சார்ந்த எம்போல்வா ரெல்லாம் எளிதிற் பெற்றின்புற்றிருக்குமாறு தாம் திருவாய் மலர்ந்த* **திருவாசகச் செந்தமிழ் மாமறை** *வழியே வழங்கிய வள்ளன்மையுடையராகலின், அவர் எம்மனோர்க்குத் தலைக்கணியாய் நிற்கும் தனி முதன்மையுடையரென்பது நினைவிற் பதிக்கற்பாற்று!"*[28]

என மறைமலையடிகளார் கூறுவது கொண்டு, இத்திருவாசகம் நம்மனோர்க்குக் கிடைத்த 'செழுந்தமிழ் மாமறை நூல்' என்பது தெளிவாகும்.

> *"சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கைகளைத் தேவாரத்தைக் காட்டிலும் திருவாசகத்தில் மிகுதியாக நாம் காணுகின்றோம்"*[29]

என்று கூறும் டி.பி. சித்தலிங்கையாவின் கருத்து, மேலே கூறியவற்றிற்கு அரணாக அமைகின்றது.

**முடிபுகள்**

இவ் 'இயல்' வாயிலாக அறியலாகும் முடிபுகளாவன:

1. மணிவாசகர், திருவாதவூரில் அவதரித்துப் பாண்டிய மன்னனின் அமைச்சராகித் திருப்பெருந்துறையில் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றவர்;
2. மணிவாசகர் பொருட்டு, எல்லாம்வல்ல சிவபெருமானே, குதிரைச் சேவகனாக வந்தான்; பிட்டுக்கு மண் சுமந்து, பிரம்படியும் பெற்றான்;
3. மணிவாசகர், பல திருத்தலங்கட்கும் சென்றார்; திருவாசகச் செழுந்தேனை வாரி வழங்கினார்; தில்லைக் கூத்தன் திருவடியில் இரண்டறக் கலந்தார்;
4. சைவத் திருமுறை பன்னிரண்டனுள் எட்டாவதாக விளங்கும் திருவாசகமே, மெய்கண்டாரின் எட்டாவது நூற்பா மலர்தற்குத் துணைநின்றது;

5. 'திருவாசகம்'உள்ளத்தை உருக்கி, இறைவனின் திருவடிப்பேற்றினை நல்கும் திறத்தது;

6. திருவாசகத்தில் 'சைவ சித்தாந்தக் கருத்துக்கள்' விரிவாக இடம்பெற்றுள்ளன;

7. திருவாசகத்தின் சிறப்பை அறிஞர் பலரும் போற்றுகின்றனர்.

## சான்றெண் விளக்கம்

1. திருவிளையாடற்புராணம், பாயிரம், 21.
2. திருவாசகம், 1:4:38.
3. திருவிளையாடற்புராணம், 58:49.
4. மேலது, 58:50.
5. திருவாசகம். 1:42 43.
6. அ.ச. ஞானசம்பந்தன். மணிவாசகர். ப.21
7. திருவாசகம், 1:44 45; 8:3:5; 8:20:1-2; 13:20:1.
8. மேலது, 2:36; 38:1:3-4; 50:7:1.
9. மேலது, 8:8.
10. திருவிளையாடற்புராணம், 61:65.
11. பொன். சுப்புரமணியபிள்ளை. **'முன்னுரை'**, ஸ்ரீமாணிக்கவாசகர் அல்லது நீத்தார் பெருமை, ப.கரு.
12. ம. பாலசுப்பிரமணிய முதலியார், நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத்திட்டும், பக். 43-44.
13. மேலது, பக். 44-45.
14. மறைமலையடிகள். மாணிக்கவாசகர் மாட்சி, ப. 13.
15. மு. கதிரேசச் செட்டியார், **'முன்னுரை'**, திருவாசகம்:திருச்சதகம் கதிர்மணி விளக்கம், பக்.6.
16. "The Guru taught him the devine mantra of Suksma Panchaksara and gently placed his feet on the disciple's head".
    - Radha Thiyagarajan. A Study of Mysticism in Tiruvasakam. p.2
17. அ.ச. ஞானசம்பந்தன், மு.கா.நூல், ப.37.
18. செவ்வந்திப்புராணம். ஆதாரம்: திருவாசகம், ப. xv
19. கா. சுப்பிரமணியபிள்ளை. திருவாசகம் மூலமும் உரையும், ப.க.
20. திருவாசகம், ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபரன் சங்கப் பதிப்பு (1962).
21. வை.இரத்தினசபாபதி, திருமுறைத்தெளிவே சிவஞானபோதம், ப.170.
22. திருவருட்பா, 180.
23. நால்வர் நான்மணிமாலை, 4:6-10; 32:4-9.
24. குன்றக்குடி அடிகளார், **'வாழ்த்துரை'**, திருவாசகம் - திருவெம்பாவை கதிர்மணி விளக்கம், ப.X.

25. "The Tiruvacakam and the Tirukkovaiyar, both by Saint Manikkavasakar make up the eigth Tirumurai. Of these, the former is more popular and suitable for use during prayers."

- Devapoopathy Nadarajah. The Strength of Shaivism. p.24.

26. ச. சாம்பசிவனார், தெய்வத்தமிழ் அலங்கல், ப.128.

27. ஔவை. சு. துரைசாமி. ஐந்தாம் ஆண்டு நினைவுக் கட்டுரை (1986). பக். 13 15.

28. மறைமலையடிகள், மு.கா.நூல், ப.4.

29. "We find the tenets of Saiva Siddhanta philosophy more in Tiruvacakam than in the Thevaram."
- T.B. Siddhalingaiah. Origin and Development of Saiva Siddhanta upto 14th Century. pp. 41,42.

# 3
# திருவாசகத்தில் 'பதியியற் கொள்கை'

## முன்னுரை

சைவ சித்தாந்தம் கூறும் 'பதி,பசு, பாசம்' எனும் மூன்றனுள் 'பதி' முதன்மைப் பொருள். மணிவாசகப் பெருமான், திருவாசகத்தில் அருளிய 'பதியியற் கொள்கை' பற்றிய ஆய்வு, இவ் இயலில் இடம்பெறுகின்றது.

## முப்பொருள்

"உள்பொருள்கள் அனைத்தையும் 'முப்பொருள்' என வகைப்படுத்தி அவற்றைப் 'பதி, பசு, பாசம்' என்று கொள்வது சைவ சித்தாந்த மரபு."[1]

> *"மெய், வாய், கண், மூக்குச், செவி என்னும் ஐம் பொறிகளாலும் நுகரப்படுவனவாகிய ஐம்பெரும் பூதத்தொகுப்பாகும் இவ்வுலகம், காரண காரிய நிலைகளிரண்டிலும் உள்பொருளேயாமென்பதூஉம் இங்ஙனம் உள்பொருளாய் நிலைபெறும் இவ்வுலகத் தின்கட் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிந்து வருவனவாகிய உயிர்கள் எண்ணிறந்தனவாய், என்றும் உள்ள அறிவுப்பொருள்களேயாம் என்பதூஉம், அறிவுப் பொருளான* **இவ்வுயிர்கள்,** *தம் இயற்கையிலேயே அறியாமை வயப்பட்டுத் தம் இயற்கையறிவு மழுங்கிக் கிடக்கக் காண்கின்றோமாதலால் இவைதம்மை அங்ஙனம் பொதிந்து இவற்றோடு ஒருமித்து நிற்கும்* **அறியாமை** *தொன்றுதொட்டு உளதாமென்பதூஉம்,*

இவ்வாறு அறியாமை வயப்பட்டு மயங்கும் ஆருயிர்களை அதனினின்றும் விடுவித்து அறிவுறுத்தற்பொருட்டு அவைதமக்குப் பல்வேறு உடம்புகளையும், பல்வேறு உலகங்களையும் படைத்துக் கொடுப்பானான **இறைவன்** ஒருவன் உளனா மென்பதூஉம், இவ்வாறு அவ்வுயிர்கள் உடம்புகளின் வழியாய் உலகங்களிலிருந்து தம் அறியாமை தேய இன்ப துன்பங்களை நுகருமிடத்து ஆண்டுத் தோன்றுவது **வினை**யாமென்பதூஉம், இவ்வினை நுகர்ச்சியானே அறியாமை முற்றுந் தேய்ந்து ஒழிந்தவழி ஆண்டு அவ் வுயிர்கள்மாட்டு முன் சுருங்கிக் கிடந்த இயற்கையறிவு விரிந்து விளங்க அதன்கண் **முதல்வன்** திருவருட் பேரொளி ஒற்றித்து நின்று துளும்புமாகலின் அதுவே வீடு பேறாகுமென்பதூஉம் பிறவும் . . . . அரிய பொருள்களாமென்க. எனவே இவையெல்லாம் 'பதி, பசு, பாசம்' என்னும் மூன்று சொற்கண்ணே அடங்கும்!"[2]

என இம்முப்பொருள்களைக் குறித்து மறைமலையடிகளார் விளக்குவர். சைவ சித்தாந்தத்தில் 'முடிந்த முடிபா'கக் கொள்ளப்படும் பொருள்கள் இம் மூன்றேயாம்! இவற்றுள், 'பதி' என்பது 'இறைவன்' அல்லது 'கடவுள்'. 'பசு' என்பது 'உயிர்' அல்லது 'ஆன்மா'. 'பாசம்' என்பது 'தளை' அல்லது 'கட்டு'. இவற்றைத் தமிழில் முறையே, "இறை, உயிர், தளை" என்று கூறலாம். சைவ சித்தாந்தக் கொள்கையின்படி இம்மூன்றும் தனித்தனிப் பொருள்கள். இவற்றிற்குத் தோற்றமும் இல்லை; முடிவும் இல்லை! எனவே இம்மூன்றும் 'அநாதி'. அஃதாவது ஆதியும் அந்தமும் இல்லாதவை என்பதாம்.

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றின்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி"[3]

எனும் திருமூலர் வாக்கால் இதனை உணரலாம்.

"பதி உண்டு; அன்றே பசுவும் பாசங்களும் உள்ளன" என்று கூறுவது கொண்டு, 'இம்முப்பொருள்களும் சமம்' என்று கருதுதல் கூடாது. பதியே முதற்பொருள்: இம்முப்பொருள்களை முறைப்படி உணர்வதே ஞானநூல்களின் முடிந்த முடிபை உணர்தல் ஆகும். இதனைப்

"பலகலைஆ கமவேதம் யாவையினும்
கருத்துப் பதிபசுபா சந்தெரித்தல்"[4]

எனும் சிவப்பிரகாசச் செய்யுளால் அறியலாம்.

இம்முப்பொருள்களுக்கு இடையே உள்ள தொடர்பு 'வியாபகவியாப்பிய வியாத்தித்' தொடர்பேயாகும். வியாபகம் - பெருநிறைவு; வியாப்பியம் - அதற்கு உள்ளடங்கிய நிறைவு; வியாத்தி - சம நிறைவு'.[5] இதனை மெய்கண்டார், 'கடல்நீர் உப்புப் போல' எனும் உவமை மூலம் விளக்குவர். கடல்வெளி போன்றது சிவத்தினது வியாபகம்; கடல்வெளியில் அடங்கியுள்ள நீர் போன்று சிவவியாபகத்தில் அடங்கியிருப்பது ஆன்மா. நீரைப் பற்றியிருக்கும் உப்பைப் போன்று அவ் ஆன்மாவைப் பற்றியிருப்பது பாசம். பதி - வியாபகம்; பசு, பாசங்கள் - வியாப்பியம்.[6]

> *"கடவுளைப் பற்றிய மிகச்சிறந்த மேலான கொள்கையைச் சித்தாந்தம் நமக்கு அளிக்கிறது . . . . . மிகச் சிறந்த தத்துவ ஞானத்தின் முடிவாகவும், மனிதன் வணங்கி மதிக்கும் உயர்ந்த தன்மையராயும் கடவுள் தோன்றுகிறார். மிகவுயர்ந்த அறிவும் அவரே. அவர்தான் 'சிவபெருமான்'. அவருக்கு இணையாகவோ, மேலாகவோ ஒருவரும் இல்லை!"*[7]

என்று கூறும் ர. இராமானுஜாசாரி கருத்தும் இவண் குறிக்கத்தகும்.

### முதல்வனே 'சிவன்'

"கடவுள். இறைவன், இயவுள், அம்மையப்பர், முதல்வன், ஆதி, தலைவன்" என்பது முழுமுதற்பரம்பொருளாம் சிவபெருமானையே குறிப்பன.

> *"உயிர்களது சுட்டறிவைக் கடந்து நிற்றலின் 'கடவுள்' எனப் பேசப்படுகின்றான். தானே எல்லாம் உணரும் இயற்கை முற்றுணர்வு உடையவன். பசு, பாசங்களைத் தன் வியாபகத்தில் அடங்கக் கொண்டு தொழிற்படுத்துகின்றவன். இவ்வாறு உயிர்களையும் உலகையும் இடமாகக் கொள்ளுதலினால் 'இறைவன்' எனக் கூறப்படுகிறான். இருத்தல் - தங்குதல். அவற்றைத் தொழிற்படுத்துதல்பற்றி 'இயவுள்' என உரைக்கப்படுகிறான். உயிர்க்கு உயிராய் நின்று, உயிர்களின் உணர்வைத் தடுத்து நிற்கும் பாசத்தடையை நீக்கி, அவற்றின் அறிவு செயல்களை விளக்கி .வளர்த்து வருதல் பற்றி 'அம்மையப்பர்' எனவும், உணர்வின் தமி (உயிர்களின் உணர்வுக்கு முதல்வன்) எனவும் கூறப்படுகின்றான்.*

*காணப்படும் எவ்வகைப் பொருளுக்கும் முற்பட்ட பொருளாய, அவையெல்லாவற்றுக்கும் முடிந்த சார்பாய் நின்று, அவற்றைத் தொழிற்படுத்துவோன் ஆதல்பற்றி 'முதல்வன்' எனவும், 'ஆதி' எனவும், 'தலைவன்' எனவும் ஓதப்படுகின்றான்"*[8]

என இச்சொற்களுக்கான காரணத்தைப் புலப்படுத்துவார் க.வச்சிரவேல் முதலியார்.

ஏனைமக்கட்குப் புலனாகாமல் 'அருவ நிலை'யில் நிற்கும் சிவபெருமான், மணிவாசகர்க்கோ கட்புலனாம் அருள் உருவில் தோன்றி அருள் செய்தார். இதனை மணிவாசகரே,

*"ஒய்வி லாதன உவமனில் இறந்தன*
*ஒண்மலர்த் தாள்தந்து*
*நாயி லாகிய குலத்தினும் கடைப்படும்*
*என்னைநன் னெறிகாட்டித்*
*தாயி லாகிய இன்னருள் புரிந்த,என்*
*தலைவனை"*[9]

என்று கூறுவதால் உணரலாம்.

தமக்குப் பேரருள் சுரந்த முதல்வனை, மணிவாசகர்,

*"நாதன், குருமணி, இறைவன், வேந்தன், பிஞ்ஞகன், ஈசன், சிவன், சைவன், சைவநாதன், சிவபெருமான், தில்லையுட்கூத்தன், கிழவோன், கடவுள், சங்கரன், மங்கைபங்கன்"*[10]

எனப் பல்வேறு சொற்களால் போற்றுகின்றார்.

## ஐந்தொழில்

சிவபரம்பொருள் செய்யும் அருட்செயல்களைப் பல்வேறு பாக்களில் எடுத்தியம்புகின்றார் மணிவாசகர்.

*"ஆக்கம் அளவிறுதி இல்லாய், அனைத்துலகும்*
*ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்!*
*போக்குவாய்!"*[11]

உலகினைத் தோற்றுவித்தல் முதலிய தொழில்களைச் செய்பவன் முதல்வன். எனவே, அவன் 'தோற்றம்' முதலாயின உடையவன் இல்லை. ஆதலின்,

*'ஆக்கம் அளவு இறுதி இல்லாய்'*

என்று ஏத்தினார். "ஆக்கம் தோன்றுதல் நிலை என்பது தோற்றக் கேடுகட்கு இடைப்பட்ட அளவின் மேலதாகையால் அதனை 'அளவு' என்றார். எனவே இறைவனாகிய சிவபரம்பொருட்குத் 'தோற்றம், நிலை, இறுதி' என்ற மூன்றும் இல்லை என்றார் ஆயிற்று".[12]

'சிவபரம்பொருளே உலகிற்கு முதல்வன்' என்பதனை, "அனைத்துலகும் ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய் போக்குவாய்" என்பதால் குறித்தார்.

இறைவன் செய்யும் தொழில்கள் ஐந்து. அவை: படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் என்பன. இவற்றுள் 'படைத்தல்' முதலிய நான்கையும் 'ஆக்குவாய்' முதலிய நான்காலும்; 'மறைத்தல்' என்பதைப் 'போக்குவாய்' என்பதனாலும் பெறவைத்தார்.

"மலத்தொடு கூடியவழித் திருவருளைக் காணாதபடி மறைத்தலும்; அருளொடு கூடியவழி மலத்தைக் காணாதபடி மறைத்தலும், மறைத்தலாகிய தொழிலாகும். 'யான் மலமாயை கன்மங்களொடு கூடி அவற்றாற் பெறப்படும் இன்ப துன்பங்களை நுகருமிடத்துத் திருவருள் நெறியாகிய திருவடித் தொண்டினை அறியாது மறைப்புண்டு போக்கப்பட்டேன்' என்பார், 'போக்குவாய்' என்றார்" என்பது ஔவை சு.துரைசாமி தரும் விளக்கம்.[13]

*"போற்றியெல் லாவுயிர்க்குந்* **தோற்றமாம்** *பொற்பாதம்*
*போற்றியெல் லாவுயிர்க்கும்* **போகமாம்** *பூங்கழல்கள்*
*போற்றியெல் லாவுயிர்க்கும்* **ஈறாம்** *இணையடிகள்*
*போற்றிமால் நான்முகனுங்* **காணாத** *புண்டரிகம்*
*போற்றியாம் உய்யஆட் கொண்ட***ருளும்** *பொன்மலர்கள்*
*போற்றியாம் மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய்"*[14]

என்னும் மணிவாசகர் மொழிந்த இத் திருவெம்பாவைப் பாடலில் இறைவனின் ஐந்தொழில்களும் சுட்டப்பட்டுள்ளன. 'தோற்றமாம்' என்பது 'படைத்தல்'; 'போகமாம்' என்பது 'காத்தல்'; 'ஈறாம்' என்பது 'அழித்தல்'; 'காணாத' என்பது 'மறைத்தல்'; 'அருளும்' என்பது 'அருளல்'.

*"விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்"*[15]

என்பதும் மணிவாசகர் வாக்கே!

இங்கே 'படைத்தல்' முதலாயின பற்றி ஒருசிறிது விளக்குதல் இன்றியமையாதது.

'படைத்தல்' என்றால் , 'உயிர்களைப்படைத்தல்' என்பதன்று. உயிர்கள் ஒரு காலத்தில் தோற்றுவிக்கப்பட்டவையல்ல. அவை என்றும் உள்ளவை. இறைவன் உள்ள அன்றே அவையும் உள்ளன. என்றுமுள்ள உயிர்களின் அறிவு வளர்ச்சிக்கு வேண்டிய உடம்பு, கருவிகள், உலகு, நுகர் பொருள்கள் ஆகியவற்றை 'மாயை' என்ற மூலப்பொருளிலிருந்து இறைவன் உண்டாக்கிக் கொடுக்கின்றான். சடமாகிய உடம்பு முதலியவற்றை உண்டாக்கிச் சித்தாகிய உயிரோடு பொருத்துதலே 'படைத்தல்' எனப்படும்.

உயிர்கள் தத்தம் வினைப்பயன்களை நுகர்தல் வேண்டி, அவற்றிற்குக் கொடுக்கப்பட்ட உடம்பு முதலியவற்றைக் குறித்த கால அளவுவரை நிற்கும்படிச் செய்கிறான். இது 'காத்தல்' எனப்படும்.

வினைப் பயன்களாகிய இன்ப துன்பங்களை மீண்டும் மீண்டும் நுகர்ந்த உயிர்கள் கொள்ளும் இளைப்பினை நீக்குதற்பொருட்டு, இறைவன், உடம்பு முதலியவற்றை உயிர்களிடமிருந்து நீக்கி மாயையில் அவற்றை ஒடுங்கும்படிச் செய்கிறான். இதுவே 'அழித்தல்' எனப்படும்.

ஐம்பொறி முதலிய மாயா கருவிகளால் உயிருக்குச் சிற்றறிவாகிய புலன் உணர்வை விளைவிக்கின்றான் இறைவன். இப்புலன் உணர்வு, உயிரை உலகப் பொருள்களோடு பிணித்து, அப்பொருள்களையே மேலும் மேலும் பெற்றுத் துய்க்கும்படியான நாட்டத்தைச் செய்கிறது; மேல் உள்ள அருளையும், அதனையுடைய இறைவனையும் உணரவொட்டாது செய்கிறது. இதனால் உயிர்கள் இறைவனை நோக்காது உலகையே நோக்கி நிற்கும். எனவே இஃது ஒருவகையில் 'மறைத்தல்' எனப்படும்.

உயிரைப் பிறப்பு இறப்புக்களில் செலுத்தி உழலச் செய்தலாகிய மறைத்தல் தொழிலின் பயனாய் அதனைப் பிணித்திருக்கும் ஆணவமலத்தின் சத்தி மெலிந்து, பிணிக்கும் வன்மையிழந்து நிற்கும். அந்நிலையில் அவ்வுயிர் உலகை நோக்காது இறைவனை நோக்கி நிற்கும். அத்தகைய உயிரை ஆட்கொண்டு திருவடியாகிய பேரின்பத்தை அளித்தலே 'அருளல்' எனப்படும். 'வீடு' என்பதும் இதுவேயாம்.

- இவ்வாறு ஆ. ஆனந்தராசன் விளக்குவார்[16]

இவ் ஐந்து தொழில்களில், 'மறைத்தல், அருளல்' எனும் இரண்டினையும் முன்னைய மூன்றனுள் அடக்கி, 'முத்தொழில்கள்' என மொழிவதும் உண்டு.[17]

மணிவாசகர், ஐந்தொழில்களைக் கூறினாரேனும்,

*"படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி"*[18]

என மூன்றாகவும் உரைப்பது இவண் எண்ணத்தகும்.

இனி, இவ்ஐந்து தொழில்களையும், 'மறைத்தல், அருளல்' எனும் இவ்விரண்டினுள் அடக்கி, முறையே, 'பந்தம், வீடு' என்று கூறுவதும் உண்டு. இறைவன், உயிர்கட்குப் பந்தமும் வீடும் அளிப்பவனாவான். இவற்றுள் 'வீடு' பெற்ற உயிர், இறைவனது எல்லையில்லாத இன்பத்துள் மூழ்கி நிற்றலன்றி, வேறொன்றும் உடையதாகாது. இதுவே அமைதிநிலை; முடிந்த பயனாயநிலை.[19]

*"பந்தமும் வீடும் படைப்போன் காண்க"*[20]

*"பந்தமுமாய் வீடும் ஆயினார்க்கு"*[21]

என்பர் மணிவாசகர்.

'படைத்தல், காத்தல், அழித்தல்' முதலாயின, முதல்வனுக்கு விளையாட்டுக்கள். யாதொரு குறிக்கோளுமின்றிப் பொழுதுபோக்காகச் சிறுவர்கள் விளையாடும் விளையாட்டுக்கள் போன்றவையல்ல. மிகப் பெரியதாகிய உலகத்தைப் படைத்துச் செயற்படுத்துவது மிகப் பெரிய தொழில்; எனினும் பேராற்றலுடைய பெரியோனாகிய முதல்வனுக்கு அஃது ஒரு விளையாட்டுப் போலச் சிறிதும் வருத்தமின்றி மிகமிக எளிதில் செய்வன் என்பதாம். இவ் விளையாட்டும், உயிர்கள்மீது கொண்ட அளப்பருங் கருணையினால் நிகழ்வதாம்.

இவ்வுண்மையை, மணிவாசகர் கூறும்

*"காத்தும் படைத்தும் கரந்தும்* ***விளையாடி****!"*
*"ஐயா !நீ ஆட்கொண்டருளும்* ***விளையாட்டின்***
*உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்"*[22]

என்னும் திருவாக்கால் உணரலாம்.

இதனை உட்கொண்டே சிவஞான சித்தியாரும்,

*"சொன்னஇத் தொழில்கள் என்ன காரணம் தோற்ற வென்னின்*
*முன்னவன் விளையாட் டென்று மொழிதலுமாம்!"*[23]

என்று கூறுவாராயினர்.

*"ஏற்ற இவை அரன்அருளின் திருவிளையாட் டாக"*[24]

எனச் சிவப்பிரகாசமும் கூறும்.

எனவே, இறைவன் செய்யும் இவ்விளையாட்டால், உயிர்கட்குப் பெரும் பயனே கிட்டும் என்பது தெளிவு.

இவற்றால், 'படைத்தல்' முதலான தொழில்களை அருளும் முதற்கடவுள் ஒருவன் உண்டு என்பதும்; அம்முதற்கடவுளே சிவபெருமான் என்பதும் தெளிவாகும். 'அயன், அரி, அரன்' என்னும் மூவரும், முதல்வன் ஆணை வழியே தொழில் செய்யும் 'அதிகார மூர்த்திகள்'; பிற தேவர்களும் அத்தகையினரே. இதனால், சிவபெருமானே 'ஆதி' எனப்படுவான்.

உலகத் தோற்றம் முதலானவற்றிற்கு 'ஆதி'யாகவுள்ள சிவபெருமான், தனக்கு 'ஆதியோ அந்தமோ' இல்லாதவனாவான். இதனை மணிவாசகர்,

*"ஆதியனே !"*
*"எவ்வுயிர்க்கும் தோற்றம் ஆகிநீ*
*தோற்றம் இல்லாய்! . . . .*
*எல்லாவுயிர்க்கும் ஈறாய் ஈ*
*றின்மை யானாய்!"*
*"ஆதியும் அந்தம் ஆயினாய்!"*
*"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி"*
*"ஆதியும் அந்தமும் ஆயினார்க்கு"*
*"தான் அந்தம் இல்லான்"*
*"ஈறும் ஆதியும் இல்லான்"*
*"ஆதிகுணம் ஒன்றும் இல்லான் அந்தம் இலான்"*
*"ஆதியே . . . . அந்தமே"*[25]

என்று பல்வேறிடங்களிலும் குறிப்பிடுவர்.

*"பிரமன் மால் காணாப் பெரியோன்"*
*"பிரமன்மால் அறியாப் பெற்றியோன்"*
*"வானநாடரும் அறியொணாத நீ"*
*"மாலறியா நான்முகனும் காணா மலை"*
*"செங்கண் நெடுமாலும் சென்றிடந்தும் காண்பரிய . . . பாதம்"*
*"மூவர்க்கும் முற்றுமாய்"*
*"அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்*
*தெரிக்கும் படித்தன்றி நின்ற சிவம்"*[26]

எனப் பல்லாற்றானும் கூறுவது கொண்டு, சிவபெருமானே ஏனைத் தேவர்கட்கெல்லாம் தேவாதி தேவனாக விளங்குபவன் எனலாம்.

மணிவாசகர் மொழியும் இக்கருத்துக்களை உட்கொண்டே அருளாளர் மெய்கண்டாரும், தம் 'சிவஞானபோதம்' ஏனும் ஒப்புயர்வில்லாச் சைவ சித்தாந்தச் சாத்திரநூலில்,

*"அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்"*[27]

என்று திருவாய் மலர்ந்தருளினார்.

பிரமன், மால், உருத்திரன் ஆகிய மூவரையும் 'மும்மூர்த்திகள்' என்பர். அவர்கள் சிவபெருமானது ஆணைவழி நின்று, முறையே 'படைத்தல், காத்தல், அழித்தல்' ஆகிய தொழில்களை ஓர் எல்லையளவில் செய்வர். இவருள் 'உருத்திரன்', தான் செய்த புண்ணியத்தால் சிவனுக்குரிய உருவத்தையும், தொழிலையும், அவனது சங்காரத் தொழிலை ஒரு பகுதியளவில் மட்டும் செய்வான். இம்மூவரும் ஒவ்வொரு தொழிலுக்கே உரியவராகச், சிவபெருமான் ஒருவனே முத்தொழிலுக்கும் முதல்வனாய் நின்று இறுதிக்காலத்தில் எல்லாவற்றையும் எஞ்சாமல் ஒடுக்குகின்ற முற்றழிப்பைச் செய்வான். முற்றழிப்பு, 'மகாசங்காரம்' எனப்படும். அதனைச் செய்யும் முதல்வனுக்கு 'மகாசங்காரகாரணன்' என்ற பெயரும் உண்டு.

*"சங்கார காரணனாய் உள்ள முதலையே முதலாக*
*உடைத்து இவ்வுலகம்"*

என்பது சிவஞானபோதத்து இந்நூற்பாவின் பொதுக் கருத்து.

"இவ்உலகம் ஒரு தொகுதிப் பொருள். 'ஒருவன், ஒருத்தி, ஒன்று' என்பவற்றின் கூட்டமே உலகம்; சுட்டி அறியப்படுவது. இது, 'தோன்றுதல்' முதலான முத்தொழில் உடையது. அறிவற்ற இவ்வுலகம், தானே தோன்றி நின்று அழிவதில்லை. அதற்கென முதல்வன் ஒருவன் உளன். அவனே 'சங்கார காரணன்' எனப்படும் முதல்வன். ஒடுக்கிய அவனே இவ்வுலகை மீளத் தோற்றுவிப்பான்" என்பது நூற்பா நுவலும் பொருள்.

ஆனால் இக்கருத்தை 'உலகாயதர், மீமாஞ்சகர்' போன்றோர் மறுப்பர்.[28]

சிவஞானபோதத்திற்குப் 'பாடியம்' என்னும் பேருரை கண்ட சிவஞானமுனிவர், அவர்கள் கூற்றையெல்லாம் காரண காரியங்காட்டி மறுத்துச் சைவ சித்தாந்த மெய்ப்பொருளை நிலைநாட்டுவர்.

மணிவாசகப் பெருமான், பிற சமயவாதிகளின் வலைக்குள் அகப்பட்டுத் தடுமாறாவண்ணம், சிவபெருமான் நன்னெறி காட்டித் தம்மை ஆட்கொண்டான் என்பதைக் கூறும் பகுதிகள் இங்கு நினைவுகூரத்தகுவன.

*"சமய வாதிகள் தத்தம் மதங்களே*
*அமைவ தாக அரற்றி மலைந்தனர்!*
*மிண்டிய மாயா வாதம் என்னும்*
*சண்ட மாருதம் சுழித்தடித்து ஆஅர்த்து*
*உலோகா யதன்எனும் ஒண்திறல் பாம்பின்*
*கலாபே தத்த கடுவிடம் எய்தி*
*அதில்பெரு மாயை எனைப்பல சூழவும் . . .*
*மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது . . .*
*தாயே ஆகி வளர்த்தனை!"*

*"அத்தேவர் தேவர் அவர்தேவர் என்றிங்ஙன்*
*பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே"*

*"மற்றுமோர் தெய்வந் தன்னை உண்டென*
*நினைந்தெம் பெம்மாற்*
*கற்றிலா தவரைக் கண்டால் அம்மநாம்*
*அஞ்சு மாறே!"*[29]

இதனைக் கருத்திற்கொண்டே, மெய்கண்டாரும்,

*"தம்மை உணர்ந்து தமைஉடைய தன்உணர்வார்*
*எம்மை உடைமை எமைஇகழார் - தம்மை*
*உணரார் உணரார்; உடங்கியைந்து தம்மிற்*
*புணராமை கேளாம் புறன்"*[30]

என்று 'அவையடக்கம்' கூறினாராதல் வேண்டும்.

*"முன்னிரண்டு அடிகளில் சித்தாந்த சைவத்தில் நின்ற தலைமக்களின் உயர்வைப் புலப்படுத்திய ஆசிரியர், பின்னிரண்டடிகளில் ஏனைச் சமயவாதிகளின் நிலையை வெளிப்படுத்துகின்றார்; 'தம்மை உணரார்' என அவர்களைச் சுட்டுகின்றார். தம்மியல்பை முற்ற உணராமல் ஒருபகுதியே உணர்ந்தவர் என்பது பொருளாகும். 'தம்மை உணர்ந்து' என்றதனால் சித்தாந்த சைவரே தம்மியல்பை முற்ற உணர்ந்தவர் என்பதைப் பெறவைத்தார். அவரல்லாத பிற*

*சமயத்தாரையெல்லாம் 'தம்மை உணரார்' என்ற சிறிய தொடரில் அடக்கி வைத்தார்!"*[31]

என ஆ. ஆனந்தராசன் தரும் விளக்கம் இவண் ஒப்புநோக்கத்தகும்.

"சிவபெருமானே, ஊழிக்காலத்தில், 'சங்காரகாரணனா'க விளங்கித் தான் ஒருவனாகப் பெருவெளியாம் சுடுகாட்டில் கூத்தாடி, எங்கும் நீக்கமற நிறைந்து விளங்குபவன்" என்னும் பொருளில்,

*". . . . . . . . . . . . எம்பிரான்*
*கழுதொடு காட்டிடை நாடக*
*மாடிக் கதியிலியாய்*
*உழுவையின் தோலுடுத் துன்மத்தம்*
*மேல்கொண் டுழிதருமே!"*[32]

என்றும்; "பேரூழிக் காலத்தும் மாற்றமின்றி ஏற்றமுற நிற்கும் நன்மணியாகிய சிவபெருமான்" என்ற பொருளில்,

*"ஊழிமுதற் சிந்தாத நன்மணி"*[33]

என்றும், "பேரூழியின் தலைவனாய் அழிவில்லாமல் நிற்கும் ஒப்பற்றவன்" என்ற பொருளில்,

*"ஊழி முதல்வனாய் நின்ற* ***ஒருவன்****"*[34]

என்றும், அடிகள் அருளியன எண்ணியே, மெய்கண்டார்,

*"இலயித்த தன்னில் இலயித்தது ஆம்"*[35]

என எடுத்துக்காட்டில் கூறினார். இலயித்தல் - ஒடுங்குதல்; இலயித்தது - ஒடுங்கிய உலகம்; இலயித்த தன்னில் ஆம் - ஒடுங்குதற்கு இடமாயிருந்த சங்காரக் கடவுளிடத்திலிருந்து மீளத் தோன்றும்.

*"உலகவன் உருவிற் றோன்றி ஒடுங்கிடும்"*[36]

என்னும் சித்தியார் வாக்கும் ஒப்புநோக்கத்தகும்.

*"தாங்கரும் காலம் தவிர வந்திருவர்*
*தம்மொடுங் கூடினார் அங்கம்*
*பாங்கினால் தரித்துப் பண்டுபோல் எல்லாம்*
*பண்ணிய கண்ணுதற் பரமர்"*[37]

எனும் சம்பந்தர் திருவாக்கும், ஊழிக்காலத்தே நின்றாடும் பரமன், மீண்டும் உலகங்களைப் படைத்தளிப்பவன் என்கிறது.

மணிவாசகர், இறைவனை, **'ஏகன்'**, **'ஒருவன்'**; 'உரையுணர்வு இறந்த **ஒருவ**' என்றெல்லாம் ஏத்துவர்.[38]

இதனை மெய்கண்டார்,

*"ஒன்றலா ஒன்று"*[39]

என்னும் தொடரால் சுட்டுவர்.

**பொதுவியல்பும், சிறப்பியல்பும்!**

ஒரு பொருளுக்குப் 'பொது இயல்பு' என்றும், 'சிறப்பு இயல்பு' என்றும் இரண்டு இயல்புகள் உண்டு.

> *"ஒரு பொருட்கு இயற்கையாய் அதனைவிட்டு ஒருகாலும் நீங்காது நிற்பது 'சிறப்பியல்பு'; அவ்வாறன்றி, ஒரு பொருட்கு இயற்கையாய் இல்லாது செயற்கையாய்ச் சிறிது காலம் அதனைப் பற்றியிருந்து பின்பு நீங்கிப் போகின்ற இயல்பு 'பொதுவியல்பு'. இச் 'சிறப்பியல்பு' 'பொதுவியல்பு' என்பன வடமொழியில் சொல்லப்படுகின்ற 'சொரூபம், தடத்தம்' என்னும் சொற்களுக்கு நேரானவையாகச் சைவ சித்தாந்தத்தில் கொள்ளப்படுகின்றன"*[40]

'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களில், 'பதி' ஏனையவற்றைவிடப் பேராற்றல் வாய்ந்தது; சுதந்திரம் உடையது. பசுவும் பாசமும் சுதந்திரத் தன்மையின்றிப் பதியின் விருப்பப்படி செயற்படுவனவாம்; மேலும் 'பசு'வும் 'பாசமு'ம் மற்றொன்றின் சார்பினால் தன்மையில் மாறுபடும். 'பதி'யோ அங்ஙனம் எந்தப் பொருளின் சார்பினாலும் மாறுபடாமல் என்றும் ஒரே தன்மையதாய் இருக்கும். எனவே பிறிதொரு பொருளின் சார்பினால் மாறுபடாத தன்மையையுடைய 'பதி'யிடம் பிறிதொன்றை நோக்காது தன்னையே தான் நோக்கி நிற்கும் நிலையில் காணப்படும் இயல்புகளே 'பதி'யின் 'சோரூப இலக்கணம்' அல்லது 'சிறப்பியல்பு' எனப்படும். 'பதி' உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் காணப்பெறும் இயல்புகள் 'தடத்த இலக்கணம்' அல்லது 'பொதுவியல்பு' எனப்படும்.

சைவ சித்தாந்தம், "எவ்வித மாற்றமும் அடையாமல் என்றும் ஒருதன்மைத்தாய் நிற்கும் பொருளையே 'சத்து' என்று கொள்ளும். அவ்விலக்கணப்படி நோக்கினால், 'பதி'ப் பொருளாகிய 'இறை' ஒன்றே 'சத்து' எனப்படுதற்கு உரியது.

'சத்து' என்பதைத் தமிழ் நூல்கள் 'மெய்ப்பொருள்' என்று குறிப்பிடும். எனவே 'அசத்து' 'பொய்ப்பொருள்' எனப்படும். மெய் - நிலைபேறு; ஒருதன்மைத்தாய் நிலைபெற்றுள்ள பொருள் ஆதலின் 'சத்து' மெய்ப்பொருள் எனப்பட்டது; தோன்றி அழியும் பொருள் 'அசத்து' எனப்பட்டது.[41]

இதனை மணிவாசகர்,

"**பொய்யா** *யினவெல்லாம் போயகல வந்தருளி*
*மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற* **மெய்ச்**சுடரே"[42]

என்பதால் சுட்டுவர்.

சிவம், சத்தாய் உள்ளது; சித்தாயும் உள்ளது. இவ்வாறு சத்தாயும் சித்தாயும் நிற்றலே 'பதி'யின் உண்மை இயல்பாகிய 'சொரூப இலக்கணம்' ஆகும்.

சத்தும், சித்தும் ஆகிய இவ்விரண்டோடு 'ஆனந்தம்' என்பதனையும் சேர்த்து, இறைமைக் குணங்கள் மூன்று என உபநிடதங்கள் கூறும்.[43]

இவற்றை எட்டாக விரித்துக் கூறுவது சிவநெறி வழக்காகும். அவையாவன :

1. தன்வயத்தன் ஆதல்;
2. தூயஉடம்பினன் ஆதல்;
3. இயற்கை உணர்வினன் ஆதல்;
4. முற்றும் உணர்தல்;
5. இயல்பாகவே பாசங்கள் இன்மை;
6. முடிவிலா ஆற்றல் உடைமை;
7. பேரருள் உடைமை;
8. வரம்பிலா இன்பம் உடைமை.

**(1) தவ்வயத்தன் ஆதல் :** இது, வடமொழியில் 'சுதந்திரத்துவம்' எனப்படும். எவ்விடத்தும் தலைவனாய் இருப்பவனே, பிறரால் வழிபடத் தகுந்தவன். அப்போதுதான் அவன், தாம் விரும்பியவாறு செய்தல் கூடும். முதல்வனாகிய சிவபெருமான், இத்தகைய தலைமைத் தன்மையுடையவன்.

மணிவாசகர், பின்வரும் தொடர்களால், சிவபெருமானின் தலைமைத் தன்மையைச் சுட்டுகின்றார் :

"*சொல்லற் கரியான்*"

"*எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத்*
*தானே யாகிய தயாபரன்*"

*"பிரமன்மால் காணாப் பெரியோன்"*

*"நான்முகன் முதலா வானவர் தொழுதெழ"*

*"தேவ தேவன் . . . .*
*மூவராலும் அறியொணா முதலாய*
*ஆனந்த மூர்த்தியான்"*[44]

(2) **தூயஉடம்பினன் ஆதல் :** இது, வடமொழியில் 'விசுத்த தேகம்' எனப்படும். இறைவன் தன்வயத்தால் செய்யும் செயல்கள் யாவற்றையும் உடம்பின்றியே செய்யக்கூடுமாயினும், பிறர்பொருட்டுச் சிலவற்றை உடம்பொடு செய்யவேண்டியவனாகின்றான். உடம்புடையவனாக நிற்பது இறைவனுக்குப் பொதுவியல்பாயினும், அந்த உடம்பு உயிர்களின் உடம்பு அவற்றின் வேறாதல்போல, அவனின் வேறாதலின்றி ஒன்றேயாகும் என்பது கருத்தாதலின் உண்மை இயல்பாயிற்று.[45]

*"ஏறுடை யீசனிப் புவனியை உய்யக்*
*கூறுடை மங்கையும் தானும்வந் தருளி"*[46]

எனும் மணிவாசகர் திருவாக்கால் இதனை உணரலாம்.

(3) **இயற்கை உணர்வினன் ஆதல் :** இதனை வடமொழியில் 'அநாதிபோதம்' என்பர். தன்வயத்தனாயும், தூயஉடம்பினனாயும் நிற்கும் இறைவனது அறிவு தானே விளங்குந் தன்மையது. எனவே அவனே உண்மைத் தலைவன். அனைத்தையும் தன் சங்கற்பத்தினாலேயே செய்பவன். எனவே இயற்கை உணர்விணனாகச் செயற்படுகின்றான் என்பதாம்.

இதனை மணிவாசகர்,

*"மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!"*[47]

என்பதால் சுட்டுவர்.

(4) **முற்றும் உணர்தல் :** இதனை வடமொழியில் 'சர்வஞ்ஞதை' என்பர். இறைவன், அனைத்தையும் ஏககாலத்தில் தானாகவே உணர்பவன். நூல்களாலும் உணரப்படா உணர்வுடையவன் அவன்.

*"நூலுணர் வுணரா நுண்ணியோன்"*[48]

என்று மணிவாசகர் கூறுவது கொண்டு இதனை உணரலாம்.

(5) **இயல்பாகவே பாசங்கள் இன்மை :** இது, வடமொழியில் 'நிராமயம்' எனப்படும். இயற்கையாக விளங்குவதும், எல்லாவற்றையும் ஒருங்கே உணர்வதுமான இறைவனது அறிவு, பாசத்திற்கு மறுதலையாய

நுண்ணிய தன்மை உடையது. இறைவனது அறிவைப் 'பாசம்' எவ்வாற்றானும் மறைக்க முடியாது! பாசப்பற்றையே அடியோடு அறுக்கும் இறைவனிடத்துப் 'பாசம்' பொருந்துதல் யாண்டும் இல்லை. இதனை மணிவாசகர்,

*"பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே"*[49]

என்னும் கூற்றால் அறியமுடிகின்றது.

(6) **முடிவிலா ஆற்றல் உடைமை :** இது, வடமொழியில் 'அநந்த சக்தி' எனப்படும். இறைவனது ஆற்றல் அளவிறந்தது; எல்லையற்றது.

*"வேதங்கள், ஐயாஎனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே"*

*"எண்ணிறந்து எல்லை இலாதானே"*

*"இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்*
*சிறிய வாகப் பெரியோன்"*

*"ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த*
*இன்பமே"*[50]

என்பன போல் வரும் திருவாசகத் தொடர்கள், இறைவனின் முடிவிலா ஆற்றலைக் குறிப்பன.

(7) **பேரருள் உடைமை :** இதற்கு வடமொழியில் 'அலுப்த சக்தி' என்று பெயர். இறைவன் பேரருள் உடைமையால், எல்லா உயிர்களிடத்தும் எஞ்ஞான்றும் குறையாத, கைம்மாறற்ற பெருங்கருணை அவன்பால் உண்டு எனலாம்.

*"பெருங்கருணைப் பேராறு"*

*"தாயிற் சிறந்த தயாவான தத்துவனே"*

*"பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்*
*பரிந்து"*

*"அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே"*[51]

எனவரும் திருவாசகப் பகுதிகள், இறைவனின் பேரருட்டிறத்தைப் புலப்படுத்துவன.

(8) **வரம்பிலா இன்பம் உடைமை :** இது, வடமொழியில் 'திருப்தி' எனப்படும். இறைவன், எவ்வாற்றானும் யாதொரு குறையும் இல்லாதவன் என்பது பொருள்.

*"இருள்கடிந்து அருளிய இன்ப ஊர்தி"*[52]

என்பது மணிவாசகர் வாக்கு.

இவ்வாறு எண்குணங்களையுடையவன் இறைவன் ஆதலால் அவனே எல்லாப் பொருளினும் 'பெரும் பொருள்' ஆனான்.

*"பார்க்கும்இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற*
*பரிபூர ணானந்தமே!"*[53]

எனும் தாயுமானவர் பாடல் இவண் உன்னத்தக்கது. இப்பொருளே 'சிவபெருமான்'!

*"கோளில் பொறியிற் குணமிலவே* **யெண்குணத்தான்**
*றாளை வணங்காத் தலை"*

என வள்ளுவர் மொழிந்ததும், இதற்குப் பரிமேலழகர்,

*"எண்குணங்களாவன : தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது"*[54]

என விளக்கமளித்ததும் இவண் ஒப்புநோக்கத்தகும்.

இவற்றையெல்லாம் உள்ளடக்கி விளங்குவது,

*". . . . வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற*
*அதுவே* **சத்தாய் உள்ள சிவம்** *என்று உணரற்பாற்று"*[55]

எனும் மெய்கண்டார் அருளிய திருவாக்கு.

இறைவனுக்குரிய இயல்புகள் இரண்டனுள், 'பொதுவியல்பா'வது உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் எய்தும் இயல்பேயாகும். அஃதாவது இறைவன், 'அருவம், அருவுருவம், உருவம்' ஆகிய நிலைகளைக் கொள்ளுதலும், ஐந்தொழில் செய்தலுமாம்.

தனது உண்மை இயல்பாகிய 'சொரூபநிலை'யில் தனக்கென ஓர் உருவும், பெயரும், தொழிலும் இல்லாத இறைவன், உலகை நோக்கித் தடத்தநிலையில் உயிர்களின் பொருட்டுப் பலப்பல உருவும் பெயரும் தொழிலும் உடையவனாகின்றான்.[56]

தடத்தநிலையில் இறைவன் செய்யும் ஐந்தொழில்கள் பற்றிய விளக்கம் முன்பே தரப்பட்டுள்ளது.

*"ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க் காயிரம்*
*திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ"*[57]

என மணிவாசகர் மொழிந்தது, தடத்தநிலையில் உயிர்களின் பொருட்டுக் கொள்ளும் இறைவனின் நிலையாகும்.

தன்னையே நோக்கி நிற்கும் 'பரசிவம்' அந்நிலையினின்றும் நீங்கி, உலகத்தை நோக்குங்கால் தனது பெருங்கருணை காரணமாக, உயிர்களின்பொருட்டுத் தானே தன் விருப்பத்தால் தன் ஆற்றலை (சத்தியை)க் கொண்டு பல்வேறு நிலைகளைக் கொள்ளும். இந் நிலைகளே 'பதி'யின் 'தடத்த நிலைகள்' எனப்படும். எனவே 'சொரூபநிலை'யில் பதி 'சிவம்' என்றும், 'தடத்தநிலை'யில் 'சத்தி' என்றும் சொல்லப்படும். இச் 'சத்தி' செயற்படும் தடத்தநிலையில், சிவம், அதனோடு அச் செயல்களையெல்லாம் உடனியைந்து இயற்றி நிற்றலால், சிவமும் சத்தியுமாய் - அம்மையப்பனாய் - உமைபாகனாய்த் தோற்றம் அளிக்கும்.

தடத்தநிலையில் 'பதி', சத்தியினால் பல நிலைகளை உடையது. அந்நிலையில் அதற்கு உருவம் உண்டு; தொழில் உண்டு; அவற்றிற்கு ஏற்பப் பலப்பல பெயர்களும் உண்டு. இவையனைத்தும் இறைவன், தன் பெருங்கருணை காரணமாகக் கொள்ளுவனவாம்.[58]

உயிர்களைப் பிணித்துள்ள பாசக்கட்டினை நீக்கிப் பேரின்பத்தை வழங்கவேண்டும் என்று இறைவனுக்கு என்றும் இருப்பது; அவ் இரக்கமே 'சத்தி' எனப்படும். அருளாகிய 'சத்தி'யும் அவனின்றித் தனித்தில்லை; அவனும் அச்'சத்தி'யின்றித் தனித்து நிற்றல் இல்லை. சூரியன் தன் ஒளியோடு வேற்றுமையின்றி இயைந்து நிற்றல் போல, இறைவனும் தன் அருளோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பான். ஞானக்கண்ணைப் பெற்றவர்கட்கு இது விளங்கும்.

*"அருள்உண்டாம் ஈசற்கு. அதுசத்தி அன்றே;*
*அருளும் அவனன்றி இல்லை - அருளின்(று)*
*அவன்அன்றே இல்லை; அருட்கண்ணார் கண்ணுக்(கு)*
*இரவிபோல் நிற்குமரன் ஏய்ந்து"*[59]

என்பது சிவஞானபோதத்தில் வரும் வெண்பாவாகும். இதில் வரும் 'அருள்' 'சத்தி' என்பன, இறைவனது மறைப்பாற்றலைக் குறிக்கும். இதனை வடமொழியில் 'திரோதானசத்தி' என்பர்.

முதல்வனது சத்தி, மறைப்பாற்றலாய் நின்று, உயிர்களது அறிவை ஒருகாலைக் கொருகால் ஆக்கமாகிய முறையில் வேறுபடுத்தி வளர்த்து வரும்.

"பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை"

"மாதிற் கூறுடை மாப்பெருங் **கருணையன்**"

"அவளும் தானும் உடனே காண்க"

"வாரே றிளமென் முலையாளோ டுடன்வந்தருள"

"மங்கைதன் பங்கொடும்வந் தாண்டதிறம்"[60]

எனவரும் திருவாசகத் தொடர்களால் மேற்கண்ட கருத்துப் புலனாதல் தெளிவு.

தனது உண்மைநிலையில் யாதொரு வடிவமும் இல்லாதிருக்கின்ற சிவன், உயிர்கள் படிமுறையால் தன்னை உணர்ந்து, உய்தல் வேண்டும் என்னும் பெருங்கருணையினாலே, 'தூலம், சூக்குமம், அதிசூக்குமம்' ஆகிய மூவகைத் திருமேனிகளைக் கொள்வன். அவை முறையே, 'உருவம், அருஉருவம், அருவம்' எனப்படும்.[61]

அருவம் - கண்ணுக்குப் புலனாகாதது. அருவம், சத்தி வடிவமாய் இருந்தே செயல்களைச் செய்வது. அருவுருவம் - ஒருகால் புலனாகியும், புலனாகாமலும் இருப்பது. இஃது ஒளி வடிவம். இது, கண்ணிற்குப் புலனாகும் பொழுதும் முகம், கை, கால் முதலிய உறுப்புக்களின்றிப் பிழம்பு மாத்திரமாய் இருப்பது. 'இலிங்கம்' இதனையே குறிக்கும். உருவம் - கண்ணிற்குப் புலனாவது; முகம் முதலிய உறுப்புக்களுடன் விளங்கும்.[62]

சிவபெருமானின் திருமேனியைக் கண்ணாற் கண்டுகண்டு பேரானந்தத்தில் மூழ்கித் திளைத்தவர் மணிவாசகப் பெருமான். ஆதலின் பாடல்தோறும் பரமனின் காட்சியைப் பலவாறாகப் போற்றுவார். இங்கே சில தரப்படுகின்றன :

"வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி
ஏறுடை யீசன்இப் புவனியை உய்யக்
கூறுடை மங்கையும் தானும்வந் தருளி"

"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையு முடைத் தொன்மைக்
கோலமும்"

"**அருவாய் உருவமும்** ஆயபிரான்"

*"கொல்புலித் தோல் நல்லாடை தாயுமிலி"*

*". . . . . எந்தாய்! உன்றன்*
*வண்ணந்தான் அதுகாட்டி* **வடிவு** *காட்டி*
*மலர்க்கழல்கள் அவைகாட்டி"*

*"மருவார் மலர்க்குழல் மாதினொடும் வந்தருளி"*[63]

மணிவாசகர் மொழியும் இறைவனின் 'அருவம்', 'உருவம்' ஆகியனபற்றியும், 'அருவுருவம்' பற்றியும் சித்தியார் பின்வருமாறு பகரும் :

*"அருவமோ வுருவா ரூப மானதோ வன்றி நின்ற*
*உருவமோ வுரைக்குங் கர்த்தா வடிவெனக் குணர்த்திங்*
*கென்னின்*
*அருவமு முருவா ரூப மானது மன்றி நின்ற*
*உருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ள வாமே"*[64]

"ஐந்தொழில் செய்யும் கர்த்தாவின் வடிவமானது, அருவாகிய வடிவமோ, அருவுருவாகிய வடிவமோ, அவ்விரண்டும் ஆகாது நின்ற உருவாகிய வடிவமோ என்னின், அருவமும் அருவுருவமும் அவ்விரண்டுமன்றி நின்ற உருவமும் ஆகிய இம்மூன்றும் சங்கார காரணனாகிய முதல்வன் ஒருவனுக்கு உள்ள தடத்த வடிவங்களாம்" என்பது இதன் பொருள்.

ஆன்மா, முற்பிறப்புக்களில் செய்து வந்த சிவவழிபாடாகிய தவத்தின் பயனாய், இதுவரை உயிர்க்குயிராய் மறைந்து நின்று அறிவைத் தந்த முதல்வன், பின்பு குருவடிவம் கொண்டு நேரே எழுந்தருளி வந்து அருள் புரிவன்.

இத்தகைய பெருநிலை மணிவாசகப் பிரானுக்கு வாய்த்தது. இறைவன், மணிவாசகருக்காக, 'வான் பழித்து இம்மண் புகுந்து' குருவாக எழுந்தருளி அவரை ஆட்கொண்ட வள்ளல்.

குதிரை வாங்கச் சென்ற மணிவாசகரை இறைவன் குருந்த மரத்தடியில் குருவாக அமர்ந்திருந்து ஆட்கொண்ட திறம், முன்னரே குறிக்கப்பட்டுள்ளது.

*"ஈர்த்துஎன்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே!"*

*"அந்தமில் பெருமை அழலுருக் கரந்து*
*சுந்தர வேடத் தொருமுதல் உருவுகொண்*
*டிந்திர ஞாலம் போலவந் தருளி"*

*"தடக்கையின் நெல்லிக் கனிஎனக் காயினன்"*

*"அருபரத் தொருவன் அவனியில் வந்து*
*குருபரன் ஆகி அருளிய பெருமை"*

*"வாவாவென் றென்னையும்பூ தலத்தேவலித் தாண்டு*
*கொண்டான்"*

*"புலைய னேனையும் பொருளென நினைந்துன்*
*அருள்புரிந்தனை"[65]*

எனும் திருவாக்கும் ஈண்டு எண்ணத்தக்கன.

*"மணிவாசகப் பெருந்தகையார், அனைத்தையும் 'பொய்' என்று ஒதுக்கிய காரணத்தால், ஞானமே உருவாய், உயிரின் உள்ளேயே இடையீடின்றிக் கலந்திருக்கும் முதன்மைப் பொருளே தம்மை உணர்த்த முற்பட்டு வெளிவந்து விடுகிறது. 'அனைத்தும் பொய்' என்ற நிலையில், உலக ஊஞ்சல் கயிறு அற்றதும், தாயாய் நின்ற பரம்பொருள்,* **குருவாக** *வெளிப்பட்டுத் தன்னையும் ஆன்மாவையும் உணர்த்த முற்பட்டது. இவ்வகையில், மணிவாசகப் பெருந்தகையின் உள்நின்றுணர்த்திவந்த பரம்பொருளே, வெளிப்பட்டுத் தோன்றி, மணிவாசகப் பெருந்தகைக்கு உரிய 'குரு'வென வந்து நின்றருளுவாராயினர்"[66]*

என்று கூறும் வை. இரத்தின சபாபதியின் கூற்றும் இங்குக் குறிக்கத்தக்கது.

*"திருப்பெருந்துறையில் 'குரு'வாக எழுந்தருளிய இறைவனைக் கண்டதுமே, மணிவாசகர் 'தன்னை உணர்தல்' எனும் நிலை பெற்றார்"[67]*

என்பர் இராதா தியாகராசன்.

மணிவாசகப் பெருந்தகைக்காக எல்லாம்வல்ல முழுமுதற் பரம்பொருளாகிய சிவபெருமானே குதிரைச் சேவகனாக எழுந்தருளினன் என்னும் வரலாறு முன்பும் சுட்டப்பட்டது.

*"மதுரைப் பெருநன் மாநகர் இருந்து*
*குதிரைச் சேவகன் ஆகிய கொள்கை"*

*". . . . சீரார் பெருந்துறையான்*
*பந்தம் பறியப் பரிமேற் கொண்டான்"*

*"மாவார ஏறி மதுரைநகர் புகுந்தருளித்*
*தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையான்"*

*"பரியின் மேல்வந்த வள்ளல்"*[68]

இறைவன், குதிரைச் சேவகனாக வந்தது வியப்பன்று; மணிவாசகருக்காகப் பிட்டுக்கு மண் சுமந்தான்; பிரம்படியும் பட்டான் என்பது உலக வரலாற்றில் காணமுடியாத விந்தை. இதனை மணிவாசகரே நினைந்து நினைந்து ஏத்துகின்றார். அத்தகு இடங்களிற் சில வருமாறு :

*"பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்"*

*"பிட்டு நேர்பட மண்சு மந்த*
*பெருந்து றைப்பெரும் பித்தனே!"*[69]

என்று பாடும் மணிவாசகர்,

*"பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்*
*பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்*
*விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்*
*கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை*
*மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு*
*புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்!"*[70]

என, ஓதுவார் நெஞ்சமும் நெக்குருகப் போற்றுகின்றார்.

மணிவாசகப் பெருந்தகையின் இத்தகைய அருள்வாக்கினை உட்கொண்டே மெய்கண்டாரும்.

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் **குருவுமாய்த்** தவத்தினி லுணர்த்தவிட்(டு)*
*அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே"*[71]

என அருளிச்செய்தனர் போலும்.

*"ஆன்மாக்கள் முற்பிறப்புக்களில் செய்த புண்ணியத்தின் பயனாக, இப்பிறப்பில் இதுகாறும் உயிர்க்குயிராய் நின்று அறிவைத் தந்துவந்த முதல்வன், இப்பொழுது* **குருவடிவம் கொண்டு நேரே எழுந்தருளி,** *'அனைத்துலகிற்கும் அரசனாகிய, என் மகனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடரிடத்து அகப்பட்டு, வளர்ந்தமையால் உனது உயர்வை நீ அறியாது மயங்கி இடர்ப்படுகின்றாய்' என்று அறிவிக்க, அதனை அறிந்த*

*ஆன்மா அப்பொழுதே அந்த வேடரை விட்டு நீங்கி, முதல்வன் தனக்கு வேறாய் நில்லாது, தன்னோடு* **உடனாகியே** *இருத்தலால், அதனை உணர்ந்து அவனது திருவடியை அடைந்துவிடும்"*[72]

என்பது இதன் பொருள்.

இதனையே அருணந்தி சிவாசாரியார், தமது 'சித்தியாரி'ல்,

*"மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி*
*வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்*
*பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப்*
*பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோற்*
*றுன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத்*
*துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை*
*மன்னுமருட்* **குருவாகி** *வந்தவரி னீக்கி*
*மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்"*[73]

என விளக்கமாக உரைப்பர்.

முதல்வன், 'ஒருவாற்றான் அறியப்படாமையும், ஒருவாற்றான் அறியப்படுதலும் உடையவன்'; 'அதனால் அவன் சிவமாகிய சத்தாய் உள்ளான்'. ஒருவாற்றான் அறியப்படாமையாவது, 'பாச ஞானம், பசு ஞானம்' இவற்றால் அறியப்படாமை என்பது பொருள்; ஒருவாற்றான் அறியப்படுதலாவது, 'பதிஞானத்தால் மட்டுமே அறியப்படுதல்' என்பது பொருள். பாசஞானம், பசுஞானம் இவற்றால் அறியப்படாமையால், 'சித்தாயு'ம் பதிஞானத்தால் அறியப்படுதலின் 'சத்தாயு'ம் விளங்கும் முதல்வன் 'சிவசத்து' எனப்படுவன்.

*"சித்து, சத்து என்னும் இரு தன்மைகளையும் ஒருங்கு உடைமையே பதிக்குச் 'சிறப்பு இயல்பு', அல்லது 'சொரூப இலக்கணம்'"*[74]

'சரியை, கிரியை, யோகம்' இவற்றைச் சிவபெருமானிடம் வைக்கும் அன்பு காரணமாகச் செய்து வந்தால் 'இருவினையொப்பு' உண்டாகும். அவ்வாறு உண்டாகும் காலமே, உயிருக்கு 'ஞானம்' வரும் காலமாகும். ஞானம் விளங்கியபொழுது, உயிரானது அசத்தை 'அசத்து' என்று கண்டு கழித்துச் சத்தாகிய சிவத்தோடுகூடி இன்புறுதலாகிய 'முத்தி' நிலையைப் பெறும். இறைவனை உணரும் நிலையே 'பதி ஞானம்' எனப்படும். இத்தகைய ஞானத்தை உணர்த்துபவனும் உயிர்க்கு உயிராய் நிற்கும் முதல்வனாகிய சிவனேயாவன்.[75]

பதிஞானத்தால் சிவனை அறிதலை 'அருட்கண்ணால் காணுதல்' என்றும் கூறலாம். அருளே கண்ணாகக் காணின் காணலாகும்; அக் கண் இல்லாதார்க்கு எவ்வகையினும் காட்டொணாது. எனவேதான் மணிவாசகரும்,

*"சிவனவன்என் சிந்தையுள் நின்ற அதனால்*
*அவனரு ளாலே அவன்தாள் வணங்கி"*[76]

என மொழிவாராயினர்.

*" 'அருட்கண் இல்லாதார்க்கு அரும்பொருள் தோன்றா' என்ற திருமந்திரப்படியே, அரும்பொருளாகிய சிவபுராணத்துக்குத் திருவருள் வேண்டுவதாயிற்று. அவன் திருவருள் உயிர்க்குயிராய் நின்று, உயிர் தன்னையும், அவ்வுயிரை அடிமையாக உடைய முதல்வன்தன்னையும் காட்டி இன்புறுத்துமாதலின், அது காட்டக் கண்டு வணங்கும் தமக்கு அதுவே 'முதல்' என்பதையும், 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்று வற்புறுத்தினாராம்"*[77].

என்று கூறும் ஔவை சு. துரைசாமியின் விளக்கம் இவண் எண்ணத்தக்கது.

முதல்வனாகிய சிவபெருமான் தமக்குக் காட்டிய அருள் நிலையை மணிவாசகர் பலவிடங்களிலும் மொழிகின்றார். அவற்றுட் சில :

*"அருள்நனி சுரக்கும் அமுது"*

*"மாக்கருணை வெள்ளம்"*

*"அருளார் அமுது"*

*"கடையவ னேனைக் கருணையி*
*னாற்கலந் தாண்டு கொண்ட*
*விடையவனே !"*

*"தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்"*

*"தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு*
*ஊன்வந்து ரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து*
*தேன்வந் தமுதின் தெளிவின் ஒளிவந்த*
*வான்வந்த வார்கழல்"*

*"நானார்என் உள்ளமார் ஞானங்களார் என்னை யாரறிவார்*
*வானோர் பிரானென்னை ஆண்டிலனேல்"*

*". . . அடியேனை ஆண்டு கொண்டு*
*பத்திக் கடலுட் பதித்த பரஞ்சோதி"*

*"வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை*
*ஆட்கொண்ட வள்ளல்*
*ஊன்பழித் துள்ளம் புகுந்தென் உணர்வது*
*வாயவொ ருத்தன்"*

*". . . திருவருள் தந்துதன்*
*பொன்னடி யிணைகாட்டி"*[78]

திருமூலரும்,

*"அருளின் தலைநின் றறிந்தழுந் தாதார்*
*அருளின் தலைநில்லார் ஐம்பாசம் நீங்கார்"*[79]

எனவும், காரைக்காலம்மையார்,

*"அருளாலே மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன்"*[80]

எனவும் கூறியன இவண் ஒப்புநோக்கத்தகுவன.

இக்கருத்தை உளங்கொண்டு, மெய்கண்டாரும்,

*"இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே*
*குருவுமாய் உணர்த்தும்"*[81]

என அருளுவாராயினர்.

**'அத்துவிதம்'**

இறைவன், எல்லா இடங்களிலும், எல்லாப் பொருள்களிலும் கலந்து ஒன்றாய் நிற்பன். அஃது, 'உடலில் உள்ள உயிர் போல'வாம். உயிர், தன்னின் வேறாய உடலிற் பொருந்தியிருப்பினும், அவ் வேற்றுமை தோன்றாமல், அவ்வுடலே என்னும்படி ஒற்றுமைப்பட்டு நிற்கிறது. அதுபோல, இறைவன், உயிர்களும் உலகமும் ஆகிய யாவற்றிலும் கலந்து அவையேயாக நிற்கின்றான். உயிரின் கலப்பு இல்லாமல் உடல் தனித்து நிற்றல் இயலாது. அதுபோல, இறைவனது கலப்பு இல்லாமல் எவ்வகைப் பொருளுக்கும் இருப்பு என்பது இல்லை. அவ்வப்பொருள்கள் அவ்வத்தன்மையோடு இருப்பது இறைவனது கலப்பினாலேயாம். எனவே எப்பொருளும் நிலைபெறுவதற்கு அதனோடு இறைவன், **ஒன்றாய்க்** கலந்து நிற்றல் இன்றியமையாததாகின்றது.

கண்ணொளி தானே உருவத்தைக் காணமாட்டாது. சூரியஒளி, கண்ணொளியோடு கலந்து நின்று காட்டுகிறபோது, அக் கண்ஒளி காணவல்லதாகும். எனவே காட்சியின்போது அவ் இரண்டு ஒளியும் இயைந்து நிற்கும் என்பது தெளிவு. சூரியஒளி கண்ணொளியில் ஒன்றாய்க் கலந்து நிற்பினும், கண்ணொளி பொருளைக் காண்பதாக, சூரியஒளி கண்ணிற்குப் பொருளைக் காட்டுவதாய் நிற்கும் தன்மையால் வேறுபட்டு நிற்கும். கண் ஒளியோடு கலந்து நிற்கும் சூரியஒளி போல, உயிரானது ஒருபொருளை அறியுமிடத்து உயிரோடு இறைவனும் இயைந்தே நிற்பான். இறைவனும் உயிரும் பிரித்தறிய வாராமல் இயைந்து நிற்கும். அந்த நிலையிலும், உயிரானது பொருளை அறிய, இறைவன் அவ்உயிருக்கு அறிவிப்பவனாய் நிற்கும் தன்மையால் **வேறுபட்டு** நிற்பான். இனி, ஏனைய உலகப் பொருள்களில் இறைவன் **வேறாயும்** நிற்பான். அஃதாவது, அவை இயக்கப்படுவனவாகத் தான் இயங்குபவனாகி நிற்றலாம். எனவே, சித்தாகிய உயிர்களின் அறிவை விளக்குதற்கும், சடமாகிய பிற பொருள்களை இயக்குதற்கும் இறைவன் **வேறாய்** நிற்றல் இன்றியமையாததாகின்றது.

கண்ஒளி, ஒரு பொருளைக் காண்பதற்கு உயிரறிவும் உடன்நின்று காணல் வேண்டும். அதுபோல, இறைவன், உடனிருந்து அறியவில்லையென்றால், உயிர்களும் அறியமாட்டா! எனவே, உயிர்கள் பொருள்களை அறிந்து அனுபவிப்பதற்கு இறைவன் **உடனாய்** நின்று அறிதல் இன்றியமையாததாகின்றது.[82]

- இவ்வாறு, 'ஒன்றாய் நிற்றல், வேறாய் நிற்றல், உடனாய் நிற்றல்' என்னும் மூன்று தன்மையும் ஒருங்கே விளங்க நிற்கும் நிலையே **'அத்துவிதம்'** எனச் சைவ சித்தாந்தத்தில் சிறப்பாகப் பேசப்படும். இதனை, 'அ + துவிதம்' எனப் பிரித்துப் பலவாறு பொருள் காண்பர் சமயவாதிகள். ஆனால், சைவ சித்தாந்தம் காணும் பொருள் : "இரண்டாய் இருந்தே இரண்டல்லவாய் நிற்கும்."[83]

**திருவாசகத்தில்!**

மணிவாசகர், தாம் அருளிய திருவாசகத்தில், சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கையான இவ் 'அத்துவிதத்'தைக் குறிப்பிட்டுள்ளார்.

*"நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே"*[84]

என்பது சிவபுராணம். இதற்கு ஒளவை சு. துரைசாமி கூறும் விளக்கம் வருமாறு :

*"மலரும் மணமும் வேறாயினும், தோன்றுங்கால் மலர் வேறு மணம் வேறாகப் பிரித்தறிய வொண்ணாதவாறு ஒன்றாய் நிற்பது போல, உயிர்களிடத்தே உயிர்க்குயிராய் வேறு பிரித்தறியாவாறு* ***ஒன்றாய்*** *இயைந்து நிற்குமாறு தோன்றவே 'நாற்றத்தின் நேரியாய்' என்றும்; உயிர்களின்* ***வேறாய்ப்*** *பிரிந்து நிற்குங்கால் சேயன் ஆதலும்; சேயனாகாது உயிரும்தானும்* ***ஒருங்கே உடனிருக்குங்கால்*** *அணியன் ஆதலும் தேர்ந்து, 'சேயாய் நணியானே' என்றும் விளம்பினார்".*[85]

மணிவாசகர், இவ் **'அத்துவிதநிலை'**யைத் தம் திருவாசகத்தில் பலவிடங்களிலும் குறிப்பிடுகின்றார் எனினும், இதற்கென்றே **'புணர்ச்சிப்பத்து'** எனும் ஒருபகுதியே அருளியுள்ளார் என்பது சிறப்பாகக் குறிக்கத்தக்கது.

*"சுடர்பொற் குன்றைத் தோளா முத்தை*
*வாளா தொழும்பு கந்து*
*கடைபட் டேனை ஆண்டு கொண்ட*
*கருணாலயனைக் கருமால் பிரமன்*
*தடைபட் டின்னுஞ் சார மாட்டாத்*
*தன்னைத் தந்தஎன் ஆரமுதைப்*
*புடைபட் டிருப்ப தென்றுகொல் லோஎன்*
*பொல்லா மணியைப் புணர்ந்தே"*[86]

"புணர்ச்சி - அத்துவிதம். ஒன்றாய் வேறாய் உடனாய் உறையும் ஆண்டான் - அடிமைக் கலப்புப் 'புணர்ச்சி' என்பதாகும் . . . சுடர்பொற் குன்றால் **படைத்தலும்**, தோளா முத்தால் **காத்தலும்**, கருணாலயன் என்றதனால் **துடைத்தலும்**, ஆரமுதால் **மறைத்தலும்**, பொல்லாமணி என்றதனால் **அருளலும்** ஒருபுடையொப்பாக ஓதப்பெற்றமை காண்க. **'புணர்ப்பு'** என்பதனை **'அத்துவிதம்'** எனக் கூறுப" என இப்பாடலுக்கு விளக்கம் தருவர் ப. இராமநாதபிள்ளை.[87]

இப்பதிகந்தோறும், ஈற்றடியில்,

*"என்றுகொல்லோ என்பொல்லா மணியைப் புணர்ந்தே"*

என்று அடிகள் கூறுவது எண்ணத்தக்கது.

இதனை உளத்துட்கொண்டே மெய்கண்டாரும்,

*"அவையே தானே யாய்"*[88]

என்று அருளிச் செய்வாராயினர். இதனை, 'அவையேயாய்' என்றும்; 'தானேயாய்' என்றும்; 'அவையே தானேயாய்' என்றும் விரித்துப் பொருள் காணவேண்டும்.

*அவையேயாதல் - ஒன்றாதல்*
*தானேயாதல் - வேறாதல்*
*அவையே தானேயாதல் - உடனாதல்*

இதனைச் சித்தியார்,

*"உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி*
*அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்*
*தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித் தானே*
*நிலவுசீ ரமல னாகி நின்றன னீங்கா தெங்கும்"*[89]

என்னும் திருப்பாட்டால் விளக்கும்.

*"ஈறாகி அங்கே முதல்ஒன்றாய் ஈங்கிரண்டாய்*
*மாறாத எண்வகையாய் மற்றிவற்றின் - வேறாய்*
*உடனாய் இருக்கும் உருவுடைமை என்றும்*
*கடனாய் இருக்கின்றான் காண்"*[90]

என்பது திருக்களிற்றுப்படியார்.

உயிர், உடலிற் கலந்து உடலாகவே நிற்பது போல, முதல்வன் உலகத்தோடு கலந்து உலகமேயாகி நிற்கின்றான் என்பது மேலே சுட்டப்பட்டது.

மணிவாசகர், இவ் **'ஒன்றாதல்'** குறித்தும் பாடியுள்ளார் :

*"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி*
*ஊனாகி உயிராகி"*

*"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி*
*நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி*
*தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி*
*வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி*
*வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி"*

*". . . . : . தண்புனல்*
*விண்கால் நிலநெருப்பாம்*
*விச்சையனே !"*

*". . . . புவனம் நீர்தீக் காலொடு*
*வான மானாய்!"*

*"நிரந்தஆ காயம் நீர்நிலம் தீகால்*
*ஆயவை அல்லையாய் ஆங்கே*
*கரந்ததோர் உருவே!"*

*"பூதங்கள் ஐந்தாகிப் புலனாகிப் பொருளாகி"*[91]

என்பன சான்றுகள்.

உயிராவது, ஒரு பொருளை அறியுமிடத்து, அவ் உயிரோடு இறைவனும் இயைந்து நிற்பவன் எனினும், உயிரானது பொருளை அறிய, இறைவன் அவ்வுயிருக்கு அறிவிப்பனுவாய் நிற்கும் நிலையில் **'வேறாய்'** விளங்குவன் என்பது மேலே சுட்டப்பட்டது.

மணிவாசகர் பாடல்களில், சிவபெருமான், 'வேறாய்' நின்று விளங்கும் தன்மை இயம்பப்பட்டுள்ளது.

*"வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று*
*போதுநான் வினைக்கேடன் என்பாய் போல*
*இனையன்நான் என்றுன்னை* **அறிவித்துஎன்னை**
*ஆட்கொண்டு"*

*"நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே*
*நாயினுக்குத் தவிசிட்டு நாயினேற்கே*
*காட்டா தனவெல்லாங்* **காட்டிப்** *பின்னும்*
*கேளா தனவெல்லாங்* **கேட்பித் தென்னை**
*மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்*
*எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே!"*[92]

என்பனவற்றைச் சான்றாகக் கொள்ளலாம்.

*"ஒன்றும்நீ யல்லை; அன்றியொன் றில்லை*
*யாருன்னை அறியகிற் பாரே?"*[93]

என்னும் திருவாசக அடியில், 'ஒன்றாதல், வேறாதல்' என்ற இரண்டும் ஒருங்கே ஓதப்பட்டுள்ளன. 'ஒன்றும் நீயல்லை' என்பது 'வேறாதல்'; 'அன்றி ஒன்றில்லை' என்பது 'ஒன்றாதல்'.[94]

உயிர்கள், பொருள்களை அறிந்து அனுபவிப்பதற்கு இறைவன், **'உடனாய்'** நின்று அறிதல் இன்றியமையாதது என முன்னர்க் கூறப்பட்டது.

மணிவாசகர், தம் சிவபுராணத்துத் தொடக்கத்திலேயே,

*"இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்"*[95]

என்று மொழிகின்றார்.

*"மருவிளப் பொருளும் வளர்ப்போன்"*

*"பிறிவினை யறியா நிழலது போல"*

*"ஊனாய் உயிராய் உணர்வாய்என் னுட்கலந்து*
*தேனாய் அமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்"*

*". . . .உள்ளம் புகுந்தென் உணர்வது*
*வாய வொருத்தன்"*[96]

என்னும் திருவாக்கு, இறைவன் 'உடனாய் நிற்றலை'க் குறிக்கும் எனலாம்.

- இவ்வாறு, மணிவாசகப் பெருமான், தம்மை ஆட்கொண்ட வள்ளலாம் சிவபெருமானின் 'அத்துவித' நிலையைப் பல்வேறிடங்களிலும் சுட்டிச் செல்வது, கற்பார்க்குக் கழிபேருவகை தருவதாம்.

இவ் 'அத்துவிதநிலை' பற்றிய கருத்துக்களைத் தேவாரம் முதலான தோத்திர நூல்களிலும் கண்டு இன்புற முடிகின்றது.

*"ஈறாய்முதல் ஒன்றாய்இரு*
*பெண்ஆண் குணம் மூன்றாய்*
*மாறா மறைநான் காய்வரு*
*பூதம்மவை ஐந்தாய்*
*ஆறாய்சுவை ஏழோசையொ*
*டெட்டுத்திசை தானாய்*
*வேறாய்உடன் ஆனான்இடம்*
*வீழிம்மிழ லையே"*[97]

என்னும் சம்பந்தர் தேவாரத்தில், இறைவன் உயிர்களோடு ஒன்றாய், வேறாய், உடனாய் நின்று விளங்கும் இயல்பு உரைக்கப்பட்டுள்ளமை காணலாம்.

*"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி*
*இயமான னாய்எறியும் காற்று மாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயி றாகி*
*ஆகாச மாய்அட்ட மூர்த்தி யாகி"*[98]

என்னும் அப்பர் வாக்கில், இறைவனின் 'ஒன்றாதல்நிலை' உணர்த்தப்பட்டுள்ளது.

இவ்வாறே சுந்தரர் தேவாரத்திலும்,

*"ஊனாய் உயிரானாய் உடலானாய் உலகானாய்*
*வானாய் நிலனானாய் கடலானாய் மலையானாய்"*[99]

என வருவது காணலாம்.

இவ்வாறு மணிவாசகப் பெருந்தகை, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கையாம் 'அத்துவித' நிலையைப் பல பாடல்களிலும் பாடி, உயிர்கள் உய்யும் வகைக்கு வழிகாட்டுகின்றார்.

## முடிபுகள்

இவ் 'இயல்' வாயிலாக அறியலாகும் முடிபுகளாவன :

1. சைவ சித்தாந்தத்தில் சிறப்பாகப் பேசப்படும் பொருள் மூன்று. அவை : பதி, பசு, பாசம். இம்மூன்றும் அநாதி;
2. "கடவுள், இறைவன், இயவுள், அம்மையப்பர், முதல்வன், ஆதி, தலைவன்" என்பன, சிவபெருமானைக் குறிக்கும் சொற்கள்;
3. முதல்வனை மணிவாசகர், "நாதன், குருமணி, சிவன், சைவன், தில்லையுட்கூத்தன்" முதலான பல பெயர்களால் சுட்டுகின்றார்;
4. சிவபெருமானின் 'படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்' எனும் ஐந்தொழில் பற்றி மணிவாசகர் தம் நூலில் விரித்துரைக்கின்றார்;
5. இவ் ஐந்தும் சிவனின் விளையாட்டாம்; இதனால் உயிர்கட்கு நன்மையே கிட்டும்;
6. ஆதியும் அந்தமுமில்லாச் சிவபெருமான், ஏனைத் தேவர்கட்கெல்லாம் தலைவன்;
7. மணிவாசகர், பிற சமயவாதிகளின் வலையில் அகப்பட்டுத் தடுமாறாத் தன்மையைத் திருவாசகத்தில் உணர்த்துகின்றார்;
8. சிவபெருமான், ஊழிக்காலத்தே 'சங்காரகாரணனா'கத் தான் ஒருவனாக நின்று நடனமாடுபவன்;
9. எனினும் மீண்டும் உலகத்தைப் படைத்தருளுவான்;
10. பதிவாகிய பரமன், பேராற்றலும் சுதந்திரத் தன்மையும் கொண்டவன்;
11. பதியாகிய சிவனுக்குரிய இயல்புகள், 'சிறப்பியல்பு' என்றும், 'பொதுவியல்பு' என்றும் பேசப்படும்;

12. இறைவனே சத்துப்பொருளும் சித்துப்பொருளும் ஆவான்;

13. சிவபெருமான், 'தன்வயத்தன் ஆதல்' முதலான எண் குணங்கள் கொண்டவன்; இவற்றை மணிவாசகர் பல்வேறு பாடல்களில் குறிப்பிடுகின்றார்;

14. சிவபெருமான், உயிர்கள்பொருட்டுப் பற்பல உருவும், பெயரும், தொழிலும் உடையவனாகின்றான்;

15. இறைவனது அருள், 'சத்தி' எனப் பேசப்படும்;

16. இறைவன், உயிர்களின் பொருட்டு 'உருவம், அருஉருவம், அருவம்' எனும் மூவகைத் திருமேனிகள் கொள்ளுவான்;

17. மணிவாசகர், இறைவனின் திருமேனியைக் கண்ணாற் கண்டு தம் அநுபவத்தைத் திருவாசகத்தில் வெளிப்படுத்துகின்றார்;

18. இறைவனே 'குரு'வாக வந்து மணிவாசகரை ஆட்கொண்டருளினன்; மணிவாசகர் பொருட்டுப் பிட்டுக்கு மண் சுமந்து, பிரம்படியும் பட்டவன்;

19. முதல்வன், 'சிவசத்து' எனப்படுவன்; அவனைப் 'பதிஞானத்'தால் மட்டுமே அறியமுடியும்; அந்த ஞானத்தை உணர்த்துபவனும் அவனேயாவான்;

20. சிவபெருமான் தமக்குக் காட்டிய 'அருள்நிலை' குறித்து மணிவாசகர் பலவிடங்களிலும் குறிப்பிடுகின்றார்;

21. சிவபரம்பொருள், 'ஒன்றாய், வேறாய், உடனாய்' விளங்குவதாகிய. 'அத்துவிதநிலை' குறித்து மணிவாசகர் தம் நூலின் பல்வேறிடங்களிலும் சுட்டுகின்றார்; இவ் 'அத்துவிதநிலை'யை உணர்த்துவதற்காகவே 'புணர்ச்சிப் பத்து' எனும் பகுதியையும் அருளியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்


1. வ.ஆ.தேவ சேனாபதி, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், ப. 57.
2. மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி, பக். க.உ.
3. திருமூலர் திருமந்திரம், முதல் தந்திரம், உபதேசம் 3 (115)
4. சிவப்பிரகாசம், 13:1.
5. சி. அருணைவடிவேலுமுதலியார், சிவஞானபோத மாபாடியப் பொருள் நிலை விளக்கம், ப. 179.
6. ஆ. ஆனந்தராசன், சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, ப. 173.

7. ர. இராமானுஜாசாரி, சைவ சித்தாந்தம், ப.10

8. சு. வச்சிரவேல் முதலியார், **'சைவம்'**, சைவமும் வைணவமும், பக். 52 53.

9. திருவாசகம், 5:39:1-3.

10. மேலது. 1, 3, 5, 7, 11, 17; 2:84; மிகைப்பாடல்;திருக்கழுக்குன்றம்; 9:16:3; 1:90; 3:96; 5:61-1;

11. மேலது, 1:41 43.

12. ஔவை சு. துரைசாமி, சிவபுராணம் விரிவுரை, ப. 24.

13. மேலது.

14. திருவாசகம், 7:20

15. மேலது, 3:114.

16. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், பக். 125, 126.

17. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா. நூல், ப.291.

18. திருவாசகம், 4:100.

19. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா. நூல், ப. 182

20. திருவாசகம், 3:52

21. மேலது, 9:20-3.

22. மேலது, 7:11-3; 12-2.

23. சிவஞான சித்தியார் சுபக்கம், 56:1-2.

24. சிவப்பிரகாசம், 18:1.

25. திருவாசகம், 1:73; 5:70:2-3; 5:97-4; 7:1; 9:20-4; 12:10-1; 99:3-1; 18:1-4; 22:9-2.

26. மேலது, 3:38; 3:182; 5:95:1; 7:5:1; 8:1-2; 8:19:1; 11:3:1-2.

27. சிவஞானபோதம், 1.

28. வ.ஆ. தேவசேனாபதி, மு.கா. நூல், ப. 62.

29. திருவாசகம், 4:52-58, 74, 87; 10:5:1-2; 35:1:3-4.

30. சிவஞானபோதம், அவையடக்கம்.

31. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், பக். 13, 14.

32. திருவாசகம், 5:8:2-4.

33. மேலது, 15:13:3,4.

34. மேலது, 7:8:4.

35. சிவஞானபோதம், நூற்பா 1, அதிகரணம் 2 : உதாரணம்.

36. சிவஞானசித்தியார், 68:2.

37. சம்பந்தர் தேவாரம், 4082

38. திருவாசகம், 1:5; 7:8-4; 4:124.

39. சிவஞானபோதம், நூற்பா 1, அதிகரணம் 3 : உதாரணம்.

40. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா. நூல், ப. 27.

41. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப. 141

42. திருவாசகம், 1:3738.

43. வ.ஆ. தேவசேனாபதி, மு.கா. நூல், ப.80

44. திருவாசகம், 1:92; 2:95-96; 3:38; 4:1; 42:1-2.

45. ந. சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, ப. 127.

46. திருவாசகம், 1:25-26.

47. மேலது, 1:38.

48. மேலது, 3:49.

49. மேலது, 1:64.

50. மேலது, 1:34-35; 1:24; 3:5-6; 22:4.

51. மேலது, 1:66; 1:61; 37:9:1; 20:2; 4:4.

52. மேலது, 2:123.

53. தாயுமானவர் பாடல், பரிபூரணானந்தம், 1:4.

54. திருக்குறள், 9. பரிமேலழகர் உரை

55. சிவஞானபோதம், நூற்பா : 6, அதிகரணம் : 2.

56. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப. 124.

57. திருவாசகம், 11:1-3, 4.

58. ந. சுப்பு ரெட்டியார், மு.கா. நூல், பக். 55-56.

59. சிவஞானபோதம், நூற்பா : 5, அதிகரணம் : 2 : உதாரணம்.

60. திருவாசகம், 7:14:4; 2:107; 3:65; 5:53:2; 11:6:2.

61. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா. நூல், ப.653.

62. ச. கங்காதரன், சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும், ப. 76.

63. திருவாசகம், 2:23-26; 10:18:1-4; 11:2:3; 12:3:1-2; 5:25:3; 10:14:2.

64. சிவஞானசித்தியார், 58

65. திருவாசகம், 1:74; 2:92-94; 3:162; 4:75-1, 76; 11:7:2; 23:3:1.

66. வை. இரத்தினசபாபதி, திருமுறைத் தெளிவே சிவஞானபோதம், ப. 166.

67. "He attained 'Self awareness' by his contact with the GURU" - Radha Thiagarajan, A Study of Mysticism in Tiruvacakam, p. 182.

68. திருவாசகம், 2:44-45; 8:3:4-5; 13:20:1-2; 48:2:2.

69. மேலது, 2:47; 31:2:1.

70. மேலது, 8:8.

71. சிவஞானபோதம், நூற்பா 8.

72. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா. நூல், ப. 637.

73. சிவஞான சித்தியார், 253.

74. சி. அருணை வடிவேலு முதலியார், மு.கா. நூல், ப.561.

75. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப. 194.

76. திருவாசகம், மேலது, 1:17-18.

77. ஒளவை சு. துரைசாமி, மு.கா. நூல், ப. 14.

78. திருவாசகம், 3:59; 5:91:1; 6:5:5; 6:1-2; 7:6:3; 8:4:3 6; 10:2:1-2; 11:12:2-3; 18:4:2-

79. திருமந்திரம், 1814.

80. காரைக்காலம்மையார், அற்புதத் திருவந்தாதி, 9:2-3.

81. சிவஞானபோதம், நூற்பா 8. அதிகரணம் : 2.

82. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், பக். 37-39.

83. ந. சுப்புரெட்டியார், மு.கா. நூல், பக். 65-66.

84. திருவாசகம், 1:44.

85. ஒளவை சு. துரைசாமி, மு.கா. நூல், ப. 25.

86. திருவாசகம். 27:1.

87. ப. இராமநாதபிள்ளை, திருவாசகம் விளக்கவுரை, பக். 547-548.

88. சிவஞானபோதம், நூற்பா 2.

89. சிவஞான சித்தியார், 91.

90. திருக்களிற்றுப்படியார், 86.

91. திருவாசகம், 5:15:1 2; 4:137-141; 6:31:1-2; 5:70:1; 22:6:3-4; 31:10:1.

92. மேலது, 5:22:1-2; 5:28:2-4.

93. மேலது, 22:7:4.

94. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப. 46.

95. திருவாசகம், 1:2.

96. மேலது, 3:48; 4:78; 8:16:1-2; 18:4:3.

97. சம்பந்தர் தேவாரம், 109.

98. அப்பர் தேவாரம், 7163.

99. சுந்தரர் தேவாரம், 7231.

# 4

# திருவாசகத்தில் 'பசுவியற் கொள்கை'

## முன்னுரை

திருவாசகத்தில், மணிவாசகப் பெருந்தகை மொழிந்தருளிய 'பசுவியற் கொள்கை' பற்றிய ஆய்வு, இவ் இயலில் எடுத்தியம்பப்படுகின்றது.

## 'பசு' - ஒரு விளக்கம்

'பசு' என்பது 'ஆன்மா' அல்லது 'உயிர்'. சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களில் இதுவும் ஒன்று.

> *"காணப்படும் உலகப் பொருள்களை இரண்டு கூறாகப் பகுத்து உணரலாம். ஒன்று, அறிவுடைப் பொருள்; மற்றொன்று அறிவில் பொருள். இவற்றுள் 'அறிவுடைப்பொருள்' என்பது, தன்முயற்சி உள்ளதாய், உடம்போடு கூடிப் புலப்படுவதால் உள்ளது. உடம்புகள் எண்ணில. இத்தகைய உடம்புகள்தோறும் வேறு வேறாய், 'யான்' என்னும் உணர்வு வடிவில் நிகழ்வதே* (Self consiousness) *'உயிர்' எனப்படும்"*[1]

என விளக்கம் தருவர் க. வச்சிரவேல் முதலியார்.

> *"பச் - பந்தித்தல்; உ - செயப்படுபொருள் விகுதி.*
> *பசு - பாசத்தாற் பந்திக்கப்பட்டது"*[2]

எனக் காரணம் காட்டுவர் மு. திருவிளங்கம்.

*"பசுத்துவ முடைய னாகிப் **பசு**வென நிற்கும் ஆன்மா"*[3]

என்பது சித்தியார்.

*"நித்தியமாகிய ஆன்ம ஞானக் கிரியைகளை*
*அநாதியே தடுத்து நிற்கும் ஆணவமலசக்தியை*
*உடைத்தாகையால் 'பசு'என்னும் பெயரையுடைத்தாய்*
*நிற்கும்"*[4]

என்னும் சிவாக்கிரயோகியர் கூற்றும் இவண் குறிக்கத்தகும்.

"உயிர் எனத் தனி இருப்பு உடைய பொருள் உண்டா" என்பது மெய்யுணர்வுத்துறையில் பல வகைகளில் ஆராயப்பெற்றுள்ளது. முடிபுகள் பல. சைவ சித்தாந்தம், ஏனையோர் கூற்றுக்களை மறுத்துப் 'பசு உண்மை'யைப் பல்வேறு காரணங்கள் காட்டி நிறுவுகின்றது.[5]

மணிவாசகர், 'உயிர் உண்டு' என்பதற்குப்,

*"பல்லுயிர் எல்லாம் பயின்றனன் ஆகி"*

*"போற்றி எல்லா உயிர்க்கும்"*

என்று கூறியதனோடமையாது,

*"யானை முதலா எறும்பு ஈறாய"*[6]

எனப் பல்வேறு உயிர்த் தொகுதிகளையும் சுட்டுவதால் உணரலாம்.

மேலும் அவர், 'பசு' என்ற சொல்லையே எடுத்தாள்கின்றார் :

*"கதிக்கும் **பசு** பாசம்"*

*"**பசு**பாசம் அறுத்தானை"*

*"**பசு**பாசம் அறுத்தருளி"*[7]

என்பன சான்றுகள்.

**உயிரின் இயல்பு**

உயிர்கள், ஒருகாலத்தில் தோன்றியனவல்ல; இறைவனால் படைக்கப்பட்டனவுமல்ல. முதல்வனைப் போல அநாதியாகக் காலம் கடந்து உள்ள பொருள்களேயாம்.

*"பதியினைப்போல் பசுபாசம் அநாதி"*[8]

என்பது மீண்டும் நினைக்கத்தகும். பெருநெருப்பிலிருந்து வெளிவரும் நெருப்புப் பொறிகள் போல, முதல்வனிடத்திலிருந்து வெளிப்பட்டவை

என்றோ, கயிற்றில் தோன்றி மறையும் அரவைப் போல, முதல்வன்மாட்டு மயக்க உணர்வால் வேறுபட ஏற்றி உணரப்படுபவை என்றோ கொள்ளப்படாதன.

*"போற்றி எல்லா* **உயிர்க்கும் தோற்றமாம்** *பொற்பாதம்"*

*"போற்றி எல்லா* **உயிர்க்கும் ஈறாம்** *இணையடிகள்"*[9]

என்று மணிவாசகர் கூறுவன கொண்டு, "உயிர்கட்குத் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு" எனல் கூடாது. உயிர்கள் தாம்தாம் செய்த வினைப்பயனாய் மீண்டும் உடம்பைப் பெற்றுப் பிறவிக்கு வருவதைத் 'தோற்றம்' என்றும்; உடம்பினின்று நீங்குதலை 'ஈறு' என்றும் குறித்தார் என்றே கொள்ள வேண்டும். 'தோற்றக் கேடுகள், உடம்புக்கே யன்றி, உயிர்களுக்கல்ல![10]

'அநாதி' என்ற தன்மையில், உயிர், இறைவனோடு ஒப்பதாயினும், பிறவற்றில் எல்லாம் அஃது, இறைவனுக்கு அடிமையாகவே நிற்கும்.

உயிர், இறைவனைப் போல அறிவுப் பொருளாயினும் அது, தானாக அறியும் திறனுடையதன்று; இறைவன் அறிவிக்கவே எதனையும் அறியும்; அவ்வாறே அவன் செலுத்த அது செயற்படும். எனவே, உயிரின் அறிவும் செயலும், இறைவனைச் சார்ந்தே அமையும்.

> *"இருளில் உள்ள கண், அவ்விருளை நீக்கிக் கொள்வதற்குச் சூரிய ஒளி வேண்டும். பின், பொருளைக் காண்பதற்கும் சூரியஒளியின் உதவி வேண்டும். அதுபோல, உயிர், தன்னைப் பிணித்துள்ள அறியாமையாகிய இருளை நீக்கிக் கொள்வதற்கு மட்டுமன்றி, இறைவனைக் கண்டு அனுபவிப்பதற்கும் இறைவனது உதவி இன்றியமையாததாகும். இவ்வாறு, பலவகையிலும் உயிர், இறைவனுக்கு அடிமையாயே நிற்கும்"*[11]

என விளக்கம் தருவர் ஆ. ஆனந்தராசன்.

இறைவன் தமக்குச் செய்த உதவியை மணிவாசகர்,

*"அவனருளாலே அவன்தாள் வணங்கி"*

*"நாயி னேனை நலமலி தில்லையுட்*
*கோல மார்தரு பொதுவினில் வருகென*
*ஏல வென்னை யீங்கொழித் தருளி"*

*"இன்றெனக் கெளிவந் தருளி*
*அழிதரும் ஆக்கை யொழியச்செய்த ஒண்பொருள்"*

*"நான்நின் னடியேன், நீஎன்னை ஆண்டாய்"*

*"என்னை மிக்கார், ஆரடியான்?"*[12]

என்றெல்லாம் கூறுபவர், தமக்குமட்டுமன்று, தம் தாதை தாதைக்கும் அன்னைக்கும் முதல்வன் என்ற பொருளில்,

*"என்தாதை தாதைக்கும் எம்அனைக்கும் தம்பெருமான்"*[13]

என்றும் கூறுகின்றார்.

"இறைவா! நான் உனக்கு அடிமை; எனவே என்னை ஆண்டு கொண்டாலும், விற்றுக் கொண்டாலும், 'ஒற்றி' (ஒத்தி) வைத்தாலும் எனக்கு உடன்பாடுதான்" என்ற பொருளில்,

*"இருந்துஎன்னை ஆண்டுகொள்; விற்றுக் கொள்;*
*ஒற்றி வை"*[14]

என்பார் எனின், "ஆண்டான் - அடிமைத்திறத்'திற்கு வேறு சான்று வேண்டா.

*"மீளா அடிமை உமக்கே"*[15]

என நம்பியாரூரரும்,

*"என்றுநீ அன்றுநான்உன் அடிமையல்லவோ?"*[16]

எனத் தாயுமானவரும் கூறியன எண்ணத்தகுவன. இதனை உட்கொண்டே மெய்கண்டாரும்,

*"ஒன்றலா ஒன்றால் உளதாகி நின்றவாறு)*
*ஒன்றலா ஒன்றில்அவை ஈறாதல் - ஒன்றலா*
*ஈறே முதல்;அதனின் ஈறலா ஒன்றுபல*
*வாறே தொழும்பாகும் அங்கு"*[17]

என்றருளினார் எனலாம். "பலவகையினும் உயிரானது, இறைவனுக்கு அடிமையாயே நிற்கும்" என்பதை, "அதனின் ஈறலா ஒன்று பலவாறே தொழும்பாகும்" என்பதால் பெற வைத்தார். [18]

## முதல்வனும் உயிரும்

முதல்வன், ஒருவனே! ஆனால், உயிர்களோ பலப்பல! உடம்புகள் எண்ணில் அடங்காதன: ஆதலால் உயிர்களும் எண்ணில் அடங்காதனவேயாம். வள்ளுவரும்,

*"துறத்தார் பெருமை துணைக்கூறின், வையத்து*
*இறந்தாரை எண்ணிக்கொண் டற்று"*[19]

என்று கூறியது இவண் எண்ணத்தக்கது.

மணிவாசகப் பெருந்தகையாரும்,

*"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"*

*". . . . . . . . . வார்கடல் உலகினில்*
*யானை முதலா எறும்பீ றாய*
*ஊனமில் யோனி"*[20]

என, எண்ணில் பல்லுயிர்கள்பற்றி எடுத்தியம்புகின்றார்.

பதி ஒன்றேயாதலின், 'ஏகன்' என்றும்; உயிர் பலவாதலின், 'அநேகன் என்றும் மணிவாசகர் கூறுவதும் இங்குக் குறிக்கத்தகும்.[21]

முதல்வன், தானே எல்லாம் அறிந்து அறிவிக்கும் இயற்கை முற்றுணர்வு உடையவன். உயிர்களோ, உணர்த்த உணர்வன; மேலும் ஒவ்வொரு காலத்தும் ஒவ்வொரு பொருளையே சுட்டி அறிவன; அங்ஙனம் அறியும்போது, மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் போன்ற கருவிகளின் உதவியால் பொருள்களின் ஒவ்வோரியல்பையே சுட்டி அறியும். மேலும், முதல்வன் எல்லாப் பொருள்களையும் ஒருங்கே தனித்து நின்று அறிவன். உயிர்களோ, அறியப்பட்ட பொருள்களில் அழுந்தி அதுவேயாய் நின்று அறியும்.

மணிவாசகப் பெருந்தகை,

*"மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே"*

*"ஆவா அரிஅயன்இந் திரன்வானோர்க் கரியசிவன்*
*'வாவா'என்று என்னையும்பூ தலத்தேவலித்*
*தாண்டுகொண்டான்"*

*"உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்தென் உளம்மன்னிக்*
*கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட*
*திருத்துருத்தி மேயானை"*[22]

என்று மொழிவன எல்லாம், இறைவன் உணர்த்தத் தாம் உணர்ந்த பான்மையைக் குறிக்கும்.

> *"அறியாமை சாரின் அதுவாய், அறிவாம்*
> *நெறியான போதத்துவாய் நிற்கும் - குறியால்*
> *சதசத் தருளுணர்த்தத் தான்உணரா நின்ற*
> *விதமுற் றறிவெனும்பேர் மெய்"*[23]

எனும் தாயுமான அடிகளின் திருப்பாடலும் இக்கருத்துக்கு அரண் செய்வதாக உள்ளது.

> *"அறிந்தும் அறிவதே யாயும் அறியா(து)*
> *அறிந்ததையும் விட்டங் கடங்கி - அறிந்த(து)*
> *எது?அறியும் அன்றாகும்; மெய்கண்டான் ஒன்றின்*
> *அதுஅதுதான் என்னும் அகம்"*[24]

என்பது சிவஞானபோத உதாரணம்.

> *"ஒருகாலத்தில் ஒருபொருளையே அறிந்தும், மற்றொரு காலத்தில் மற்றொரு பொருளை அறிய முற்பட்டும், முன்பு அறிந்ததைப் பின்பு மறந்தும், ஒன்றையறியும் போதும் இடைவிடாமல் தொடர்ச்சியாய் அறிய மாட்டாது பற்றியும் விட்டும், இவ்வாறு வேறுபட்ட பலவகையில் திரிபுற்று அறிந்து வரும் பொருள் யாது எனச் சித்தாந்த உண்மையை உணர்ந்தோன், மனம் ஒன்றி ஆராய்வானாயின், அறியப்படும் பொருளின் வேறு நில்லாது அது அதுவே தானாய் அதன்கண் அழுந்திநின்று அறிவதாகிய ஆன்மா என்பது புலனாகும்"*[24]

என்பது இதன் பொருள்.

சிவம் - சத்து; உலகம் - அசத்து. ஆன்மாவைச் 'சத்து' என்று கொண்டால், அசத்தாகிய உலகத்தை அஃது அறியாது எனல் வேண்டும்; அதற்கு மாறாக உலகத்தை அறிந்து அனுபவிப்பதாக உள்ளது. எனவே 'சத்து' எனல் பொருந்தாது. இனி, 'அசத்து' என்று கொண்டால், சத்தை அஃது அறியாது எனல் வேண்டும். அதற்கு மாறாக, முத்தியில், ஆன்மா, சத்தாகிய சிவத்தை அறிந்து அனுபவிப்பதாக உள்ளது. எனவே, 'அசத்து' எனலும் பொருந்தாது. இதனால் ஆன்மா, சத்தும் ஆகாது; அசத்தும் ஆகாது என்பது போதரும்.

ஆன்மா, 'சத்து' ஆகாது எனினும், சத்தினின்றும் முற்றிலும் வேறானதன்று; ஒருவகையில் சத்தாம் தன்மையை உடையது. அதனாலேயே அது, சத்தைச் சார்ந்தபொழுது அதனோடு ஒன்றுபட்டு நிற்பதாகிறது.

இனி, ஆன்மா, 'அசத்து' ஆகாதெனினும், அசத்தினின்று முற்றிலும் வேறானதன்று; ஒருவகையில் அசத்தாம் தன்மையுடையது. அதனாலேயே அஃது அசத்தாகிய உலகத்தோடு ஒன்றுபட்டு நிற்பதாகிறது.

எனவே ஆன்மா, 'சத்து, அசத்து' என்ற இரண்டும் ஆகாமல் ஒருவகையில் அவ் இரண்டன் தன்மையையும் உடையதாகின்றது என்பது புலனாகும். அதுபற்றியே ஆன்மா, 'சதசத்து' எனத் தனிப்பொருளாய்க் கொள்ளப்படுகின்றது.

ஆன்மா, தான் சார்ந்த பொருளின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்பதாகிய இது, **'சார்ந்ததன் வண்ணம் ஆதல்'** எனப்படும்.

'கண்', இருளில் இருக்கும்போது, இருளைச் சார்ந்து இருளாய் நிற்கும்; ஒளி வந்த காலத்தில், அந்த ஒளியோடு கூடி ஒளியாய் நிற்கும். அதுபோன்றது 'ஆன்மா'. ஆன்மா, அசத்தாகிய உடம்பைச் சார்ந்து நிற்கின்ற பெத்த காலத்தில் உடம்பின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு, 'வளர்தல், தேய்தல், விழிப்பு, உறக்கம், பிறப்பு, இறப்பு' முதலியன கொண்டு நிற்கும். உயிருக்கு இவை இல்லை. எனினும் உடம்போடு கூடியிருப்பதனால், உடம்பின் தன்மைகளாகிய இவற்றைத் தன் தன்மைகளாகக் கொண்டு நிற்கும். பின்னர்ச் சத்தாகிய சிவத்தை உணர்ந்து, அதனைக் கூடி நிற்கின்ற முத்திக் காலத்தில் சிவத்தின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டுநிற்கும். சிவத்தின் நிலைமையாவது, பிறப்பு இறப்பின்றி என்றும் ஒருதன்மைத்தாய் நிற்றல். சிவத்தைச் சார்ந்த உயிர், சிவத்திற்குரிய அந்நிலைமையே தன் நிலைமையாகப் பெற்று இன்புறும். இதுவே 'சிவமாம் தன்மைப் பெருவாழ்வு' என்பதாம்.[26]

மாணிக்கத்தைச் சார்ந்த படிகத்தை மாணிக்கமெனல் பொருந்துமாயினும், மாணிக்கத்தையே படிகமெனல் அமையாது; அதுபோலச் சிவத்தைச் சார்ந்த ஆன்மாவும் சிவமாகாது. படிகம் போலச் சார்ந்ததன்வண்ணமாய் நிற்கும் ஆன்மா, மலமுழுவதும் நீங்கித் தன்னறிவு வியாபகமாய் விளங்கிய போதும், தன்னாற் சாரப்பட்ட சிவத்தை மாத்திரம் அறிதலன்றி மற்றொன்றை அறிதல் செல்லாது; எனவே சிவனுக்கு அடிமை நிலையில் ஆன்மா இருக்கும்.[27]

'சார்ந்ததன் வண்ணமாதல்' என்பது, உயிர்களின் உண்மை எனப்படும் 'சொரூப இலக்கணம்' ஆகும்.

*"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்*
*கினத்தியல்ப தாகும் அறிவு"*[28]

என வள்ளுவரும் 'சார்ந்ததன் வண்ணமாதலை'க் குறிப்பிடுவர். உயிரின் தன்னியல்புகளில் (Essential Nature) இதுவே முதன்மையானது.

மணிவாசகப் பெருமான், இறைவனது அருமைப்பாட்டையும், பேருதவியையும் அறியாமல், இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபட்டு அதன் சார்பிலேயே கிடந்துழலும் தம் நெஞ்சுக்குக் கூறுவார்போல் அருளும் திருப்பாட்டு ஒன்று :

*"வேனில்வேள் மலர்க்கணைக்கும்*
*வெண்ணகைச்செவ் வாய்க்கரிய*
*பானலார் கண்ணியர்க்கும்*
*பதைத்துருகும் பாழ்நெஞ்சே!*
*ஊனெலாம் நின்றுருகப்*
*புகுந்தாண்டான் இன்றுபோய்*
*வானுளான் காணாய்நீ*
*மாளாவாழ் கின்றாயே!"*[29]

இதற்கு மு. கதிரேசச் செட்டியார் கூறும் விளக்கவுரை வருமாறு :

*"காமன் எய்யும்மலர் அம்பிற்கும், வெள்ளிய பற்களையும் சிவந்த வாயையும், கரிய குவளை மலர் போன்ற கண்களையும் உடைய மகளிர்பொருட்டும், பதைப்புற்றுக் கரையும் பயனற்ற நெஞ்சமே! உடல் உறுப்புக்கள் எல்லாம் உருகும்படி உட்புகுந்து நிலைத்து நின்று ஆண்ட எம்பெருமான், இப்பொழுது பெயர்ந்து சென்று நுண்ணிய பரவெளியில் உள்ளான்! நீ கண்டிலை? (கண்டும்) கெட்டொழியாமல் இன்னும் வாழ்கின்றனையே?" என்பது பொருள்.*

*"சீவபோதம் முனைத்திருக்குங்கால் சிவபோதம் புலப்படாமையும், சிவபோதம் மேற்பட்டிருக்குங்கால் சீவபோதம், விளக்கின்முன் இருள்போல ஆற்றல் கெட்டு ஒழிதலும் பெரியோர் அனுபவத்திற் கண்டவை . . . . இங்ஙனம் உயிரறிவு முனைத்திருக்குங்கால், ஆண்டுப்*

புலப்படாமல் இருந்த இறைவனது வியாபகநிலை, பண்டைத் தவத்தால் விளக்கம் உற, அந்நிலை கருதியே இறைவன் வெளியிடத்திருந்து உட்புகுந்ததாகக் கூறியருளினர் . . . . அருவருக்கத்தக்க ஊனுடம்புள் புகுந்தாண்டான் என்றது, இறைவனது பேரருள் உடைமையைப் புலப்படுத்தற்கு என்க. உட்புகுந்த அந்நிலை, பற்றிக் கொள்ளுதற்கு எளிதாக இருந்தும், நெஞ்சம் அது செய்யாமல் தவறிவிட்டது என்பது குறிப்பு. அருளுடைமையால் அன்று எளிதிற் புகுந்தாண்ட இறைவன், இன்று தம்மைவிட்டு, மனத்திற்கு எட்டாத நுண்ணிய பரவெளியில் மறைந்து விட்டானே என்று இரங்குவார், 'இன்றுபோய் வானுளான்' என்றார் . . . இறைவனைப் பிரிந்த நிலையில் நெஞ்சம் கெட்டொழிதல் அல்லது வருந்தி வாடியிருத்தல் வேண்டுமேயன்றி வாழ்வில் தலைப்படல் கூடாததாகவும் அதற்கு மாறாகத் தம் நெஞ்சம், வாழ்க்கை நலத்தில் சேறலை வெறுத்து, 'வாழ்கின்றாயே' என்று இரங்கிக் கூறினர்!"[30]

- என நயவுரையும் தருவர்.

இதனால், உலக வாழ்க்கையில் ஈடுபடும்போது, உயிரானது, அத்தன்மையதாகவும்; இறையருளில் திளைக்கும்போது அதன் இயல்பிற்றாகவும் விளங்கும் என்பது போதரும்.

அன்றியும், அடிகள்,

"மண்ணி லேபிறந் திறந்துமண் ணாவதற்
கொருப்படு கின்றேனை"

"பொத்தை ஊன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும்
பொழுகிய பொய்க்கூரை
இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற்
சுழித்தலைப் படுவேனை"[31]

என மொழிவதும் இவண் கருதத்தகும்.

இவற்றை யெல்லாம் உட்கொண்டே மெய்கண்டாரும்,

*"யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்*
*சத்தே அறியா(து); அசத்(து)இல(து) அறியா(து)*
*இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா"*[32]

என அருளினாராதல் வேண்டும்.

*"ஆன்மாவும் இறைவன் போலவே வியாபகப் பொருள்தான்; ஆனால்,* **ஆணவமலம்** *இறைவனது வியாபகத்தைத் தடுக்கமாட்டாது, உயிரின் வியாபகத்தையே தடுக்கின்றது - மறைக்கின்றது. அதனால், பாசியால் மூடப்பட்ட நீர்போல ஆன்மா முதலில் தோன்றாமலே இருந்து, மாயையாகிய உடம்பு சேர்ந்தபோது, கல் விழுந்த இடத்தில் பாசி நீங்க நீர் சிறிது தோன்றுதல் போல, உடம்பளவில் அறிவு, இச்சை, செயல்கள் சிறிதே விளங்கப்பெற்று, அணுப்போலத் தோன்றுகின்றது; ஆன்மா இங்ஙனம் வியாபகப் பொருளாயினும், இறைவனது வியாபகத்துள் அடங்கி உள்ளதே என்பது"*[33]

சைவ சித்தாந்தக் கொள்கை என்பர் கங்காதரன்.

*"'அறியாமை', உயிர்களுக்கு இயற்கையன்று! அஃது 'ஆணவம்' என்னும் இயற்கை மலத்தால் உயிர்களுக்குள்ள செயற்கையாகும். உடம்போடு கூடி உலகத்தில் வாழ்ந்துவரும் பிறப்பு நிலையில், உடம்பும் உலகும் அறிவறியாமையை நீக்கி அறிவை வளர்த்து வருவனவாக உள்ளன. இவ்வாறு அறியாமையினையும், முறையே வளர்ந்து வரும் சிற்றறிவு சிறுதொழில் என்பவற்றையும் உடையனவாய், 'யான், எனது' என்னும் செருக்கோடு கூடி, வினைகளைச் செய்து, அவற்றின் பயன்களை முதல்வன் ஆணையால் பெற்றனவே உயிர்கள்"*[34]

என்பர் க. வச்சிரவேல் முதலியார்.

உயிர்கள், வினைக்கு ஈடாக எடுக்கும் பிறப்புக்கள் நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதத்தையும் உடையன. எழுவகைப் பிறப்புக்களில் 'மக்கட்பிறவி'யே

சிறந்தது. ஏனெனில் அதுவே, முதல்வனை அறிந்து வழிபட்டு, வீடுபேறு அடைதற்குச் சிறந்த கருவியாக உள்ளது.

மேலே கூறியவாறு, இயற்கையிலே ஆணவ மலத்தால் தளைக்கப்பட்டு, அறிவும் செயலும் இன்றிச் சடம் போலக் கிடந்த எல்லா உயிர்கட்கும் இறைவன், மாயையினின்றும் சூக்கும சரீரத்தைப் படைத்துக் கூட்டுவிப்பான்.

> *"அந்தச் சூக்குமசரீரத்தைப் பெற்ற உயிர்கள், படலத்தால் மறைக்கப்பட்டு ஒளியிழந்த கண்களையுடைய குருடர், ஒருகோலைப் பெற்றது போன்ற நிலைமையை அடைந்து, மனம் ஒன்றே கருவியாக, விரும்புதல் வெறுத்தல்களைச் செய்து, அதனானே முதற்கண் வினையைத் தேடிக் கொள்ள, அந்த வினைதான் உயிர்கள்தோறும் அவ்வவற்றிற்குள்ள அறிவுநிலை காரணமாகப் பலவகைப்படுதலால், அவற்றிற்கு ஏற்ற தூல சரீரங்களையும், புவன போகங்களையும், இறைவன் பின்னர்ப் படைத்துக் கொடுக்கப்பெற்று, மீண்டும் இறப்பும், பிறப்பும் ஆகிய சுழலிற் பட்டுச் சுழல்வவாயின"*[35]

என உயிர்களின் முதற் பிறப்பு முறை பற்றிக் கூறுவர் சி. அருணைவடிவேலு முதலியார்.

இம் முதற்பிறப்புப்பற்றி மணிவாசகர்,

> *"விச்ச தின்றியே விளைவு செய்குவாய்"*

என்பதால் உணர்த்துகின்றார். இதனைத் தொடர்ந்து,

> *". . . . . விண்ணு மண்ணக முழுவதும் யாவையும்*
> *வைச்சு வாங்குவாய்!"*[36]

என்று அருளியது, அடுத்தடுத்து வரும் பிறப்பு - இறப்புக்களைக் குறிப்பதற்கேயாம்.

"வினைப்பயனாலே பிறவி உண்டாதல்" குறித்து மணிவாசகர்,

> *"வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று*
> *போதுநான் வினைக்கேடன் என்பாய் போல*
> *இனையன்நான் என்றுன்னை அறிவித் தென்னை*
> *ஆட்கொண்டு"*[37]

என்பதால் குறிப்பிடுவர். இத்தகைய வினை, தம்மை அணுகாவண்ணம் காப்பாற்ற, இறைவனை இறைஞ்சுகின்றார்.

*". . . . . . . . . . என் தீயவினை*
*நாளுமணு காவண்ணம் நாயேனை ஆளுடையான்"*[38]

என்பது மணிவாசகர் திருவாக்கு.

உயிர்களைப் பற்றியிருக்கும் 'மலம்', தம்மைப் பற்றாதிருக்க அதனைப் போக்கி அருள் செய்தவன் அம்பலவாணன் என்றும் கூறுகின்றார் மணிவாசகர் :

*"பாங்கினொடு பரிசொன்றும் அறியாத நாயேனை*
*ஓங்கியுளத் தொளிவளர உலப்பிலா அன்பருளி*
*வாங்கி***வினை மலமறுத்து** *வான்கருணை தந்தானை*
*நான்குமறை பயில்தில்லை அம்பலத்தே கண்டேனே"*[39]

என்பது அடிகள் அருளிய திருப்பாட்டு.

மனித்தப் பிறவி ஒன்றினாலேயே, முதல்வனை அறிந்து, வழிபட்டு, அவனடி அடைய முடியும் என்பதை, மணிவாசகர்,

*"எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்*
*மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"*[40]

என்பதால் குறிப்பிடுவர்.

இதற்கு ஔவை சு. துரைசாமி கூறும் விளக்கவுரை வருமாறு :

*"வினையின் செயல்வகையைக் காணும்முகத்தால் தாம் பண்டு பிறந்திறந்து கழித்த பிறப்புக்களை உணர்ந்து கூறுவது ஒருவகையால் சான்றோர் கூறும் 'தம்மை உணரும் நெறி'யுமாம்.*

*'தம்மை யுணர்ந்து தம்முடைய தன்னுணர்வார்' சான்றோர் என்பர் மெய்கண்ட தேவர் . . . . வினையால் பல்வகைப் பிறப்புக்கள் உண்டாகியதும், அவற்றின் நீங்கி அறிவு சிறந்ததும் ஆகிய இவற்றைச் சிவபரம்பொருளின் திருவருள் கண்ணாகக் கண்ட தமக்கு, இனி, அதன் தொடர்பு நீங்கிப் பிறவாநிலை பெறுதல் விரைவில் கைகூடுதல்பற்றி, 'எம்பெருமான் மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடு உற்றேன்' என்று உரைக்கின்றார்.*

'இனி, ஒருகால் பிறப்பு உண்டாயின், அவ்வினையைக் கெடுத்துப் பிறவாநிலையருளுதல் வேண்டும், பல பிறப்பும் பிறந்து இளைத்தேன், இனியும் பிறத்தற்கு ஆற்றேன்' என்பாராய் 'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்' என்று குறையிரந்து நிற்கின்றார். எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்த அளவில் திருவருள் கண்ணாகப் பெற்ற பேரறிவால், அவன் திருவடி கண்டு இன்புறும் சிறப்பால் பிறவாத தன்மை தமக்கு வந்தமை தோன்ற, 'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்' என்றவர், மேலும் 'எம்பெருமான், மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன் என்பதனால் அறியலாம்'[41]

இவண் கூறிய அனைத்தும் உள்ளடக்கி நிற்பன, பின்வரும் சைவ சித்தாந்தச் சாத்திரநூற் பகுதிகள் :

"இருவினையில் போக்கு வரவு புரிய"
"வித்துண்டா மூலம் முளைத்தவா"[42]

". . . . ஞானத்தின்
கண்ணை மறைத்த கடியதொழில் ஆணவத்தால்
எண்ணும் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும் - உண்ணாடிக்
கட்புலனால் காணார்தம் கைக்கொடுத்த கோலேபோல்
பொறபுடைய மாயைப் புணர்ப்பின்கண் - முற்பால்
தனுகரண மும்புவன மும்தந் தவற்றால்
மனமுதலா வந்தவிகா ரத்தால் - வினையிரண்டும்
காட்டி, அதனால் பிறப்பாக்கி . . . ."[43]

"மலம்மாயை கன்மம் மாயே
　　யந்திரோ தாயிமன்னிச்
சலமாகும் பிறப்பி றப்பில்
　　தங்கிஇத் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டம்
　　கறங்கென நிமிடத் தின்கண்
அலமாரும் இறைவன் ஆணை
　　யால்உயிர் நடக்கு மன்றே"[44]

### மூவகை அவத்தைகள்

உயிர், தூலசித்தாதலால், அஃது இயல்பாகவே, பாசத்தால் கட்டுண்டு கிடத்தல் அதன் 'பொது இயல்பு' ஆகும். இந்நிலை ஒருகாலத்தில் நீங்குவதேயாகும். உயிர் ஆணவமலத்தோடு மட்டும் இருப்பது; பின்பு 'மாயை, கன்மங்களோ'டு இருப்பது; அடுத்து, மும்மலங்களும் நீங்கப்பெற்று, இறைவன் திருவடியில் இன்புறுவது எனும் மூன்று நிலைகளையுடையது. இந்த நிலைகளை 'அவத்தைகள்' என்று கூறுவர்.

உயிர், ஆணவமலத்தோடு மட்டும் இருக்கும் நிலை 'கேவலம்' எனப்படும். கேவலம் - தனிமை. இந்நிலையில், உயிருக்கு 'அறிவு, இச்சை, செயல்' இல்லை; உடம்பும் இல்லை; உட்கருவி, செயல்களாகிய 'மனம்' முதலியனவும் இல்லை. எனவே, வினைகளை ஈட்டுவதும் இல்லை; இன்ப துன்பங்களை நுகர்வதும் இல்லை. அறியாமையே வடிவமாய்க் கிடக்கும் இந்நிலைக்கு 'இருள்நிலை' என்று பெயர்.

இருள் நிலையாகிய கேவலத்தில் மூழ்கிக் கிடக்கும் கொடுமையைக் கண்டு, முதல்வன், இரக்கங் கொண்டு, கருணை காட்டுவன். ஆணவமலத்தைப் போக்குதற்பொருட்டு 'மாயை, கன்மம்' மலங்களைக் கூட்டுவிப்பன். அதனால், உயிரானது, உடல், பொறி, கரணங்கள் இவற்றைப் பெற்று, 'விண், மண், பாதலம்' எனும் மூவுலகங்களிலும் 'புல்லாய்ப் பூண்டாய்' என மணிவாசகர் மொழிவது போல, எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்து உழலும். இந்நிலைக்குச் 'சகலம்' என்று பெயர். சகலம் - கலையோடு கூடுதல். இதனை 'மருள்நிலை' என்றும் கூறுவர்.

இவ்வாறு பிறக்கும் உயிரானது, இன்ப துன்பங்கட்கு ஆட்பட்டு, விருப்பு, வெறுப்புக்களை அடைகின்றது. படிநிலைகளால் உயிர் மேம்படும் நிலை வருங்கால், முதல்வன், குருவாகி வந்து மெய்யுணர்வை அளிப்பன். இதனால், மலபரிபாகம் பெற்று, முதல்வனது திருவடிப்பேறு பெறுகிறது உயிர். இந்த நிலையைச் 'சுத்தம்' அல்லது 'அருள்நிலை' என்பர்.

இங்ஙனம் அளவற்ற உயிர்கள் பலவும், மூன்று வகையினவாய் உள்ளன என்பது சித்தாந்தம்.[45]

### மூவகை உயிர்கள்

உயிர்களுள், 'ஆணவம், கன்மம், மாயை' ஆகிய இம் மூன்று மலங்களும் உடைய உயிர்கள் 'சகலர்' என்றும்; 'ஆணவம், கன்மம்' எனும் இரண்டு மட்டுமே உடைய உயிர்கள், 'பிரளயாகலர்' என்றும்; 'ஆணவம்' ஒன்று மட்டுமே உடைய உயிர்கள் 'விஞ்ஞானகலர்' என்றும் கூறப்பெறும்.

இவ்வாறு உயிர்கள் பல நிலைகளை அடைவன, மலத்தொடர்பாதலின் மேற்சொன்னவை யெல்லாம் அவற்றின் 'பொதுவியல்பு' ஆகிய 'தடத்த இலக்கணம்' எனப்படும்.[46]

மணிவாசகப் பெருந்தகை, மேலே கூறிய மூவகை உயிர்களைப் பற்றியும் குறிப்பினால் சுட்டுகின்றார் :

"**மும்மலங்கள்** *பாயும் கழுக்கடைகாண்*"

"**மும்மலப்பழ வல்வினைக்குள்** *அழுந்தவும்*"

"*உள்ள* **மலமூன்றும்** *மாய*"

"**மும்மை மலம்** *அறுவித்து*"[47]

என்று வரும் திருவாசகத் தொடர்கள், மூன்று மலமும் ஒருங்கேயுடைய **சகலரைக்** குறித்தன.

'ஆணவத்தை', 'ஆங்காரம்', 'சித்தமலம்', 'பழமலம்', 'இருள்' முதலான சொற்களால் குறிப்பிடுகின்றார் மணிவாசகர்.[48]

'வினையின் தொகுதி'[49] என்று 'வினை'யைக் குறிப்பிடுவதால், 'கன்மத்'தையும் கூறியுள்ளார் அடிகளார் எனலாம்.

மேலே கூறிய மூன்று வகையான உயிர்களில், 'விஞ்ஞானகலர்', 'பிரளயாகலர்' இருவருக்கும் சிவபெருமான், தானே 'தீக்கை'யைச் செய்வான். அதனால், அதற்கு 'நிராதர தீக்கை' என்று பெயர். இவருள்ளும், விஞ்ஞானகலருக்குப் புறத்துத் தோன்றுதல் இன்றி, உயிர்க்குயிராய் உள்நின்றே செய்வன். அவ்வாறு செய்தல், 'தன்மையில் நின்று அருள் புரிதல்' எனப்படும். உண்மை ஞானத்தை அருளுவதாகிய தீக்கையைச் சிவபெருமான் அதனைப் பெறுதற்குரியோரது 'சத்தி நிபாதநிலை'யை நோக்கியே செய்வன். சத்தி - அருட்சத்தி; நிபாதம் - பதிதல். விஞ்ஞானகலர், பிரளயாகலர் என்னும் இருதிறத்தார்க்குச் 'சத்தி நிபாதம்', 'தீவிரம், தீவிரதரம்' என்னும் இருவகையிலே நிகழும். இவற்றில், 'தீவிரதர சத்தி நிபாதம்' உடையவர்க்குச் செய்யும் 'ஞான தீக்கை', அனைத்துலகங்களையும் கடந்து பரமசிவனோடு இரண்டறக் கலக்கும் பரமுத்தியையே கொடுக்கும்.[50]

மணிவாசகப் பெருந்தகைக்குச் சிவபெருமானே வலிய வந்து, நேர்நின்று, 'ஞானதீக்கை' அருளினன். இதனை அடிகள், தம் திருவாசகத்தில் பல்வேறிடங்களிலும் குறிப்பிடுவர்.

"*நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி*"

*"அந்தண னாகி யாண்டுகொண் டருளி"*

*"தேனமர் சோலைத் திருவா ரூரில்*
**ஞானந் தன்னை நல்கிய நன்மையும்**"

*"அவனெனை யாட்கொண் டருளினன்"*

*"அறைகூவி யாட்கொண் டருளி"*

*"அருபரத் தொருவன் அவனியில் வந்து*
**குருபரன்** *ஆகி அருளிய பெருமை"*[51]

என்பன சில சான்றுகள்.

மேலே கூறிய கருத்துக்களுக்கு அரண் செய்வன, பின்வரும் பாடல்கள் :

*"கேவல சகல சுத்த மென்றுமூன் றவத்தை யான்மா*
*மேவுவன் கேவ லந்தன் னுண்மைமெய் பொறிக ளெல்லாம்*
*காவலன் கொடுத்த போது சகலனா மலங்க ளெல்லாம்*
*ஓவின போது சுத்த முடையனுற் பவந்து டைத்தே"*[52]

என்பது சித்தியார். இதன்கண், முன்னர்க் கூறிய 'கேவலம்' முதலான அவத்தைகளின் இயல்பு கூறப்பட்டுள்ளது.

மேலும், மேலே கூறிய மூவகை உயிர்கள் பற்றியும், விஞ்ஞானகலர், பிரளயாகலர் ஆகிய இருவர்க்கும் 'தீவிர தர சத்தி நிபாதம்' நோக்கி, இறைவன் ஞானதீக்கை அருளுவன் என்பதையும் சித்தியார், பின்வருமாறு பகரும் :

*"உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்றா*
*முயரும்விஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலர்*
*நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயை*
*நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்*
*கரையிலருட் பரன்றுவிதா சத்திநிபா தத்தாற்*
*கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம வொப்பிற்*
*றரையிலா சான்மூர்த்தி யாதார மாகித்*
*தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்"*[53]

திருவருட்பயனில் வரும்,

*"திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி*
*யொருமலத்தா ராயு முளர்"*

*“மூன்றுதிறத் துள்ளாரு மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை”*[54]

என்ற பாடல்களும்,

*“மூவகையா ருயிர்வருக்க மலத்தார் கன்ம
மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே”*[55]

என்ற சிவப்பிரகாசப் பகுதியும் இவண் ஒப்புநோக்கத்தகுவன..

மெய்கண்டதேவர்,

*“மெய்ஞ்ஞானந் தானே வினையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்”*[56]

என்று அருளிச் செய்தார்.

**முதல்வன் செய்யும் ‘உபகாரம்’**

முதல்வன், உயிர்களோடு என்றும் பிரிப்பின்றி இயைந்து நிற்கின்றான். பிரிந்து நில்லாத அவ்வுறவே ‘அத்துவிதம்’ எனப்படும். முதல்வன், உயிர்களோடு அத்துவிதமாய் நின்று, அவை பொருள்களை அறிந்து நுகரும்படிச் செய்கின்றான். அவ்வாறு செய்யும் அவனது செயல் ‘காட்டும் உபகாரம்’ எனவும், ‘காணும் உபகாரம்’ எனவும் இருவகையாக வைத்து விளக்கப்படும்.

**(அ) காட்டும் உபகாரம்**

கண்ணொளி, தானே தனியே சென்று பொருள்களைக் காணமாட்டாது. தனியே சென்று காணவல்லதாயின், இருளில் இருக்கும்பொழுதும் அது, பொருளைக் காணுதல் வேண்டும். அஃது இயலாமையால், கண்ணொளி, தானே பொருளைக் காணமாட்டாது என்பது விளங்கும். எனவே ‘விளக்கொளி’ போன்ற வேறு ஓர் ஒளியின் துணை வேண்டப்படும். வேறோர் ஒளியோடு கூடியபோதே கண்ணொளி விளங்கிப் பொருளைக் காணும் நிலைபெறும். கண்ணுக்குக் கூறியது உயிருக்கும் பொருந்தும். உயிரினது அறிவும், கண்ணொளி போல ஒருதுணையைப் பெற்றே அறியவல்லது. அதனாலேயே இறைவன், உயிரோடு இயைந்து நின்று அதன் அறிவை விளக்கி வருதல் இன்றியமையாததாகின்றது. முதல்வனது அறிவு, உயிரறிவில் கலந்து நின்று, அறியாமையை நீக்கி, அதனை விளக்கி, யாதொன்றையும் அறியும் தகுதியை அடையச் செய்கிறது. இதுவே ‘காட்டும் உபகாரம்’ எனப்படும்.

### (ஆ) காணும் உபகாரம்

விளக்கொளி, கண்ணொளியில் மட்டும் பொருந்தினாற் போதாது. கண்ணாற் காணப்படும் பொருளிலும் அவ்வொளி சென்று பொருந்துதலும் வேண்டும். அஃதாவது விளக்கொளியானது, பார்க்கப்படும் பொருளிலும் பொருந்தி நிற்றல் வேண்டும். அப்பொழுதுதான் கண்ணொளி, பொருளைக் காணவல்லதாகும். அதுபோல இறைவன், உயிரின் அறிவை விளக்கி, அறியும் நிலைமையை உண்டாக்குதலாகிய காட்டும் உபகாரத்தை மட்டும் செய்தாற் போதாது; அவ் அறிவு சென்று பொருளை அறிதற்கு, இறைவன் தானும் உடன் நின்று அப்பொருளை அறிதல் வேண்டும். இவ்வாறு உயிரினது அறிவு, பொருள்களை அறியும்படி இறைவனும் அதனோடு உடன்நின்று அவற்றை அறிதலே 'காணும் உபகாரம்' எனப்படும்.[57]

மணிவாசகர் இவ்விரண்டு 'உபகாரங்கள்' பற்றியும் ஆங்காங்கே எடுத்து மொழிகின்றார் :

*"அஞ்ஞானந் தன்னை அகல்விக்கு நல்லறிவே"*

*". . . . . . நாயி னேற்கே*
*காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னும்*
*கேளா தனவெல்லாம் கேட்பித்து"*

*"வாரா வழியருளி வந்தென் உளம்புகுந்த*
*ஆரா அமுதாய்"*

*"பரிந்து வந்து பரமா னந்தம்*
*பண்டே அடியேற் கருள்செய்ய"*[58]

என்றெல்லாம் பாடும் மணிவாசகர், தமது 'அற்புதப்பத்து' எனும் பகுதியில்,

*"நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து*
**நானென தெனும்மாயக்**
*கடித்த வாயிலே நின்றுமுன்* **வினைமிகக்**
*கழறியே திரிவேனைப்*
*பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய*
*அரும்பொருள், அடியேனை*
*அடித்த டித்துவக் காரமுன் தீற்றிய*
*அற்புதம் அறியேனே"*[59]

என்று அருளியதோடன்றி, இப்பகுதி முழுவதிலுமே இறைவன் செய்த 'காட்டும் உபகாரத்'தைப் பலபடப் போற்றுகின்றார்.

இனிப் பின்வருவன, 'காணும் உபகாரத்'திற்குச் சான்றுகள் :

*"எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத்*
*தானே யாகிய தயாபரன"*

*"மருவிஎப் பொருளும் வளர்ப்போன்"*

*"பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கும்*
*ஒழிவற நிறைந்து மேவிய பெருமை"*

*"ஊனெலாம் நின்றுருகப் புகுந்தாண்டான்"*

*"ஊனாய் உயிராய் உணர்வாய்என் னுட்கலந்து*
*தேனாய் அமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்"*

*"ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான்"*[60]

இவண் கூறப்படும், 'காட்டும் உபகாரம்', 'காணும் உபகாரம்' ஆகியன பற்றி அருளாளர்களும் எடுத்துக் கூறியுள்ளனர்.

*"காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே*
*காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே"*[61]

என நாவரசரும்;

*"அறிவானுந் தானே அறிவிப்பான் தானே*
*அறிவாய் அறிகின்றான் தானே - அறிகின்ற*
*மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாயம்*
*அப்பொருளும் தானே அவன்"*[62]

எனக் காரைக்காலம்மையாரும் கூறியன ஒப்புநோக்கத்தகும்.

இவ் உபகாரங்களைக் குறித்து மெய்கண்டார்,

*"காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்*
*காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின் . . . ."*[63]

என்பதால் குறிப்பிடுவர்.

*"காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்*
*காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்*
*கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல*
*ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன்"*

*". . . . . சிவனே யெல்லா மறிந்தறி வித்து நிற்பன்"*[64]

எனச் சித்தியாரில் வருவன நோக்கத்தகும்.

## ஆன்மப் பயணம்

இவ் உலகவாழ்வில் சிக்கிச் சுழலாமல், முழுமுதற் பரம்பொருளாகிய சிவபெருமானின் திருவடி நீழலில் இன்புறுதற்காக மேற்கொள்ளும் பயணத்தை ஆன்மப் பயணம்' எனலாம். மணிவாசகரின் 'ஆன்மப்பயணத்'தின் தொடக்கமாக அமைந்தது, 'திருப்பெருந்துறை இறைக்காட்சி'யே எனலாம்.

> *"அமைச்சராக இருந்த காலத்திலேயே வாழ்வு முழுவதையுங் கண்டு, அதன் நெளிவு சுளிவுகளை அறிந்து, முற்றிலும் அனுபவம் நிறைந்து அவற்றில் ஒரு சமநோக்கைப் பெற்று, முழுத்தன்மையுடன் விளங்கினார் (மணிவாசகர்) என்றே நினைக்க வேண்டியுளது. இதனாலேயே* **திருப்பெருந்துறையில்** *எழுந்தருளியிருந்த ஞானாசிரியன், ஒரு சொல்லைச் சொன்னவுடன், முழு மாற்றத்தைப் பெற முடிந்தது. சமநோக்கு என்பது நிரம்பியிருந்த காரணத்தால், ஞானாசிரியனின் சொற்கள், மூடியைத் திறந்து விட்டது போல் ஆகிவிட்டது! . . . திருவாதவூரரின் திருப்பெருந்துறைப் பயணம், வெறும் குதிரை வாங்கப் புறப்பட்ட 'யாத்திரை' என்று கூற முடியாமல், அவருடைய 'ஆன்ம யாத்திரை' என்று கூறுமுறையில் அமைந்துள்ளது!"*[65]

என அ.ச. ஞானசம்பந்தன் கூறுவது இங்கு எண்ணத்தக்கது.

குருந்தமரத்தடியில் 'குருவாக' எழுந்தருளிய பரமனது திருவருளைப் பெற்றதுமே, மணிவாசகர், வீடுபேறு பெறுதற்கான முழுத்தகுதியும் பெற்று விடுகிறார் எனலாம். எனினும், இறைவனின் திருவருட் குறிப்பு, மணிவாசகர் இம் மண்ணுலகத்தே இன்னும் சிறிதுகாலம் இருக்க வேண்டும் எனக் கருதியது போலும்! இதனை மணிவாசகரே பலவிடங்களிலும் குறிப்பிட்டுச் செல்கின்றார் :

> *"பரமா னந்தப் பழங்கட லதுவே!*
> *கருமா முகிலிற் றோன்றித்*
> **திருவார் பெருந்துறை** *வரையி லேறி . . . .*
> *இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்து . . .*
> *அண்டத் தரும்பெறன் மேகன் . . .*

*அற்புதமான அமுத தாரைகள்*
*எற்புத் துளைதொறும் ஏற்றினன்!”*[66]

எனத் திருப்பெருந்துறையில் ஈசன் தமக்கருளிய திறம் குறித்துப் பேசும் அடிகள்,

*“. . . நீயும் அங்கெழுந் தருளி,* **இங்கெனை**
*இருத்தி னாய்!முறையோ?”*

*“. . . என்னை ஈங்கொழித்து”*[67]

எனப் பதறியழுகின்றார். இறைவனைப் பிரிந்த துயர் தாங்காது,

*“இருதலைக் கொள்ளியி னுள்ளெறும்*
*பொத்து நினைப்பிரிந்த*
*விரிதலை யேனை!”*[68]

என அரற்றுகின்றார். மீண்டும் பாசங்கள் தம்மைப் பற்ற, அதனால் ஐம்புலன்களின் சேட்டையால் பொய்ந்நெறிக்கே போக வேண்டி வருமோ என்ற பொருளில்,

*“புலன்கள் திகைப்பிக்க யானும்*
*திகைத்திங்கொர் பொய்ந்நெறிக்கே*
*விலங்குகின் றேனை விடுதிகண்டாய்!”*[69]

என்றும் வேண்டுகின்றார்.

*“யானே பொய்!என் நெஞ்சும்*
*பொய்!என் அன்பும் பொய்!”*[70]

என்று கூறும் நிலைக்கு வந்து விடுகின்றார்.

இனி, ‘எல்லாமே அவன் செயல்’ என்ற முடிவுக்கு வந்து,

*“வேண்டத் தக்க தறிவோய்நீ! வேண்ட*
*முழுதுந் தருவோய்நீ!*
*வேண்டும் அயன்மாற் கரியோய்நீ* **வேண்டி**
**என்னைப் பணிகொண்டாய்!**
*வேண்டி நீயா தருள்செய்தாய்! யானும்*
*அதுவே வேண்டின் அல்லால்*
*வேண்டும் பரிசொன் றுண்டென்னில் அதுவும்*
**உன்றன் விருப்பன்றே!**”[71]

என அவனிடமே விட்டு விடுகின்றார்!

*“அன்றே என்றன் ஆவியும் உடலும்*
*உடைமை எல்லாமும்*
*குன்றே அனையாய்! என்னைஆட் கொண்ட*
*போதே கொண்டிலையோ?”*[72]

என்று தம்மை முழுதும் அவனிடம் ஒப்படைத்து விட்டதையும் சுட்டிக் காட்டுகின்றார்.

இறைவன், தம்மைத் தனியே விட்டுவிட்டு மறைந்தது, அவனது கருணைக் குறைவினாலன்று; தமது பிழைதான் காரணம் என்று எண்ணுகின்றார் மணிவாசகர்.

*“அரைசே! அறியாச் சிறியேன்*
*பிழைக்கஞ்சல்!”*

*“பாடிற்றி லேன்!பணி யேன்!”*

*“என்பிழைக்கே குழைந்து”*[73]

எனப் பிழை செய்தவர் போல் மன்றாடுகின்றார். “இறைவா! நீயே எனக்கு அருள் செய்யாமற் போனால், யார்தாம் அருளுவர்?” என்பாராய்,

*“அருளா தொழிந்தால் அடியேனை அஞ்சேல்*
*என்பார் ஆர்?”*[74]

என முறையிடுகின்றார்.

இறுதியாகச் சிவபெருமானிடம்,

*“. . . . . அம்பலத்*
*தாடும்நின்கழற் போது நாயினேன்*
*கூடவேண்டும்நான் போற்றி இப்புழுக்*
*கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்*
*வீடவேண்டும்நான் போற்றி, வீடுதந்*
*தருளு போற்றி!”*[75]

என வீடுபேறு தந்தருளுமாறு வேண்டுகின்றார். அடிகளின் வேண்டுதல் பலனளிக்கின்றது. தமது ஆணவமலத்தைப் போக்கிச் சிவப்பேற்றில் ஆளாக்கியதாக எண்ணி, அவனின் பெருங்கருணைத் திறம் வியந்து போற்றுகின்றார் :

*“முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்*
*பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்*

*சித்தமலம் அறுவித்துச்* **சிவமாக்கி** *எனையாண்ட*
*அத்தன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே!"*[76]

என்பது மணிவாச்கர் வாக்கு.

திருவாசகத்தில் 'யாத்திரைப்பத்து' என்றே ஒரு பகுதி உள்ளது. அதில்,

*"போவோம் காலம் வந்ததுகாண்*
*பொய்விட் டுடையான் கழல்புகவே"*

*". . . . சிவபுரத்துத் . . . . திருத்தாள்*
*சென்று சேர்வோமே!"*[77]

என்று அடிகள் கூறுவதும் கருதத்தக்கது.

*"திருவாதவூரர் என்ற பாண்டிப் பேரரசின் தலைமை அமைச்சரை ஓர் 'ஆன்ம யாத்திரை' புறப்படுமாறு செய்து, திருப்பெருந்துறை சேர்ந்தவுடன் அவரை மணிவாசகராக மாற்றி, நம் போன்ற ஆன்மாக்கள் எத்துணைத் துன்பங்களை வழியில் சந்திக்குமோ அவை அனைத்தையும் மணிவாசகரைச் சந்திக்கச் செய்து, அவற்றால் பெறும் துயரத்தையும் பாடச் செய்து, இத்துணைத் துன்பங்களைச் சந்தித்தாலும் இறுதியில் உய்கதி உண்டு என்பதைக் காட்டி, உய்கதி பெற்றவர்கள் எத்தகைய இன்பத்தை அனுபவிப்பார்கள் என்பதையும் எடுத்து விளக்குமாறு செய்து, துன்பங் கண்டு கலங்க வேண்டியதில்லை என்பதையும் திடமாகக் கூறுமாறு செய்து,* **இறையனுபவத்தின் பிழிவாக இருக்கும் திருவாசகத்தையும்** *அருளிச் செய்யுமாறு செய்து, இவ்வுலகத்தில் வாழும் உயிர்கட்குத் தன் பரங்கருணையால் இறைவன் உதவினான் என்று கூறலாம்!"*[78]

என, 'ஆன்மப் பயணம்' குறித்து அ.ச. ஞானசம்பந்தன் கூறுவதும் இவண் எண்ணத்தகும்.

இவற்றையெல்லாம் உள்ளடக்கி,

*"அயரா அன்பின் அரன்கழல் செலுமே"*[79]

என மெய்கண்டார் அருளிச் செய்தார்.

"மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்
மாறாத சிவாநுபவ மருவிக் கொண்டே!"[80]

என்பது அருணந்தி சிவாசாரியார் கூற்று.

மணிவாசகரின் 'ஆன்மப் பயணம்' குறித்து இராதா தியாகராசன் தமது ஆய்வு நூலில் விரிவாக ஆராய்ந்துள்ளார் என்பதும் இவண் குறிக்கத்தகும்.[81]

## முடிபுகள்

இவ் இயலின் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களில் 'பசு' அல்லது 'உயிர்' என்பதும் ஒன்று;
2. மணிவாசகர், தம் திருவாசகத்தில் 'உயிர்' என்ற சொல்லையும், 'பசு' என்ற சொல்லையும் எடுத்தாள்கின்றார்;
3. உயிர்களும் இறைவனைப்போல் காலங்கடந்தவை; எனினும் அவை, இறைவனுக்கு அடிமை;
4. முதல்வன் ஒருவன்; உயிர்கள் பலப்பல. மணிவாசகர், பல்வகை உயிர்த்தொகுதிகளை எடுத்தியம்புகின்றார்;
5. உயிர், 'சதசத்து' எனப்படும்; அது, சார்ந்ததன் வண்ணமதாகச் செயற்படும்; அதுவே 'சொரூப இலக்கணம்' ஆகும்;
6. மணிவாசகர், உயிரின் இத்தன்மையைத் தம் பாடல்களில் கூறுகின்றார்;
7. வினைப்பயனால் ஏற்படும் பிறவிகள் குறித்தும் மொழிகின்றார்;
8. 'கேவலம், சகலம், சுத்தம்' எனும் வகையில் உயிர்கள் மூவகைப்படும்; மலங்களின் சேர்க்கையால், 'சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர்' என்ற பிரிவும் சொல்லப்படும்; இவற்றைக் குறித்தும் மணிவாசகர் சுட்டுகின்றார்;
9. இறைவனே வலிய வந்து தமக்கு 'ஞானதீக்கை' அருளினன் என்கின்றார் மணிவாசகர்;
10. முதல்வன், உயிர்கட்குச் செய்யும் 'காட்டும் உபகாரம்', 'காணும் உபகாரம்' ஆகியன பற்றிய கருத்துக்கள் திருவாசகத்தில் இடம்பெற்றுள்ளன;

11. மணிவாசகர், இறையடி நீழலில் இன்புற்றிருக்க மேற்கொண்டது 'ஆன்மப் பயணம்' ஆகும்; அது, திருப்பெருந்துறையினின்றும் தொடங்கியது; இப் 'பயணம்' குறித்து மணிவாசகர், பல திருப்பாடல்களின் வழியாகச் சுட்டுகின்றார்;

12. சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலான சாத்திரங்கள், மணிவாசகர் அருளிச் செய்த பாடல்களுக்கு அரண் செய்கின்றன.

## சான்றெண் விளக்கம்


1. க. வச்சிரவேல் முதலியார், '**சைவம்**', சைவமும் வைணமும், ப. 63.
2. மு. திருவிளங்கம், சிவஞான சித்தியார் சுபக்கம் புத்துரை. ப. 334.
3. சிவஞான சித்தியார், 210:4.
4. சிவாக்கிரயோகியர் உரை. ஆதாரம் : வ.ஆ. தேவசேனாபதி, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், ப. 81.
5. சி. அருணைவடிவேலு முதலியார், சிவஞானபோத மாபாடியப் பொருள் நிலை விளக்கம், பக். 477-479.
6. திருவாசகம், 2:2; 7:20; 2; 4:11.
7. மேலது, 40:7:3; 31:4:3; 31:7:1.
8. திருமந்திரம், 115:2.
9. திருவாசகம், 7:20:2-3.
10. க. வச்சிரவேல் முதலியார், மு.கா. நூல், ப. 63.
11. ஆ. ஆனந்தராசன், சிவஞான போதம் வழித்துணை விளக்கவுரை, பக், 34 35.
12. திருவாசகம், 1:18; 2:127-129; 3:117-118; 5:58:3; 6:48:2-3.
13. மேலது, 10:8:3.
14. மேலது, 6:18:1.
15. சுந்தரர் தேவாரம், 8188:1.
16. தாயுமானவர் பாடல், சுகவாரி 7.
17. சிவஞானபோதம், நூற்பா 1; அதிகரணம்:3:உதாரணம்.
18. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப.35.
19. திருக்குறள் : 22.
20. திருவாசகம், 1:26-31; 4:10-12.
21. மேலது, 1:5
22. மேலது, 1:38; 11:7:1-2; 31:3:1-3.
23. தாயுமானவர் பாடல், உடல்பொய்யுறவு : 22.
24. சிவஞானபோதம், நூற்பா 3: அதிகரணம் 6:உதாரணம்.
25. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.80

26. மேலது. பக். 164-165.

27. வ.ஆ. தேவசேனாபதி, மு.கா.நூல், ப. 89.

28. திருக்குறள், 706.

29. திருவாசகம், 5:19.

30. மு. கதிரேசச் செட்டியார், திருவாசகம்-திருச்சதகம். கதிர்மணி விளக்கம், பக். 1

31. திருவாசகம், 26:6:3; 26:7:1-2.

32. சிவஞானபோதம், நூற்பா : 7.

33. ச. கங்காதரன், சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும், ப. 9

34. க. வச்சிரவேல் முதலியார், மு.கா.நூல், ப. 64

35. சி. அருணைவடிவேலு முதலியார். மு.கா.நூல். ப. 289.

36. திருவாசகம், 5:96:1-2.

37. மேலது. 5:22:1 2.

38. மேலது, 19:9:2-3.

39. மேலது, 31:9.

40. மேலது, 1:31 32

41. ஔவை சு. துரைசாமி, சிவபுராணம் விரிவுரை, பக். 19, 20.

42. சிவஞானபோதம், நூற்பா 2:1-2; நூற்பா 1, அதிகரணம் 2:உதாரணம்.

43. போற்றிப் பஃறொடை, கண்ணி : 913.

44. சிவஞான சித்தியார், 178.

45. ந. சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, பக். 162 164.

46. வ.ஆ. தேவசேனாபதி, மு.கா.நூல், ப.92

47. திருவாசகம், 19:7:3-4; 30:7:2; 48:2:1; 51:9:2.

48. மேலது. 12:6:4; 51:1:3; 36:8:3; 32:7:4.

49. மேலது, 6:6:2.

50. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், பக். 80, 81.

51. திருவாசகம், 1:59; 2:42; 2:73 74; 3:63; 3:48; 4:75-76.

52. சிவஞான சித்தியார், 227.

53. மேலது, 254

54. திருவருட்பயன். 2:2; 2:3.

55. சிவப்பிரகாசம், 8:1

56. சிவஞானபோதம். நூற்பா 8, அதிகரணம் 2:உதாரணம்.

57. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், பக். 286, 287.

58. திருவாசகம், 1:40; 5:28:2-3; 8:2:4 5; 27:6:1.

59. மேலது. 41:3.

60. மேலது, 2:95-96; 3:48; 3:115-116; 5:19:3; 8:16:1-2; 12:1:4.

61. அப்பர் தேவாரம். 7175:4.

62. காரைக்காலம்மையார், அற்புதத் திருவந்தாதி, 20.

63. சிவஞானபோதம், நூற்பா 11:1 2.

64. சிவஞானசித்தியார், 310:1-2; 231:4.

65. அ.ச. ஞானசம்பந்தன், மணிவாசகர், பக். 82, 86.

66. திருவாசகம், 3:66 68; 87; 95; 174-175.

67. மேலது, 5:93:3-4; 2:129.

68. மேலது, 6:9:1.

69. மேலது, 6:78:1-2.

70. மேலது, 5:90:1.

71. மேலது, 33:6.

72. மேலது, 33:7:1-2.

73. திருவாசகம், 6:37:1; 6:45:1; 6:50:1.

74. மேலது, 21:8:1.

75. மேலது, 5:100:2-4.

76. மேலது, 51:1.

77. மேலது. 45:1:4; 8:3-4.

78. அ.ச. ஞானசம்பந்தன், மு.கா.நூல், பக். 114 115.

79. சிவஞானபோதம், நூற்பா 11:3.

80. சிவஞான சித்தியார, 310:4.

81. Radha Thiagarajan. A Study of Mysticism in Tiruvacakam. 'The Soul's Struggle', pp. 5-15

# 5
# திருவாசகத்தில் 'பாசவியற் கொள்கை'

**முன்னுரை**

திருவாசகத்தில் இடம்பெறும், "பதி, பசு, பாசம்" எனும் மூன்றனுள் 'பாசவியற் கொள்கை' பற்றிய ஆய்வு, இவ்வியலில் இடம்பெறுகின்றது.

**'பாசம்' - ஒரு விளக்கம்**

> *"பாசம் என்னும் இச்சொல், 'கட்டு' என்னும் பொருளை உணர்த்தும் 'பச்' என்னும் பகுதியடியாகப் பிறந்து, சீவான்மாவைக் கட்டி நிற்பது என்னும் பொருட்டாம்"*[1]

எனப் 'பாசம்' என்னும் சொற்பொருளை விளக்குவர் மறைமலையடிகளார்.

> *"பாசம் என்னும் சொல்லுக்கு நேரான தமிழ்ச் சொல் 'கயிறு' என்பதாம். கயிறு கொண்டு 'பசு'வைக் கட்டுவது போல, உயிர்கள், 'ஆணவம், கன்மம், மாயை' என்னும் கயிற்றால் கட்டப்பெற்றுள்ளன. இதே பொருளில், 'தளை, தடை' என்னும் சொற்கள் ஆளப்பெற்றுள்ளன . . . குற்றவாளிகளின் கை கால்களில் 'தளை' அதாவது 'விலங்கு' இடப்பெறுவதைப் போல, உயிர்களின் 'அறிவு, ஆற்றல், விழைவு' ஆய்வை தளையிடப் பெற்றுள்ளன. இவ்வாறு தடுக்கப்படுவதைக் குறிப்பதற்காகத் 'தடை'யென்னும் சொல்லும் ஆளப்பெறுகிறது"*[2]

என்பது வ.ஆ. தேவசேனாபதி தரும் விளக்கம்.

"உயிர்களின் தூய்மையை மாற்றித் துன்புறுத்துவதால் 'மாசு' என்றும் சொல்லப்படும். 'மாசு' எனினும் 'அழுக்கு' எனினும், 'மலம்' எனினும் ஒன்றே.

எனவே, "பாசம், கட்டு, கயிறு, தளை, தடை, மாசு, மலம், அழுக்கு" என்பன ஒருபொருட் சொற்கள் எனலாம்.

மணிவாசகர், தம் திருவாசகத்தில், இப் 'பாசம்' என்ற சொல்லையே ஆண்டிருக்கின்றார்.

"**பாசமாம்** *பற்று*"

"**பாச** *வினை*"

"**பாசம்** *அறுத்து*"

"*பசு***பாசம்** *அறுத்தானை*"

"*பசு***பாசம்** *அறுத்தருளி*"

"**பாச**வே *ரறுக்கும்*"

"*கதிக்கும் பசு* **பாசம்**"

"**பாச** *மானவை பற்றறுத்து*"

"*பசு***பாசம்** *தவிர்ந்து*"[3]

எனப் பல்வேறிடங்களில் 'பாசத்'தைக் குறிப்பிடுகின்றார்.

'பாசமாகிய வேர்' என்றும், 'பாசமாகிய வினை' என்றும் கூறும் மணிவாசகர், இறைவன் தமது பாசமாகிய வேரினை அடியோடு அறுத்து ஆட்கொண்டான் என்பதைப் 'பசுபாசம் அறுத்து அருளி' என்பதால் குறிப்பிடுவர். 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதற்கேற்ப, மணிவாசகர், மன்பதை வாழ, மக்களின் பாசப்பிணி நீங்கப்,

*"பத்தர்காள்!இங்கே வம்மின்!நீர் உங்கள்*
**பாசந் தீரப்** *பணிமினோ!"*[4]

என்றும் அழைப்பு விடுக்கின்றார். அடிகளின் கருணைத்திறம் இது!

*"பாசம் அறுப்பீர்காள் ஈசன்அணிஆரூர்*
*வாசமலர் தூவ நேச மாகுமே!"*

எனச் சம்பந்தரும்,

*"பந்தபாசம் அறுத்துஎனை ஆட்கொண்ட"*[5]

என நாவரசரும் கூறுவன ஒப்புநோக்கத்தகும்.

பாசமாகிய 'தளை'யை வடமொழியில் 'நிகளம்' என்பர்.

*"ஆசா **நிகளம்** துகளா யினபின்*
*பேசா அனுபூதி பிறந்ததுவே"*[6]

என்னும் அருணகிரிநாதர் வாக்கால் இதனை உணரலாம்.

**மும்மலங்கள்**

சைவ சித்தாந்தம் கூறும் 'மலங்கள்' மூன்றாகும். அவை : ஆணவம், கன்மம், மாயை என்பன. இவை, உயிர்களைப் பந்தித்து நிற்கும் 'தளைகள்' ஆகும். மேலும் உயிர்களின் ஆற்றலைத் தடை செய்து துன்புறுத்தும் சடப்பொருள்களும் ஆம். உயிர்களின் பிறப்பு நிலைக்கு இவையே காரணம்.

*"மூவகை யெனுந்தளை மூழ்கி யுற்றிடும்*
*ஆவிகள் உலப்பில"*[7]

என்பது கந்தபுராணம்.

இம் மூன்று மலங்களுள், 'ஆணவத்'தால் மட்டும் கட்டுற்றுப் பிறவற்றால் தாக்குண்ணாதவரை 'விஞ்ஞானகலர்' என்றும்; 'ஆணவம், கன்மம்' என்னும் இரண்டின்வயப்பட்டுள்ளோரைப் 'பிரளயாகலர்' என்றும்; மும்மலத்தாலும் கட்டுற்று மயங்குவாரைச் 'சகலர்' என்றும் கூறுவர். இது குறித்த விளக்கம், முன் இயலிலும் சொல்லப்பட்டுள்ளது.

*"ஆணவம் அறிவிற்கு மறுதலையாய், உயிர்களை நேரே தடைசெய்து நிற்றலால், அது 'பிரதி பந்தம்' எனப்படும்; 'கன்மமலம்', ஆணவபந்தத்தின் பயனை உறுவித்து நிற்றலால் அஃது 'அநுபந்தம்' எனப்படும்; 'மாயாமலம்' கன்ம மலத்தால் தொடர்புபடுத்தப்பட்டு நிற்றலால் அது 'சம்பந்தம்' எனப்படும்"*[8]

என விளக்கம் தருவர் ச. கங்காதரன்.

'பதி'யும், 'பசு'வும் போல இப் 'பாசமா'கிய மும்மலங்களும் அநாதியேயாம்.

*"பதிபசுபாசம் எனப்பகர் மூன்றில்*
*பதியினைப் போல்,பசு **பாசம் அநாதி**"*[9]

எனும் திருமூலர் திருவாக்கு, முன்பே சுட்டப்பட்டது. ஈண்டும் எண்ணத்தகும்.

*"விளையாததொர் பரிசில்வரு பசுபாச வேதனையொண்*
*டளையாயின"*[10]

என்னும் சம்பந்தர் வாக்கினால், 'பாசமும் அநாதியே' என்ற கருத்துப் புலனாதல் தெளிவு.

மணிவாசகர், 'மும்மலங்கள்' பற்றியும் தம் திருவாசகத்தில் சுட்டுகின்றார் :

"**மும்மலங்கள்** *பாயும்*"

"*மயக்க மாயதொர்* **மும்மலம்**"

"*உள்ள* **மல***மூன்றும்*"

"*மும்மை* **மலம்**"[11]

என்பன சான்றுகள்.

சைவ சித்தாந்தச் சாத்திர நூல்கள், 'மும்மலங்கள்' குறித்து விரிவாகப் பேசும்.

"*ஊனக்கண்* **பாசம்** *உணராப் பதியை*"

என மெய்கண்டார் 'பாசத்தைக்' குறிப்பிடுவதோடன்றி,

*"நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்*
*சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி*
*மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்*
*அலர்சோகம் செய்கமலத் தாம்"*[12]

என்றும் திருவாய் மலர்ந்தருளினார்.

*"நெல்லில் உள்ள உமியாகிய குற்றமும், செம்பில் உள்ள களிம்பாகிய குற்றமும், புதியனவாய் வந்தனவல்ல; நெல்லும் செம்பும் உள்ளவன்றே அவையும் உள்ளன. அதுபோல 'மாயை, ஆணவம், வினை' ஆகிய மும்மலங்களும் அநாதியே உள்ளன. ஆயினும், சூரியனது ஒளியால் மலர்தலும் குவிதலும் செய்கின்ற தாமரை மலரைப் போல, அவை, இறைவனது சத்தியாலே செயற்படுவனவாம்.*

*"'வல்லிமலகன்மம் அன்றுளவாம்' என்றதனால் மும்மலங்களை இறைவன் தோற்றுவிக்கவில்லை என்பதும்; அவை என்றும் உள்ளவை என்பதும் பெறப்படும். அவற்றிற்குத் தோற்றம் இல்லை. எனவே அழிவும் இல்லையாம். ஆயினும் அவற்றின்*

காரியங்களுக்குத் தோற்ற, அழிவுகள் உண்டு. ஆணவமலத்தின் 'காரியம்' - அறியாமை. கட்டுநிலையில் அவ் அறியாமை உயிரைப் பற்றியிருத்தலும்; முத்திநிலையில் நீங்குதலும் தெளிவு. கன்மமலத்தின் காரியம் - இன்ப துன்பங்கள். அவை, உயிருணர்வை வந்து பொருந்துதலும்; அனுபவிக்கப்பட்டுப் பின் கழிதலும் காணலாம். மாயாமலத்தின் காரியம் - உலகமும் உலகப் பொருள்களும், அவை தோன்றி நின்று அழிதல் வெளிப்படை.

"மும்மலங்களும் தத்தம் காரியத்தைச் செய்யும்படி அவற்றைச் செயற்படுத்துவது இறைவனது சிறசத்தியேயாகும். அவ்வாறு செயற்படுத்துவதனால், அவை, பின்வரும் காரியத்தைச் செய்கின்றன. 'ஆணவமலம்' உயிருணர்வைத் திரிபுபடுத்தி, இழிந்தனவாகிய உலகப் பொருள்களையே உயர்ந்தனவாக மதிக்கும்படிச் செய்கின்றது. 'கன்மமலம்', இன்ப துன்பங்களைப் பயந்து, உயிருணர்வை அவற்றில் அழுந்தி நிற்கச் செய்து மயக்குகிறது. 'மாயாமலம்' உலகப் பொருள்களாய் அமைந்து, உயிருணர்வை மயக்கித் தம்மையே பற்றும்படிச் செய்கின்றது. சுருங்கக் கூறின் இம் மும்மலங்களும், உயிருணர்வைக் கவர்ந்து, இறைவனை நோக்கவிடாது உலகத்தையே நோக்கும்படிச் செய்கின்றன என்லாம்"[13]

என விரிவான விளக்கம் தருவர் ஆ. ஆனந்தராசன்.

"ஆணவமலத்தின் 'காரணநிலை', 'காரியநிலை'களில் வேறுபாடு மிக இல்லை. அதனால் அஃது ஒன்றாகவே எண்ணப்படும். 'கன்மம்', காரணநிலையில், 'மூலகன்மம்' எனப்படும். அஃது உயிர்களைத் தாக்குதல் இல்லை. காரியகன்மமே, 'நல்வினை, தீவினை' என இரண்டாக நிகழ்ந்து, உயிர்களைத் தாக்கும். அதனால், காரிய கன்மமே 'கன்மமலம்' எனப்படுகின்றது. 'மாயை', காரணநிலையில் இருத்தலும் சிறப்பாக எண்ணப்படுகின்றது. அதனால், காரணமாயையே

*'மாயை' என்றும், காரியமாயை, 'மாயேயம்' என்றும் சொல்லப்படுகின்றன"*[14]

என இதற்கு மேலும் விளக்கம் தருவர் சி. அருணை வடிவேலு முதலியார்.

'பதி'ப் பொருளாகிய 'இறை' ஒன்றே 'சத்து' எனச் சைவ சித்தாந்தத்தில் சிறப்பாகச் சொல்லப்படும். எனவே 'ஆணவம், கன்மம், மாயை' மூன்றும் 'அசத்து' ஆகும். ஏனெனில் இவை, மாற்றங்கட்கு உட்படுவன என்பதாம். 'ஆணவமலமா'னது, உயிர்களைப் பலவாறு பிணித்து நின்று, பின்னர்ச் சத்தி தேய்ந்து தேய்ந்து மடங்கி நிற்கும். 'கன்மமலம்', உயிர்களைச் சார்ந்து நின்று, இன்பதுன்பங்களைத் தந்து, பின்னர் நீங்குவதாகும். 'மாயாமலம்', தனு, கரண, புவன, போகங்களைத் தன்னிடமிருந்து தோற்றுவித்தும், பின்னர் ஒடுக்கியும் இவ்வாறு காரியப்பட்டு, நிலைமாற்றம் அடையும். எனவே இம் மூன்று மலங்களும் 'அசத்து' என்று கொள்ளப்படும். எது நிலைமாற்றம் உடையதோ, அஃது 'அசத்து' என்பதே அசத்திற்குரிய சித்தாந்த வரையறையாகும்.[15]

பாசமாகிய கருவிகளைக் கொண்டு பாசமாகிய உலகப் பொருள்களை அறியும் அறிவு, 'பாச அறிவு' அல்லது 'பாச ஞானம்' எனப்படும். 'பாச ஞானம்' என்பது பாசமாகிய கருவிகளின் அறிவு என்ற பொருளைத் தருவது போலத் தோன்றினாலும் உண்மையாக ஆராய்ந்து பார்த்தால், 'பாசமாகிய கருவிகளால் உயிருக்கு உண்டாகும் அறிவு' என்பதே அதன் பொருளாகும். எனவே, 'பாச ஞானம்' என்பது, தனியொரு ஞானம் அன்று என்பதும், உண்மையில் அது பசுவினது ஞானமே என்பதும் தெளிவாகும்.[16]

இம் மூன்று மலங்களோடு, 'மாயேயம், திரோதானம்' எனும் இரண்டைச் சேர்த்து, 'ஐந்து மலங்கள்' என்று கூறுவது உண்டு. 'மாயை'யின் காரியம் 'மாயேயம்' என்று சொல்லப்படும். இறைவனது சத்தி, பாசத்தைச் செயற்படுத்துகின்ற நிலையில் 'திரோதான சத்தி' எனப்படும். இது, பாசத்தை நடத்துதலால் ஒரு மலமாக உபசரித்துக் கூறப்படும். எனவே, 'ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம்' என 'மலங்கள் ஐந்து' என்பர். ஆனால், இவை விரித்துக் கூறப்படுவனவேயன்றி, உண்மையில் 'மலங்கள் மூன்றே'யாம்.[17]

பின்வரும் சித்தியார்ப் பாடல்களால் இவற்றை உணரலாம் :

*"மும்மல நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போல்*
*மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்துநின்று*

*பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள்*
*பண்ணும்*
**இம்மல மூன்றி னோடு மிருமல** *மிசைப்ப னின்னும்"*

*"மாயையின் காரியத்தை* **மாயேய மலம தென்றும்**
*ஏயுமும் மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந்*
*தூயவன் றனதோர் சத்தி* **திரோதான** *கரிய தென்றும்*
*ஆய்வரிம்* **மலங்க ளைந்து** *மணுக்களை யணைந்து நிற்கும்.'*[18]

## 5.1. ஆணவம்

### 'ஆணவம்' - ஒரு விளக்கம்

*"மலங்களுள் ஒன்றாகக் கூறப்படும் 'ஆணவம்' . . . . அறியாமை என்னும் குணத்தையுடைய ஒரு குணிப்பொருள். கண்ணை மறைக்கின்ற புற இருளைப் போல அறிவை மறைக்கின்ற அகஇருள். இது, உயிருக்கு இயல்பாய் உள்ள வியாபகத் தன்மையை மறைத்து அதனைச் சிறுமைப்படுத்துவதால் - அதனைச் சிற்றறிவும், சிறு தொழிலும் உடையதாகச் செய்வதனால் 'அணு'த் தன்மைப்படுத்துவதால் 'ஆணவம்' என்னும் காரணப் பெயரை உடையதாயிற்று".'*[19]

என 'ஆணவம்' என்பதன் பெயர்க்காரணத்தை விளக்குவர் ஆ. ஆனந்தராசன். இயற்கையில் விரிவுடையதாகிய உயிரின் அறிவை மிகச் சுருங்கியதாகச் செய்வது 'ஆணவமலம்'.'[20]

*"ஆணவம் என்பது உயிர்களின் அறிவாற்றலை இல்லை எனும்படி மறைத்து நிற்பது. நெல்லிற்கு உமியும், செம்பிற்குக் களிம்பும் பின்வந்து கூடின எனப்படாதபடி அப்பொருள்களுக்கு இயற்கைக் குற்றங்களாக இருத்தல் போல, ஆணவம் உயிர்களோடு அநாதியே உடன்கலந்து அவற்றின் வியாபகத்தை விளங்க வொட்டாது தடுத்து, 'அணுத்தன்மை' எய்துவிப்பது. இக்காரணம்பற்றி இது,*

*'மூலமலம், சகசமலம்' என்னும் பெயர்களாலும் குறிக்கப்படும். சகசம் - இயற்கை, உடன் உள்ளது*"[21]

என்பது க. வச்சிரவேல் முதலியார் தரும் விளக்கம்.

**உயிர்களும் ஆணவமும்**

உயிர் அறிவுடையது; ஆனால் அவ்வறிவு சில சமயங்களில் விளங்காமற் போகிறது; அறிவு மறைந்து, அறியாமை மேலிடுகிறது. அறியாமை நிகழ்வதற்குக் காரணமாய் நிற்பது 'ஆணவமலமே'யாகும்.

உயிர் என்று உண்டோ, அன்றே அதனிடத்தில் பொருந்தியுள்ள இயற்கைக் குற்றமே 'ஆணவமலம்'. ஆடையில் வெண்மை தோன்றாதபடி 'அழுக்கு' மறைத்திருப்பது போல, உயிரின் அறிவு சிறிதும் தோன்றாதபடி, சகசமாகிய 'ஆணவமலம்' மறைத்து நிற்கிறது. இச் 'சகசமலம்' சிறிது நீங்கி அறிவு விளங்குதற் பொருட்டே, உயிர் அந்தக்கரணங்களோடு கூடவேண்டியதாயிற்று.

மாயை, கன்மங்களோடு உயிர் கூடாதபொழுது, ஆணவம், உயிரறிவை முழுவதுமாக மறைத்து நிற்கும். அவ்வாறு மறைத்து நிற்றலே, ஆணவத்தின் 'உண்மை இயல்பு' அல்லது 'சொரூப இலக்கணம்' எனப்படும். மாயை, கன்மங்களோடு கூடியபொழுது, ஆணவம், உயிரின் அறிவைத் திரிபுபடுத்தும்; இத்தகைய திரிபுணர்ச்சியை - விபரீத அறிவை உண்டாக்குவது, ஆணவத்தின் 'பொது இயல்பு' அல்லது 'தடத்த இலக்கணம்' ஆகும். எனவே, 'ஆணவம்' உயிரின் அறிவை மறைத்து **'இருள்'** போன்றதாய் நிற்கும்; 'மாயை', அவ்வறிவை விளக்கி ஒளி போன்றதாய் நிற்கும் எனலாம்.

'ஆணவமலம்', தூலமாய், வன்மையாய்ப் பற்றியுள்ள உயிர்கள் - 'சகலர்'; சூக்குமமாய், மென்மையாய்ப் பற்றியுள்ள உயிர்கள் - பிரளயாகலர்; அதிசூக்குமமாய், மிகவும் மென்மையாய்ப் பற்றியுள்ள உயிர்கள் - விஞ்ஞானகலர்.[22] இம் 'மூவகை உயிர்கள்' பற்றிய விளக்கம் 'பசுவியற் கொள்கை' இயலிலும் இயம்பப்பட்டுள்ளது.

ஆணவமலமானது உயிர்களைப் பலவாறு பிணித்து நின்றபின் நாளடைவில் அதன் சத்தி தேய்ந்து தேய்ந்து மடங்கி நிற்கும். எனவே இதனை 'அசத்து' எனல் வேண்டும்.

*"மூலமலம் ஒன்றே. ஆயினும் அஃது உயிர்கள்தோறும் வேறு வேறாக நின்று, அவற்றின் அறிவு செயல் ஆற்றல்களைத் தடுத்து நிற்கும் எண்ணிறந்த சத்திகளை உடையது. இச் சத்திகள் உருவுதிரிந்து மெலிவு*

அடைதற்பொருட்டு முதல்வன், இயற்கையே 'ஆணவபந்தம்' உள்ள உயிர்களுக்கு மாயையின் சம்பந்தத்தை உண்டுபண்ணுகிறான். ஆணவத்தால் முழுவதும் அறிவிழந்து நின்று உயிர்களுக்குச் சிற்றறிவும் சிறுசெயலும் விளங்குதற்பொருட்டு முதல்வன் 'மாயை'யின் சம்பந்தத்தை உண்டுபண்ணுவதுதான் உலக சிருட்டி எனப்படும். பேரொளி முன் இருந்தாலும், படலம் படர்ந்த கண், ஒளியைப் பற்றாது இருளையே பற்றும். அதுபோல உயிர் எஞ்ஞான்றும் இறைவனுடைய அருளொளியில் மூழ்கி, அதில் அடங்கி நிற்பினும், 'ஆணவம்' காரணமாக அருளொளியைப் பற்றாமல், அறியாமையாகிய இருளைப்பற்றி இருளாகவே இருக்கும். இங்ஙனம் 'ஆணவம்', உயிர்களை அறியாமை இருளில் உய்த்தலால், அஃது, **'இருள்'**, அறியாமை, அவித்தை, மலம்' என்னும் பெயர்களாலும் குறிக்கப்படும்"[23]

என்பர் க. வச்சிரவேல் முதலியார்.

உயிர்களுக்குப் பகை 'மாயை' அன்று; ஆணவமே! ஆணவமலம்-ஒன்றே; எனினும் அளப்பரும் ஆற்றல்களைக் கொண்டது. கேவல, சகல நிலைகளில் முறையே அறிவை மறைத்தும், தவறாகச் செலுத்தியும்; தன் சேர்க்கையால் உயிர்களுக்கு உதவியாயிருக்கக்கூடிய மாயையையும், கன்மத்தையும் பகையாக்கி, 'ஆணவம்' உயிர்களை வருத்துகிறது. உயிர்களை 'ஆணவம்' ஏன் சேர்க்கிறது என்ற வினாவுக்கு, வ.ஆ. தேவசேனாபதி,

"ஆணவம், 'சடம்' (அறிவற்றது), ஆதலின் தானே சென்று சேராது. தமக்குத் தீங்கான ஆணவத்தை உயிர்கள் தம்முடன் தாமே சேர்த்துக் கொள்ளா. தூய்மையும் அருளும் உடைய இறைவன், அதனை உயிர்களுடன் சேர்க்க மாட்டான்!. . . ஆணவம், வரம்பில் காலமெல்லாம் உயிருடன் உடனாய் மன்னிப், பின்னர் வீட்டுநிலையில் நீங்குவது"[24]

என்று விடை கூறுவர்.

ஆணவத்திற்கு இருவகையான சத்திகள் உண்டு. அவை :

1. ஆவாரக சத்தி
2. அதோநியாமிகா சத்தி

உயிர்களை முற்றிலும் மறைத்து நிற்பது 'ஆவாரகசத்தி'. இஃது ஆணவத்தின் 'தன்னியல்பு' அல்லது 'சொரூப இலக்கணம்' ஆகும். பிறவற்றோடு சேர்ந்துள்ளநிலை, 'அதோநியாமிகாசத்தி' அல்லது 'பொதுவியல்பு' என்னும் 'தடத்த இலக்கணம்' ஆகும்.

இவ்விரு சத்திகளைக் குறித்து வ.ஆ. தேவசேனாபதி பின்வருமாறு விளக்குவர் :

> *"ஆவாரக சத்தி, முழு* **இருள்** *நிலையை விளைவிப்பது. அதோநியாமிகா சத்தி, மங்கலான ஒளி. திரிபுக் காட்சியை ஏற்படுத்துவது போலப் பயன் மதிப்புக்களை முறை பிறழ உணரவைத்து, கரும்பிருக்க இரும்பையும், கனியிருக்கக் காயையும், முயலிருக்கக் காக்கையையும், அறமிருக்க மறத்தையும், இருட்டறையில் மலடு கறத்தலையும், விளக்கிருக்க மின்மினியையும், பாழூரில் பயக்கத்தையும் (பிச்சையையும்), தவமிருக்க அவத்தையும், நாடத் தூண்டுவதாகும். இது, பொருளல்லவற்றைப் பொருளாகக் காட்டும் மருளாகும்; மன்னன் மகனை (ஐம்புல) வேடர் நெறியில் செலுத்துவதாகும். பொருள்களின் மதிப்பைத் தவறாக உணரச்செய்து அவற்றைத் தமதாகக் கவரத் தூண்டுவதுடன் உயிர்கள் தம்மையே முதன்மையுடையவைகளாக நினைத்து நடக்கத் தூண்டுவதாகும். 'யான், எனது' என்னும் செருக்கை விளைவிப்பதாகும் . . . உயிரை முற்றிலும் மறைக்கும் ஆணவத்தின் 'ஆவாரகசத்தி'யானது புற இருளிலும் கொடியது. புறஇருள் பிற பொருள்களைக் காணவொட்டாது தன் இருப்பையாவது புலப்படுத்துகிறது. உயிர்களை மறைப்பதுடன் அவ்வாறு மறைக்கும் தன்னையும் மறைத்துக் கொள்வது ஆணவத்தின் 'ஆவாரகசக்தி'".*[25]

உயிர்கள்தோறும் அவற்றது சிறப்பியல்பு வேறுவேறாக இருத்தலால், அவற்றிற்கு ஏற்பவே, அவற்றைப் பற்றியுள்ள ஆணவத்தின் வன்மை,

மென்மைகளும் மிகப் பலவாயுள்ளன. எனவே ஆணவம் நீங்கி, உயிர்கள் முத்தியைப் பெறும் காலமும் ஒன்றாகாது, பலவாகின்றன.

**திருவாசகத்தில்!**

மணிவாசகப் பெருமான், இவ் 'ஆணவத்'தையும் சேர்த்தே 'மும்மலங்கள்' என்று கூறியமை மேலே சுட்டப்பட்டது.

*"'மலம்' என அடைகொடாது கூறுமிடத்தில் அஃது*
*'ஆணவமலத்'தையே குறிக்கும்"*[26]

என்பர் சி. அருணைவடிவேலு முதலியார்.

மணிவாசகர், பல்வேறிடங்களிலும், 'மும்மலம்' என 'அடை'யொடு கூறியதனோடமையாது, 'அடை'யின்றி 'மலம்' என்றே கூறுவதும் காணலாம்.

*"தங்கள்* **மலம்** *கழுவுவார்"*

*"வான்வந்த சிந்தை* **மலம்***கழுவ வந்திழியும்*
*ஆனந்தம் காணுடையான் ஆறு"*[27]

என்று கூறும் அடிகள், இறைவன், தன் கண்ணீரை மாற்றி, மலம் கெடுத்து ஆண்ட பெருந்தகை என்பது தோன்ற,

*"மலங்கி னேன்கண்ணின் நீரைமாற்றி*
**மலங்கெ டுத்தபெ ருந்துறை**"[28]

என ஏத்துகின்றார்.

"... **மலமறுத்து வான்கருணை தந்தானை**
*நான்குமறை பயில்தில்லை அம்பலத்தே கண்டேனே"*[29]

என விம்மிதமுறுகின்றார்.

*"கடலின்திரை யதுபோல்வரு கலக்கம்***மலம் அறுத்தென்**
*உடலும்மென துயிலும்புகுந் தொழியாவண்ணம்*
*நிறைந்தான்"*[30]

எனத் தன் 'மலம்' நீக்கித் தன் உடம்பிலும் உயிரிலும் நிறைந்துள்ள முதல்வனைப் போற்றுகின்றார்.

"**பழமலம்** *பற்றறுத் தாண்டவன்*
*பாண்டிப் பெரும்பதமே!"*[31]

என, மூலமலமாகிய ஆணவத்தைத்தான் ஈண்டுப் 'பழமலம்' எனும் அருந் தொடரால் குறிப்பிடுகின்றார் எனலாம்.

அன்றியும், இவ் ஆணவத்தை மணிவாசகர், 'மாய **இருள்**' என்ற தொடராலும் குறிப்பிடுகின்றார்.

*". . . . . எம்பெருமான்! வல்லினையேன் தன்னை*
*மறைந்திட மூடிய* **மாய இருளை**
*அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி*
*புறம்தோல் போர்த்துஎங்கும் புழுஅழுக்கு மூடி*
*மலம்சோரும் ஒன்பது வாசல் குடிலை*
*மலங்கப் புலன்ஐந்தும் வஞ்சனையைச் செய்ய*
*விலங்கு மனத்தால், விமலா! உனக்குக்*
*கலந்த அன்பாகிக் கசிந்துள் உருகும்*
*நலம்தான் இலாத சிறியேற்கு நல்கி*
*நிலம்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி*
*நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்*
*தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!"*[32]

என்பது சிவபுராணம். இறைவன், தமக்குச் செய்த பெருங்கருணைத் திறம் வியந்து மணிவாசகர் பாடுவது இது.

இதற்கு, ஔவை சு. துரைசாமி கூறும் நயவுரை இங்குக் குறிக்கத்தகும் :

*"வினையால் தொடக்குண்டு கிடக்கும் என்னை மூடிமறைக்கும்* **மலவிருளைப்** *போக்க வேண்டுமெனக்கொண்ட இச்சைநலத்தால், அறம்பாவம் எனப்படும் கயிற்றாற்கட்டிப், புறத்தே தோல்போர்த்துப், புழுவழுக்காய் அதனைமூடி, மலஞ்சோரும் ஒன்பது வாயிலமைந்த உடம்பாகிய குடிலைச் சமைத்து, அதன்கண்ணே என்னை வாழ வைத்தாய்! அங்கே புலன்ஐந்தும் வஞ்சனையைச் செய்ய, மனம் அவற்றால் மயங்கிக் குறுக்கிட்டு மாறான நெறியிற் செலுத்துவதாயிற்று. அதனால் யான் அன்பால் உருகி, உள்ளம் கசிந்துருகும் நலமில்லாது சிறுமைப்பட்டேன்; ஆயினும் விமலனாகிய நீ, சிறுமைக்கு ஏதுவாகும்* **மலத்தின் நீக்கி** *என்னை உய்விக்க வேண்டுமென என்பாற்கொண்ட பெருங்கருணையால் யான் வாழும் இந் நிலவுலகத்தே, என்முன்னே போந்து, நின் திருவடி ஞானம் வழங்கி,*

*உன் அடியன் ஆக்கினாய்! இது, நின் கருணை இருந்தவாறு எனச் சிவபரம்பொருளின் தாயிற் சிறந்த தயாவினை இதனால் விளக்கி அருளினார்!"*[33]

இனி, 'முத்தி'க் காலத்தில் 'ஆணவமலம்' இருந்தும், இதன் மறைப்பு, **'சிவமே'** எனும்படி ஒன்றாய் நிற்கும் உயிரிடத்துச் செல்லமாட்டாமையால்,அது, தன் சத்தி மடங்கி, இல்லாதது போல நிற்கும். இவ்வாறு மலசத்தி மடங்கி நிற்றலையே, 'மலம் கெடுதல், மலம் நீங்குதல்' என்றெல்லாம் கூறுவர். முத்தியிலும், 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களும் உள்ளன என்பதே சைவ சித்தாந்தத்தின் முடிபாகும்.[34]

மணிவாசகர், தமக்குச் சிவபெருமான் அருளிய 'சிவப்பேறு' குறித்து எல்லையில்லா மகிழ்வெய்துகின்றார். அதன் பயனாய் வெளிப்போந்த அருமைத் திருப்பாட்டு இது:

> *"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்*
> *பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்*
> **சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட**
> *அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே!"*[35]

அப்பர் பெருமானும்,

> "**மலங்களை** *மாற்றவல்லார்*"[36]

என்று கூறுவது இவண் ஒப்புநோக்கத்தகும்.

இத்தகைய 'ஆணவமலம்' பற்றிச் சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் விரிவாகப் பேசுகின்றன. அவற்றுட் சில வருமாறு :

> ". . . . . *ஆன்மாச் சகசமலத் துணராது*"

என்றருளிய மெய்கண்டதேவர்.

> *"மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணாதேல்*
> *ஆயாதாம் ஒன்றை அதுவதுவாய் - வீயாத*
> *வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றாங் காட்டம்போல்*
> *தன்னைமலம் அன்றணைதல் தான்"*[37]

என ஓர் எடுத்துக்காட்டு வெண்பாவும் அருளுவாராயினர்.

"**ஆணவமாகிய இருளில்** *நிற்கின்ற உயிர், மாயையின் காரியமாகிய உடம்பை விளக்காகக் கொண்டு, பொருள்களை அறியும். அவ்விளக்கு இல்லாவிடின், அஃது ஒருபொருளையும் அறியமாட்டாது; அறி-யாமை உடையதாகவே இருக்கும்"*

என்பது இதன் கருத்து. இதனை ஆ. ஆனந்தராசன் பின்வருமாறு விளக்குவர் :

*"நெருப்பு எப்பொருளில் இருந்தாலும் அப்பொருளில் மறைந்து அப்பொருளாகவே நிற்குமன்றி, வெளிப்பட நில்லாது. அது அதுவாய் நிற்றல் அதன் இயல்பு. அத்தகைய நெருப்பை விறகு, தன்னுள் மறைத்து வைத்துத் தான் ஒன்றே உள்ளது என்னும்படி நிற்கும். நெருப்பினைப் போன்றது உயிர். தான் சார்ந்த பொருளோடு ஒன்றித் தான் என்பது தோன்றாது அப்பொருளாகவே நிற்பது உயிரின் இயல்பு. அத்தகைய உயிரை 'ஆணவமலம்' தன்னுள் பொதிந்துகொண்டு உயிர் என்பதொன்று இல்லை என்னும்படியாக மறைத்து நிற்கும்!"*[38]

அன்றியும், மெய்கண்டார், "ஆணவம் மாயை கான்மிய மென்னும் மலங்களைக் களைக" என்றும் கூறுவார்.

*". . . . . அம்மலம் கழீஇ"*

என்பது அவர்தம் திருவாக்கு. இதற்கான எடுத்துக்காட்டு வெண்பா வருமாறு:

*"புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்*
*மண்முதல் மாயைகாண் மாயையும் - கண்ணிய*
*அஞ்ஞானம் காட்டுமிவ்* **ஆணவமும்** *இம்மூன்றும்*
*மெய்ஞ்ஞானிக் காகா விடு"*[39]

சிவஞான சித்தியாரிலும்,

*"மருள்தன்றன் குணமதான்* **மலம்***அசித் தாகி நிற்கும்"*[40]

என ஆணவமலத்தின் இயல்பு உரைக்கப்பட்டுள்ளது.

உமாபதி சிவாசாரியார், 'இருள்மலநிலை' என்றே ஓர் அதிகாரம் வகுத்து,

"ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது"

என்று கூறியதனோ டமையாது,

"பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றும்
கணவர்க்குந் தோன்றாத கற்பு"[41]

என்றும் ஆணவத்தின் இயல்பைக் கடுமையாகக் கூறுகின்றார்.

## 5.2. கன்மம்

**'கன்மம்' - ஒரு விளக்கம்**

பாசத்துள் ஒன்றாகிய 'கன்மம்' குறித்து மறைமலையடிகளார் கூறுவது வருமாறு :

"'கன்மம்' என்பது, 'வினை' அல்லது 'தொழில்'. ஒரு பொருளின் அசைவே 'தொழில்' என்றாகும். பொருளசைவு இல்லையானால், அதன் தொழிலும் இல்லையாம். முழுதும் ஆணவமலத்தின் வயப்பட்டுக் கிடந்த காலத்து, ஆன்மாவின் இச்சாஞானக் கிரியைகளுக்குச் சிறிதும் அசைவில்லாமையான் ஆண்டு ஆன்மாவுக்குக் 'கன்மம்' இல்லையென்பதூஉம், இறைவனது திருவருட்சத்தியாள் எடுக்கப்பட்டு மாயையோடு பொருத்தப்பட்டவழி, ஆன்மாக்கள் தம்மாட்டு அவ்விச்சா ஞானக்கிரியைகள் சிறிது விள்ங்கப் பெற்றமையானே ஆண்டுக் கன்மமுண்டாயிற் றென்பதூஉம் இதுகொண்டு அறியற்பாலனவாம். எனவே, ஆன்மாவின்றன்னோடு சகசமாய் உட னிற்பதாகிய ஆணவமல நீக்கத்தின் பொருட்டு அவ் வான்மாவோடு இடையொருகாலத்து மாயாமலங் கூட்டப்படுங்கால் அவற்றின் நடுவே கிளைப்பது 'கன்ம'மென்பது ஈண்டே தெளிவுறுத்தப்பட்டதாயிற்று. அற்றேல், 'கன்மமலம்' அநாதியென்றுரை நிகழ்த்துஞ்

*சித்தாந்த வாக்கியத்தோடு ஈது முரணுமாலோவெனில், முரணாது. அது, கன்மத்தின் இருப்பு அநாதியென்று கூறியதேயல்லாமல், அஃது ஆன்மாவின்கட் பற்றியதும் அநாதியென்று கூறியதாகாது. ஆன்மாவின்கட் கன்மந் தோன்றியது மாத்திரமே ஆதியென்றுரைக்கப் படுமல்லது, உயிரின்கட் டற்கிழமைப் பொருளாக உள்ள அதனிருப்பு அநாதி முறைமைத்தேயா மென்பது தெளிபொருள். ஆகவே, கன்மம் அநாதியென்னுஞ் சித்தாந்தவுரையோடு ஈண்டுக் கூறியது சிறிதும் முரணாது அதற்குப் பெரிதும் இணக்கமாவதேயாமென்க!"*[42]

இக் 'கன்மம்' குறித்து, சு.வச்சிரவேல் முதலியார் பின்வருமாறு கூறுவர் :

*"உயிர்கள் உடம்புகளோடு கூடியுள்ளபோது, மன மொழி மெய்களாற் செய்யும் நல்லனவும், தீயனவும் ஆய செயல்களே 'கன்மம்' எனப்படும். இச்செயல்கள் செய்யப்பட்டு மறையும்போது, செய்வோனுடைய புத்தியில் ஒருவகைப் பழக்கத்தை உண்டுபண்ணி மறையும். அப் பழக்கமே முதல்வனது ஆணையால் 'அறம்' எனவும் 'பாவம்' எனவும் இருவகைப்பட்டு அப் புத்தியைப் பற்றி நிற்கும். இந்த அறம் பாவங்கள் பின் அப் புத்தி தொழிற்பட்டு ஒன்றனை நிச்சயிக்கும்போது, அந்த நிச்சய ரூபத்தை மாற்றி இன்ப துன்ப நுகர்ச்சியைப் பயக்கும்!"*[43]

**'மூலகன்மம்'**

ஆணவத்தைப் போலக் 'கன்மமு'ம் அநாதிதான்; அந்த அநாதி கன்மமே 'மூலகன்மம்' எனப்படும். ஆணவ பந்தம் உயிர்களை மேல்நோக்கி எழாது, கீழ்நோக்கி அழுத்துதலினால் உயிர்கள், தமக்கு மேலான இறைவனை அறியாது, கீழான கன்மத்தையே நோக்கும். அதனால் அதற்குப் பொதுவகையாய் நிற்கும் 'மூலகன்மம்' (அஃதாவது முதல் வினை) என்பதொன்று உண்டு எனலாம்.[44] ஆணவ மலத்தை நீக்குதற்பொருட்டே கன்ம மலமும், மாயாமலமும் உயிர்களுக்கு உளவாயின.

'ஆணவம்' கன்மம், மாயை' என்ற மும்மலங்களும், உயிருடன் சேர்ந்திருப்பதை, நெல்லிலே முளை, தவிடு, உமி சேர்ந்திருப்பதைக் காட்டி

விளக்குவது உண்டு. 'முளை' போன்றது 'கன்மம்'; 'தவிடு' போன்றது 'மாயை'; 'உமி' போன்றது ஆணவம். நெல்லில் உள்ள 'முளைத்தல்' ஆற்றல் 'முளை'யைத் தோற்றுவிப்பது போலக் 'கன்மமலம்', உயிரினிடத்து இன்ப துன்பங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவிக்கும். இவ்வகையில் ஆணவத்தோடு ஒப்ப, அநாதியாகச் சொல்லப்படும் 'கன்மமே' இங்கு **'மூலகன்மம்'** எனப்படுவதாயிற்று. அது, 'நன்மை' தீமை' எனும் பாகுபாடின்றிப் பொதுவாய் நிற்கும். பின்னர் அது செயற்படும் காலத்தே, 'நல்வினை'யும் 'தீவினை'யும் என இரண்டு வகையாகச் சிறப்புற்றுச், செயல்பற்றிப் பலவாகத் திகழும்.[45]

> *"கன்மத்துக்குப் பற்றுக்கோடு மாயையே . . . . . மாயையைப் பற்றிநிற்கும் கன்மத்திற்கு இரு நிலைகள் உண்டு. ஒன்று, 'காரணநிலை'; மற்றொன்று 'காரியநிலை'. 'காரணநிலை'யாவது, செயல் நிகழாதபோதும், அது நிகழும் தன்மை, பொருளிடத்தில் இருத்தல். இந்நிலையில் அச்செயல் என்ன தன்மையை உடையதாயிருக்கும் எனச் சொல்ல இயலாது . . . . . வெளிப்பட்டு நிகழும் நிலை 'காரியநிலை' காரணநிலை' சமய நூல்களில்* ***'மூலகன்மம்'*** *எனப்படும். 'காரியநிலை' பொதுவாகக் 'கன்மம்' என்றே சொல்லப்படும்"*[46]

என இம் 'மூலகன்மம்' பற்றி விளக்குவர் ச. கங்காதரன்.

பழம்பெரும் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திலேயே இம் 'மூலகன்மத்'தைப் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது என மாதவச் சிவ ஞானயோகிகள் தமது சிவஞானபோத மாபாடியத்தில் விளக்குகின்றார்.

> *"வினையே செய்வது . . . . . தொழில்முத னிலையே"*[47]

என்னும் நூற்பா வாயிலாக, 'மூலகன்மத்'தைப் பற்றிய குறிப்பு வந்துள்ளது என்பர்.[48]

**மூவகை வினைகள்**

'வினைகள்' மூவகையில் வைத்துப் பேசப்படும். அவை: 'சஞ்சிதம்'; 'பிராரத்தம்'; 'ஆகாமியம்'.

> *"முற்பிறப்புக்களில் செய்யப்பட்டுக் கிடக்கும் பழ வினைகளின் தொகுதி* ***'சஞ்சிதம்'*** *எனப்படும். அத் தொகுப்பிலிருந்து இப்பிறப்பிற் சென்று எடுத்துக் கொள்ளப்பட்டு வந்து பயன் கொடுக்கின்ற வினைகள்*

*'**பிராரத்தம்**' எனப்படும். இப்பிறப்பில் அவ்வினைப் பயன்களை நுகரும்போதே மனம், மொழி, மெய்களால் செய்யும் புது வினைகள் '**ஆகாமியம்**' எனப்படும்."*[49]

என விளக்கம் தருவர் ஆ. ஆனந்தராசன்.

இப் பிறப்பில் 'பிராரத்தவினை'யானது, நன்மை, தீமை ஆகிய பயன்களைத் தானே நேர்நின்று தருவதில்லை; சிலரை அல்லது சிலவற்றை வாயிலாகக் கொண்டு பயன்தரும். ஒருவர் செய்த தீவினை, அவர்தம் மனைவி அல்லது மக்கள் வாயிலாகச் செயற்படுவது உலகியலிற் காணும் உண்மை. சிலநேரங்களில் உரியவரையே வாயிலாகக் கொண்டு பயனை நுகர்வித்தலும் உண்டு.

*"தினை விதைத்தவன் தினை யறுப்பான்;*
*வினை விதைத்தவன் வினை யறுப்பான்"*

என்பது பழமொழி. அவரவர் செய்த வினைப்பயனை அவரவரே நுகர்ந்து தீரவேண்டும். இவ்வுண்மை அறியாதோர், தமக்கு வரும் கேட்டிற்குப் பிறரே காரணம் என எண்ணிவெறுத்து, அவர்க்கு கேடு சூழ்வதால், மேலும் தீவினையைத் தேடிக் கொண்டவராகின்றார். இதனால்தான், 'பிராரத்த வினை'யை நுகர்கின்றபோது 'ஆகாமியவினை'யும் தோன்றி விடுகின்றது. இவ் வகையில் வினையின் தொடர்ச்சி நீளுகிறது.

முற்பிறவிகளில் ஈட்டப்பட்டு உளதாகிய 'சஞ்சிதவினை'யே உயிர் நுகர்தற்குரிய இன்பதுன்பப் பயன்களையும், அவற்றை நுகர்தற்கு இடமாகிய உடம்பையும் தோற்றுவிக்க, உயிரானது, அவ் உடம்பைப் பொருந்தி அப் பயன்களை நுகரும். வினைப்பயன்களை நுகரும் முறையிலேயே புதிய வினைகள் தோன்றி அடுத்த பிறவிக்கு வித்தாய் அமையும்.[50]

### முதல்வனும் 'வினை'யும்

'வினைகள் அறிவற்றவை'. ஆதலின் அவை, தாமாகவே தம்மைச் செய்தவரைச் சென்றடைந்து பயனை அளிக்கமாட்டா! வினையைச் செய்தற்கு இடமாகிய உடம்பில் பொருந்திநின்று வினையைச் செய்தற்கு இடமாகிய உடம்பில் பொருந்தி நின்று வினைகளைச் செய்தோர், அவ்வினைகளின் பயனை இறைவனே கூட்டுவிக்க அவற்றை நுகர்வர். எவ்வுயிர்க்கு எப் பயனை எவ்விடத்தில் எப்போது சேர்ப்பிக்க வேண்டும் என்பது இறைவனுக்குத் தெரியும்; எனவே, அவ்வுயிர்க்கு அப்பயனை அவ்விடத்தில் அப்போது தப்பாமல் சேர்ப்பிப்பன். இதுவும் உயிர்களின்மீது இறைவன் கொண்டுள்ள பெருங் கருணையாம்.

*"வினை, உயிர், இறைவன் என்ற மூன்றில், 'வினை' சடம் ஆதலின், அது தானே தன்னைச் செய்தவனைச் சென்றடையாது என்பது தெரிகிறது. உயிர் அறிவுடையதாயினும் அதன் அறிவு, அறியாமையால் மூடப்பெற்று விளங்காது கிடத்தலின், அதுவும் தான் செய்த வினையின் பயனை அறிந்து எடுத்துக் கொள்ளமாட்டாது என்பதும் தெளிவாகிறது. எனவே எஞ்சியுள்ளவனாகிய இறைவனே வினைகளின் பயனைக் கூட்டுவிப்பான் என்பது பாரிசேடத்தால் துணியப்படும்".*[51]

என்று கூறும் ஆ.ஆனந்தராசன் கருத்து இவண் உன்னத்தக்கது.

இத்தகைய வினைக்கேட்டினின்று உய்தி பெறுதற்கும் வழியுண்டு. "நாம் செய்த வினையை நாம் தானே நுகரவேண்டும்". என்று எண்ணுதல் வேண்டும்; எனவே எந்த ஒருபொருளிலும் விருப்போ, வெறுப்போ காட்டாமல், 'இறைவனது திருவருள் ஒன்றே கதி' என்று அதனையே நோக்கி நிற்றல் வேண்டும்.

திருவருளில் திளைத்து நிற்கும் அருளாளர்கட்குப் 'பிராரத்த வினை'யின் தாக்குதல் இல்லை. அஃதாவது அவர்களுக்கு 'இன்ப துன்பம்' இருந்தாலும் அவற்றில் அழுந்தி நிற்கமாட்டார் என்பதாம். 'பிராரத்த வினை' ஒழிந்தால் 'ஆகாமியவினை'யும் தானாகவே இல்லாதொழியும். ஒருகால் 'பிராரத்தவினை'யின் தாக்குதல் இருந்தாலும், அது 'வாசனை அளவே'யாம். அதனாலும் 'ஆகாமியவினை' தோன்றலாம். ஆனால் அருளாளர்கள், சிவத்தை விடாது பற்றி நிற்பர் ஆதலின் அந்த மெய்யுணர்வு ஆகாமியத்தை ஒட்டி விடும்.[52]

*"உலகம் நிலைபெற்றுள்ள காலத்தில், அவற்றில் பிறந்தும் இறந்தும்,* **வினைகளை** *ஈட்டியும், அவற்றின் பயனை நுகர்ந்தும் வரும் உயிர்கள் மேலும் அவ்வாறு செயற்படுதற்கு இடையே சிறிதுகாலம் இளைப்பாறுதல் பொருட்டு உலகம் ஒடுங்கவும் வேண்டும்"*[53]

என்று, உலக ஒடுக்கத்திற்கு 'வினை நுகர்ச்சி'யும் ஒரு காரணம் என விளக்குவர் சி. அருணைவடிவேலு முதலியார்.

**திருவாசகத்தில்!**

இங்கே சொல்லப்பட்ட 'கன்மம்' அல்லது 'வினை' பற்றிய பல்வேறு கருத்துக்களையும் மணிவாசகப் பெருந்தகை, தம் திருவாசகத்தில் பல்வேறிடங்களிலும் எடுத்து மொழிகின்றார்.

"**வினை***யேனை*"

"**வினையேன்** *மனத்தே*"

"**வினையேன்** *மனமஞ்சி*"

என யாதொரு அடைமொழியுமின்றி 'வினை'யைக் குறிப்பிடுபவர்,

"*வினையின்* **தொகுதி**"[54]

என, முற்பிறவிகளில் செய்த வினைகளின் கூட்டத்தைச் சுட்டுகின்றார்.

வினையை,

"*வல்வினைக்* **காடு**"

எனக் 'காடாக'வும்;

"*இருவினை மா***மரம்**"[55]

என, 'நல்வினை, தீவினைகளை' மரமாகவும் உருவகிக்கின்றார் மணிவாசகர்.

"முற்பிறப்புக்களில் செய்யப்பட்டுக் கிடக்கும் பழநினைவுகளின் தொகுதி 'சஞ்சிதம்' எனப்படும் என முன்னர்க் கூறப்பட்டது. அப் 'பழவினை'யாகிய 'சஞ்சிதம்' குறித்துப் பல பாடல்களில் குறிப்பிடுகின்றார் மணிவாசகர் :

"*முந்தை வினை*"

"*முந்தை என்னுடை வல்வினை*"

"*தொல்லை வினை*"

"*பழவல் வினைக்குள் அழுந்தவும்*"

"*பண்டைக் கொடுவினை நோய்*"[56]

என்றெல்லாம் கூறுபவர்,

"இந்த வினைத்துன்பங்களினின்றும் நீங்கி ஆரா இன்பத்தில் திளைக்க வேண்டும்" எனும் வேட்கையால் பின்வருமாறு இறைவனிடம் வேண்டுகின்றார் :

"விலங்கி னேன்வினைக் கேட னேன், இனி
மேல்விளைவத றிந்திலேன் . . . .
கலங்கினேன் . . . . ."

"வழுங்குகின் றாய்க்குன் அருளார்
அமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை
யேன்என் விதியின்மையால்
தழுங்கருந் தேனன்ன தண்ணீர்
பருகத்தந் துய்யக் கொள்ளாய்
அழுங்குகின் றேன்உடை யாய்அடி
யேன்உன் அடைக்கலமே!"

"தனித்துணை நீநிற்க யான்தருக்
கித்தலை யால்நடந்த
வினைத்துணை யேனை விடுதிகண்
டாய்!வினை யேனுடைய
மனத்துணை யேயென்றன் வாழ்முத
லேயெனக் கெய்ப்பில் வைப்பே!
தினைத்துணை யேனும் பொறேன்!துய
ராக்கையின் திண்வலையே!"[57]

- இவ்வாறு வருந்தும் அடிகள், இறைவன் பெருமைதனை ஓயாது சொல்லிக் கொண்டே வந்தால், 'முந்தைவினை' ஒய்ந்துவிடும் என்ற முடிவுக்கு வருகின்றார். எனவே,

"சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
**முந்தை வினைமுழுதும்** ஓய உரைப்பன்யான்"[58]

என்கின்றார். எனினும் இறைவன் பெருமை முழுவதையும் நம்மாற் சொல்ல இயலவில்லையே என்று ஏங்குகின்றார்.

"பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்"[59]

என்பதால் இதனை அறியலாம்.

". . . . சிவபரம்பொருளை நிரம்பப் புகழுமாறு இல்லாமைக்கு ஏதுவாய் நின்ற பொல்லா வினையை விதந்து 'பொல்லா வினையேன்' என்றார் . . . . அவ்வினை தன்னைப் பல்வேறு பிறப்புக்களில் புகுத்துத் துன்புறுத்திய பொல்லாங்கை,

*'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்*
*மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"*
*(சிவபுராணம். 26-32)*

என்று தெரிவிக்கின்றார். இதன்கண் 'புல்' முதலாகக் கூறினாரேனும், 'கல்' முதல் 'தேவர்' ஈறாகக் கூறுவது கருத்தாகக் கொள்க. வினையின் செயல் வகையைக் காணும்முகத்தான், தாம் பண்டு பிறந்திறந்து கழித்த பிறப்புக்களை உணர்ந்து கூறுவது ஒருவகையால் சான்றோர் கூறும் **'தம்மை உணரும்நெறி'**யுமாம்.

*'தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்'*

சான்றோர் என்பர் மெய்கண்டதேவர்.

இனி ஆசிரியர் திருமூலனார்,

*'கூறுமின் நீர்முன் பிறந்திங் கிறந்தமை*
*வேறொரு தெய்வத்தின் மெய்ப்பொருள் நீக்கிடும்'*

*என்பதனால், முதற்கண் தமது புராணமாகிய பிறப்பு வரலாற்றினைக் கூறினாரென்று கொள்வதுமாம்!"*[60]

என ஔவை சு. துரைசாமி கூறும் விளக்கவுரை இங்குக் கருதத்தகும்.

இறைவன் திருவருளால், தம் 'வல்வினை' எனும் பகை மாய்ந்தது என்பதை அழகுறச் சித்திரிக்கின்றார் மணிவாசகர்.

*"நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து*
*நான்என தெனும்மாயக்*
*கடித்த வாயிலே நின்றுமுன்* ***வினை****மிகக்*
*கழறியே திரிவேனைப்*
*பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய*
*அரும்பொருள் அடியேனை*
*அடித்த டித்துவக் காரமுன் தீற்றிய*
*அற்புதம் அறியேனே!"*

*"வம்ப னாய்த்திரி வேனை'வா' என்று*
**வல்வி னைப்பகை மாய்த்திடும்**
*உம்பரான்"*[61]

என்பன மணிவாசகர் மணிமொழிகள்.

'எல்லாமே சிவன் செயல்' என்ற நிலைக்கு வந்ததுமே, 'வினை' இருக்குமிடமே தெரியாமல் மறைந்தொழியும். இதனை மணிவாசகர்,

*"கயல்மாண்ட கண்ணிதன் பங்கனெனைக் கலந்தாண் டலுமே*
*அயல்மாண்* **டருவினைச் சுற்றமுமாண்***(டு) அவனியின்மேல்*
*மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண்(டு) என்னுடைய*
*செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ"*[62]

என்னும் திருவாக்கால் வெளிப்படுத்துகின்றார்:

இறைவன் அருளால் வல்லினை நீங்கும்; நீங்கினால் பிறவித் துன்பமும் ஒழியும்; பின்பு பேரின்பநிலைதான்.

*"நாயிற் கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்துத்*
*தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்*
**மாயப் பிறப்பறுத் தாண்டான்என் வல்வினையின்**
*வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ?"*[63]

என்ற திருவாசகத் திருப்பாடலால் இதனையறியலாம்.

*"அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்!"*[64]

எனச் சம்பந்தர் அருளிய தேவாரமும்;

*"குற்றொ ருவரைக் கூறைகொண்டு*
*கொலைகள் சூழ்ந்த களவெலாம்*
*செற்றொ ருவரைச் செய்த தீமைகள்*
*இம்மை யேவரும் திண்ணமே"*[65]

எனும் சுந்தரர் அருளிய தேவாரமும்;

*"இருவினைப் பாசம் மும்மலக்கல் ஆர்த்தலின்*
*வருபவக் கடலில்வீழ் மாக்கள்"*[66]

எனச் சேக்கிழார் அருளிய திருவாக்கும் இங்கு ஒப்புநோக்கத்தகும்.

'கன்மம்' அல்லது 'வினை' பற்றித் தமிழ்ச் சான்றோர்கள் பலபடக் கூறியுள்ளனர்.

*"இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினா-*
*ரிடத்து மயக்கத்தைப் பற்றிவரும் நல்வினை*
*தீவினை என்னும் இரண்டு வினையும் உளவாகா"*

என்ற பொருளில்,

*"இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"*[67]

என்பர் வள்ளுவர். மேலும் வினைக்கொடுமை பற்றி உணர்த்தற் பொருட்டுத் 'தீவினையச்சம்' என்றதோர் அதிகாரமே வகுத்துள்ளார்.

மேலே கூறிய 'கன்மத்'தின் இயல்புகளைச் சைவ சித்தாந்தச் சாத்திர நூல்களும் விரிவாகப் பேசுகின்றன. அவற்றுட் சில வருமாறு:

*"அவையே தானே யாய்இரு* **வினையின்**
*போக்கு வரவு புரிய ஆணையின்*
*நீக்க மின்றி நிற்கு மன்றே"*[68]

என்பது மெய்கண்டார் திருவாக்கு. இதில், "முதல்வன் உயிர்களோடு இயைந்து நிற்றல்; உயிர்களை வினைக்கேற்பச் செயற்படுத்துதல்;உயிர்கள் இறந்தும் பிறந்தும் வருதல்; உயிர்களைச் செயற்படுத்தும் தனது சத்தியினின்றும் முதல்வன் வேறாகாது நிற்றல்" ஆகியன விளம்பப்படுகின்றன.

மேலும் அவர்,

*"இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வ*
*னாணையின் வரும்"*[69]

என்றும் கூறுவர்.

*"அவனே தானே யாகிய அந்நெறி*
*ஏகன் ஆகி இறைபணி நிற்க*
*மலமாயை தன்னொடு* **வல்வினை யின்றே**"

என்றும்;

*"அவனருளா லல்லது ஒன்றையுஞ்*
*செய்யானாகவே* **அஞ்ஞான கன்மம்**
*பிரவேசியா"*[70]

என்றும் கூறுவர் மெய்கண்டதேவர்.

*"வினையால் அசத்து விளைதலால் ஞானம்*
*வினைதீரி னன்றி விளையா - வினைதீர*
*ஞானத்தை நாடித் தொழுவே யதுநிகழு*
*மானத்தா லன்பிற் றொழு"*[71]

என்பதன் வாயிலாகப் 'பிராரத்த வாசனை' கழிதற்குரிய வழியினையும் மெய்கண்டார் கூறினார் எனலாம்.

இருவினைப் பயன்களை உயிர்கள் நுகரும் முறைமை குறித்து அருணந்தி சிவாசாரியார் கூறுவது வருமாறு:

*"இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து*
*வருவது போவ தாகு மன்னிய வினைப்பயன்கள்*
*தருமரன் றரணியோடு தராபதி போலத் தாமே*
*மருவிடா வடிவுங் கன்மப் பலன்களு மறுமைக் கண்ணே"*[72]

கொற்றவன்குடி உமாபதிதேவ நாயனாரும்,

*"படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப்*
*பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்ப"*[73]

என்று 'வினைக்கோட்பாட்டை'க் கூறுவர்.

## 5.3 மாயை

### 'மாயை' - ஒரு விளக்கம்

*"உலகின் அடிப்படை 'மாயை'; அதுவே அதன்பொருட் காரணம். 'மாயை' என்னும் சொல், உலகம் தோன்றுதற்கும், அது மீண்டும் சென்று ஒடுங்குதற்கும் அடிப்படையான தத்துவத்தை விளக்கும். 'மா' என்றால் ஒடுங்குதல்'. 'யா' என்றால் 'வருதல்'. உருவமற்று, அழிவற்று, நித்தியமான அது, ஒரு முடிவான பொருள். அது, தன் தோற்றத்திற்காக எதற்கும் கட்டப்பட்டதல்ல. வேதாந்தி, அதை நித்தியமென்றோ, அநித்திய மென்றோ சொல்ல முடியாமல் நிற்பது போலன்றிச் சித்தாந்தி அதை உண்மையானதென்றும், வெளித்தன்மையுடைய தென்றும் கூறுகிறான். தனது அறிந்து உணரும்*

*திறமையைச் செயல்படுத்த ஆன்மாவுக்குச் சத்தி தேவைப்படுகிறது. அந்தச் சத்தியைத்தான் 'மாயை' அளிக்கிறது. சத்தியை அளிப்பதுடன், அச்சத்தியைப் பயன்படுத்தும் கருவிகளையும் 'மாயை' அளிக்கிறது. அவை 'உடல், உள்ளத்திறன், வாழ்வதற்கு ஓர் உலகம், அனுபவிப்பதற்குப் பொருள்கள்' போன்றவை. ஆகவே மாயையின் கைவேலையானது, 'தனு (தேகம்), கரண (மனக்கருவிகள்), புவன (உலகங்கள்), போகம் (அநுபவிக்கும் பொருள்கள்)' ஆகியவற்றை அளிக்கிறது. அதுவே அண்டம்; அதுவே பிண்டம்!"*[74]

என்று 'மாயை' என்பதற்கான விளக்கம் தருவர் ர. ராமனுஜாசாரி.

'பாசம்' மூன்றனுள் 'மாயை' என்பதும் ஒன்று என்பது முன்னரே கூறப்பெற்றது. வடமொழியில் 'மாயை' என வருவது தமிழில் 'மாயை' என வரும். 'மாய்' என்ற பகுதியிலிருந்து 'மாயை' எனும் சொல் தோன்றியது. எனவே இது தமிழ்ச் சொல்லே என்றும் கூறுவர். மாய்தல் - மறைதல். உலகமாய்த் தோன்றி மறைவது எதுவோ அதுவே 'மாயை' என்பர்.

*"சைவ சித்தாந்தத்தின்படி மாயை, மெய்யாகவே உள்ள ஒரு பொருள்; அநாதி நித்தியம்; சடம்; இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாய் இருப்பதும்; இறைவனில் வியாப்பியம். ஒருவனுக்கு அவனின் வேறாய் உள்ள சத்தி 'பரிக்கிரக சத்தி'யாகும். அவனில் வேறாகாது ஒன்றாய் இருக்கும் சத்தி 'தாதான்மிய சத்தி'எனப்படும்"*[75]

என்று கூறுவர் சி. அருணைவடிவேலு முதலியார்.

**'மாயை'யின் இயல்பு**

உயிர்களுக்குப் பிறப்பு நிலையில், அறியாமையும் அறிவும் ஒன்றோடொன்று மாறுபட்டு நிகழ்ந்து வருகின்றன. அறியாமைக்குக் காரணம் 'ஆணவமலம்'என்பது முன்னர்க் குறிக்கப்பட்டுள்ளது. உயிர்களின் அறிவை விளக்கி, வளர்த்து வருவது, காணப்படும் இவ்வுலகம் ஆகும். அஃது இரண்டு பிரிவாக நின்று உயிர் உணர்வை விளக்கியும், பெருக்கியும் வருகின்றது. ஒன்று, உடம்பு; மற்றொன்று, உடம்பின் சூழ்நிலையாகிய நிலமும், அதன்கண் உள்ள பொருள்களும் ஆகும்.

*"இருட்டில் உள்ள கண்ணுக்குப் பொருள்களைக் காட்டும் விளக்குப் போல, நம் அறிவை விளக்கிவரும்*

உடம்பும், சூழ்நிலையுமாகிய உலகைத் 'தனு, கரணம், புவனம், போகம்' என நான்குவகைப்பட வைத்து விளக்குவது சைவ நூல் மரபு. 'தனு' - உடம்பு. (The physical aspect of the body); 'கரணம்' - மனம் முதலிய அகக்கருவிகள் புவனம் - உடம்புக்கு ஆதாரமாக உள்ள நிலம்; போகம் - நிலத்தில் உள்ள நுகர்ச்சிப் பொருள்கள். காணப்படும் பொருள்கள் எல்லாம் இந்த நான்கு வகையில் ஒன்றாக அடங்கும். இவை அனைத்தும் 'மாயேயம்' என்ற சொல்லால் குறிக்கப்படும். மாயேயம் - மாயையின் காரியம். காணப்படும் பொருள்கள் எல்லாவற்றுக்கும், முடிந்த முதற்காரணமாக (The ultimate substantial cause) உள்ள பொருள் **'மாயை'** எனப்படும்."[76]

என்பர் க. வச்சிரவேல் முதலியார்.

மாயை, அறிவில் பொருள்; அரு; சத்திரூபகமாய், வியாபகமாய் என்றும் உள்ளது. இது, முதல்வன் திருவருளால் வியாபிக்கப்பட்டு, அவனது திருக்குறிப்பின்படித் தன் செயல்களைத் தோற்றியும் ஒடுக்கியும் வரும்.

'மாயை'யின் பொருள்கள் மூலமாகவே ஆன்மா அறிவைப் பெறுகிறது. இல்லாவிடில், அறியாமையாகிய இருளில்தான் கிடக்கும். ஆனாலும் அது அளிப்பது 'பாச ஞானமே'யாகும். மாயையானது ஆன்மாவை, ஆசை, வெறுப்பு, இன்பம், துன்பம் ஆகிய உணர்வுகளில் மயங்கும்படிச் செய்கிறது. அதுவே,ஆன்மாவைக் கன்மவிதியின் கீழ் வரும்படிச் செய்து, மறுபிறவிக்குக் கொண்டு செல்கிறது.[77]

**மாயையின் வகைகள்**

'மாயை' இருவகைப்படும் :

1) சுத்த மாயை
2) அசுத்த மாயை

இவற்றுள், 'சுத்த மாயை'யானது மல, கன்மங்களோடு விரவாதது. தன்னோடு தொடர்புடைய உயிர்களுக்கு இன்பம் தருவது; மயக்காது நின்று, பேரறிவையும் பேராற்றலையும் உதவுவது. முதல்வன் திருவருள் நேரேபற்றி நின்று தொழிற்படுத்துவதற்கு உரியது. தூய்மையான சிவத்துக்கும், உணர்வற்ற பொருளுக்கும் இடையே உள்ளது.

'அசுத்த மாயை' மந்தமானது; அறிவற்றது. அது, தன்னிடமிருந்து பல்வேறுபட்ட தன்மைகள் தோன்ற, உடம்புகள், கருவிகள், உலகங்கள், பொருள்கள் ஆகியவற்றை ஏற்படுத்துகின்றது. மல, கன்மங்களோடு கலந்து நின்று உயிர்களை மயக்கி அறிவிப்பது; இன்ப, துன்ப, மயக்கம் எனும் மூன்றனையும் தருவது.

தத்துவங்கள், ஐம்பொறி புலன்கள்; அந்தக்கரணங்கள், உடம்பின் வகைகள், ஐந்து அவத்தைகள் ஆகிய பல்வேறுபட்டனவும் இம் 'மாயை'யில் வைத்துச் சமயவாதிகள் விளக்குவர்.[78]

**மாயை நீக்கம்**

உடம்பும் உலகுமாய் அமைந்த தத்துவங்களை, 'அசத்து' என்று கண்டு அவற்றினின்றும் நீங்க, முதல்வனது திருவருள் துணையை நாடவேண்டும்.

**திருவாசகத்தில்!**

மணிவாசகர், 'மும்மலங்கள்'[79] என்று கூறுவது கொண்டு, 'மாயை'யினையும் கூறியுள்ளார் எனலாம். எனினும் அடிகளே, 'மாயை'யின் அளப்பரும் சத்திகளை வெளிப்படையாகவே கூறுகின்றார்.

*"பெரு**மாயை** எனைப்பல சூழவும்"*

*"ஆறு கோடி **மாயா சத்திகள்***
*வேறு வேறுதம் **மாயைகள்** தொடங்கின"*

என்பவர்,

*"மண்ணினில் **மாயை** மதித்து வகுத்த*
*மயக்கறும் ஆகாதே!"*

*"அன்றிது நன்றிது நன்றெனும் **மாயை***
*அடங்கிடும் ஆகாதே!"*[80]

என்று தெளிவாகவே கூறுகின்றார்.

'மாயை'யின் காரியம் எனப்படும் 'தனு, கரண, புவன, போகம்' பற்றிய குறிப்புக்களைத் திருவாசகத்தில் காணலாம்.

*"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்*
*அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி"*

*"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி"*

*"அம்பர மேநில னேயனல்*
*காலொ டொப் பானவனே"*

"உழிதரு காலும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும்"

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி"

"புவனம் நீர்தீக் காலொடு வானம்"

"அம்பரமே நிலனே அனல் கால்"

"தண்புனல் விண்கால் நிலநெருப்பாம்"

"நிரந்தஆ காயம் நீர்நிலம் தீகால்"

"பூதங்கள் ஐந்தாகி"[81]

எனவரும் திருவாசகத் தொடர்கள், 'அசுத்த மாயை' பற்றியன.

"அனைத்துலகும் ஆய நின்னை
**ஐம்புலன்கள்** காண்கிலா"

"சிந்தை செய்கை கேள்வி வாக்குச்
சீரில் ஐம்பு லன்களால்"

"யான் ஐம்புலன்கள் கொண்டு"

"புலனால் அலைப்புண்டு"

"புலனின்கட் போதலொட்டா"[82]

என்பன 'ஐம்புலன்கள்' பற்றி அடிகள் இயம்புவன.

"சிந்தை செய்கை கேள்வி வாக்கு"

"என் நெஞ்சும் பொய்"

"வன்நெஞ்சக் கள்வன்"

"நானும்என் சிந்தையும்"

"கற்போலும் நெஞ்சம் கசிந்துருக"[83]

என்பன போல் வருவன 'அந்தக் கரணங்களை'க் குறிக்கும்.

"புலன்கள் திகைப்பிக்க யானும்
திகைத்திங்கொர் பொய்ந்நெறிக்கே
விலங்குகின் றேனை விடுதிகண்
டாய்விண்ணும் மண்ணுமெல்லாம்
கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய்
தாய்கரு ணாகரனே!

*துலங்குகின் றேன்அடி யேனுடை*
*யாய்என் தொழுகுலமே!"*

*"மின்கணி னார்நுடங்கும் இடையார்*
*வெகுளிவலையில் அகப்பட்டுப்*
*புன்கண னாய்ப்புரள் வேனைப்*
*புரளாமற் புகுந்தருளி*
*என்கணி லேஅமு தூறித்தித்*
*தித்தென் பிழைக்கிரங்கும்*
*அங்கண னே!உடை யாய்!அடி*
*யேன்உன் அடைக்கலமே!"*[84]

என்னும் திருவாசகப் பாடல்கள் 'மாயை நீக்கம்' பற்றியன.

*"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி*
*அறிவழிந்திட் டைம்மே லுந்தி*
*அலமந்த போதாக அஞ்சேல்என் றருள்செய்வான்"*[85]

எனும் சம்பந்தர் தேவாரமும்;

*"புலன்களைப் போகநீக்கிப் புந்தியை யொருங்கவைத்து*
*. . . . . . . . . . . . . . . . மனத்தினுட் போகமாகிச்*
*சினங்களைக் களைவர்போலும் திருப்பயற் றூரனாரே!"*

எனும் அப்பர் தேவாரமும்;

*"பொள்ளலிவ் வுடலைப் பொருளென்று"*[87]

எனும் சுந்தரர் தேவாரமும் இங்கு ஒப்பு நோக்கி எண்ணத்தகுவன.

சிவஞானபோதத்தில் முதல் நூற்பா-2ஆம் அதிகரணத்தில் வரும் ஒரு வெண்பா, இம் 'மாயை' பற்றியது.

*"வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்*
*அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால் - வித்தகமாம்*
*வேட்டுவனாம் அப்புழுப்போல் வேண்டுருவந்*
*தான்கொடுத்துக்*
*கூட்டானே மண்போல் குளிர்ந்து"*[88]

"விதையானது நிலத்தினுட் பொருந்திக் கிடப்பது போல, முதற் காரணமாகிய 'மாயை', தனக்கு நிலைக்களமான சிவனது சத்திக்குள் பொருந்தி நிற்கிறது. நிலம் குளிர்ந்தபொழுது, அவ்விதையினின்றும் முளை

தோன்றுவது போல, அச் சிவசத்தி விரும்பியபொழுது, அம் மாயையினின்றும் உலகம் தோன்றும்" என்பது இதன் பொருள்.[89]

அன்றியும்,

*"மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணாதேல்*
*ஆயாதாம் ஒன்றை"*

என்றும்;

*"மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே"*

என்றும் கூறுவர் மெய்கண்டார்.[90]

*"மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்*
*ஏயுமும் மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந்*
*தூயவன் றனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்*
*ஆய்வரிம் மலங்க ளைந்து மணுக்களை யணைந்து நிற்கும்"*[91]

என்பது அருணந்தி சிவாசாரியர் வாக்கு.

*"மோகமிக வுயிர்கடொறு முடனாய் நிற்க*
*மூலவா ணவமொன்று முயங்கிநின்று*
*பாகமிக வுதவுதிரோ தாயி யொன்று*
*பகர்***மாயை** *யொன்றுபடர் கன்ம மொன்று"*[92]

என்பது சிவப்பிரகாசம்.

**முடிபுகள்**

இவ் ஆய்வுக் கட்டுரை வாயிலாக அறியத்தகும் முடிபுகள் பின்வருமாறு:

1. "பாசம், கட்டு, கயிறு, தளை, தடை, மாசு, மலம், அழுக்கு" என்பன ஒருபொருட் சொற்கள்;
2. சைவ சித்தாந்தம் கூறும் பாசங்களாகிய 'ஆணவம், கன்மம், மாயை' மூன்றும் அநாதி; இம் மூன்றினோடு, 'மாயேயம், திரோதானம்' எனும் இரண்டையும் சேர்த்து, 'மலம் ஐந்து' எனலும் உண்டு;
3. உயிர்களுக்குப் பகை, 'பொல்லாத ஆணவமே' யாகும்;
4. ஆணவம் ஒன்றே; எனினும் அளப்பரும் ஆற்றல்கள் கொண்டது;
5. அது, முத்திக் காலத்தில் தன் சத்தி மடங்கிக் கிடக்கும்;

6. 'கன்மம்' எனப்படும் 'வினை', 'சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்' என மூவகைப்படும்;

7. வினைப்பயன்களை இறைவனே அந்தந்த உயிர்களுக்குப் போய்ச் சேரும்படிச் செய்வது, அவனது கருணையினாலாகும்;

8. 'மாயை'யின் பொருள்கள் மூலமாகவே அறிவு பெறுகிறது 'உயிர்';

9. 'சுத்தமாயை, அசுத்தமாயை' என மாயை, இருவகைப்படும்;

10. தத்துவங்கள், பொறி புலன்கள், உடம்பின் வகைகள், ஐந்தவத்தைகள் ஆகியனவெல்லாம் 'மாயை'யில் அடங்குவனவாம்;

11. மணிவாசகர் இம் 'மும்மலங்கள்' பற்றி எடுத்துரைக்கின்றார்;

12. 'சிவஞானபோதம்' முதலான சாத்திர நூல்களும், 'தேவாரம்' முதலான தோத்திர நூல்களும் இம் 'மும்மலங்கள்' பற்றி விரிவாக விளக்குகின்றன.

## சான்றெண் விளக்கம்


1. மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி, ப.25.
2. வ.ஆ. தேவசேனாபதி, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், ப.57.
3. திருவாசகம், 1:64; 9:4:4; 18:9:3; 31:4:3; 31:7:1; 37:7:1; 40:7:3; 41:8:3; மிகைப்பாடல் :11.
4. மேலது, 42:10:3.
5. தேவாரம், 986; 5853.
6. கந்தர் அநுபூதி, 43:3-4.
7. கந்தபுராணம், (ஆதாரம்: க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்', ப.66.)
8. ச. கங்காதரன், சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும், ப.100.
9. திருமந்திரம், 115.
10. சம்பந்தர் தேவாரம், 121: 1-2.
11. திருவாசகம், 19:7:3; 30:7:2; 48:2:1; 51:9:2.
12. சிவஞானபோதம், நூற்பா 9:1; நூற்பா:2: அதிகரணம் 2:உதாரணம்.
13. ஆ. ஆனந்தராசன், சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, பக். 54-56.
14. சி. அருணைவடிவேலு முதலியார், சிவஞானபோத மாபாடியப் பொருள்நிலை விளக்கம், ப.327.
15. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.129, 130,137.
16. மேலது, ப.161.
17. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா. நூல், ப.328.
18. சிவஞான சிந்தியார், 176, 177.

19. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், பக். 100,101.
20. சி. அருணைவடிவேலு முதலியார், முப்பொருள் இயல்பு, ப.12.
21. க. வச்சிரவேல் முதலியார், **'சைவம்'**, சைவமும் வைணவமும், ப.67.
22. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.199
23. க. வச்சிரவேல் முதலியார், மு.கா.நூல், ப.67.
24. வ.ஆ. தேவசேனாபதி, மு.கா.நூல், ப.101.
25. மேலது, ப.102.
26. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா. நூல், பக்.295, 297.
27. திருவாசகம், 7:13:2; 19:4:3-4.
28. மேலது, 30:3:1.
29. மேலது, 31:9:3-4
30. மேலது, 34:6:1-2
31. மேலது, 36:8:3.
32. மேலது, 1:50-61.
33. ஔவை சு. துரைசாமி, சிவபுராணம் விரிவுரை, ப.28.
34. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.297.
35. திருவாசகம், 51:1.
36. அப்பர் தேவாரம், 4480:3.
37. சிவஞானபோதம், நூற்பா 4:2; அதிகரணம்:2:உதாரணம்.
38. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.96-97.
39. சிவஞானபோதம், நூற்பா 12:2; அதிகரணம்:1:உதாரணம்.
40. சிவஞான சித்தியார், 175:3.
41. திருவருட்பயன், 23, 25.
42. மறைமலையடிகள், மு.கா.நூல், ப.26.
43. க. வச்சிரவேல் முதலியார், மு.கா.நூல், ப.68
44. ந. சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, ப.193.
45. மேலது, ப.195.
46.ச. கங்காதரன், மு.கா.நூல், பக்.117-118.
47. தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல், 29.
48. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், ப.334.
49. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.49.
50. மேலது ப.51.
51. மேலது. ப.53.
52. மேலது, ப.273.

53. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், ப.235.

54. திருவாசகம், 6:8:4; 6:11:2; 6:35:4; 6:6:2.

55. மேலது, 6:19:1; 3:87.

56. மேலது, 1:20; 26:3:1; 14:13:3; 30:7:2; 147:1:1.

57. மேலது, 30:3:2.4; 24:10: 6:39.

58. மேலது, 1:19 20.

59. மேலது, 1:25.

60. ஔவை சு. துரைசாமி, மு.கா.நூல், பக்.18 19.

61. திருவாசகம், 41:3; 42:1-2.

62. மேலது. 11:11.

63. மேலது, 13:3.

64. சம்பந்தர் தேவாரம், 1249:1.

65. சுந்தரர் தேவாரம், 7878:1-2.

66. பெரியபுராணம், திருநாவுக்கரசர், 129.

67. திருக்குறள், 5.

68. சிவஞானபோதம், நூற்பா 2.

69. மேலது, நூற்பா 2: அதிகரணம் 2.

70. மேலது, நூற்பா 10; அதிகரணம் 2:ஏது..

71. மேலது, நூற்பா 12; அதிகரணம் 4:உதாரணம்.

72. சிவஞான சித்தியார், 94.

73. சிவப்பிரகாசம், 24:1.

74. ர. (இ)ராமாநுஜாசாரி, சைவ சித்தாந்தம், ப.75.

75. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், பக்.335,352.

76. க. வச்சிரவேல் முதலியார், மு.கா.நூல், பக்.69,70.

77. ர. (இ)ராமாநுஜாசாரி, மு.கா.நூல், ப.81.

78. 1. மேலது, பக்.75-84.
    2. க. வச்சிரவேல் முதலியார், மு.கா.நூல், பக். 71-77.

79. திருவாசகம், 19:7:3; 30:7:2; 48:2:1; 51:9:2.

80. மேலது, 1:58; 4:44-45; 49:5:1; 49:8:2.

81. மேலது, 3:1-2; 4:37; 6:20:4; 5:8:1; 5:15:1; 5:70:1; 6:20:1; 6:31:1; 22:6:3; 31:10:1.

82. திருவாசகம், 5:76:3; 5:79:1; 6:12:1; 6:21:1; 6:24:3.

83. மேலது, 5:75:1; 5:90:1; 10:11:1; 10:15:1; 15:4:1.

84. மேலது. 57:28; 24:7.

85. சம்பந்தர் தேவாரம், 1394:1-2.

86. அப்பர் தேவாரம், 4480:1, 3-4.

87. சுந்தரர் தேவாரம், 7837:1.

88. சிவஞானபோதம், நூற்பா:1, அதிகரணம் 2:உதாரணம்.

89. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.29.

90. சிவஞானபோதம், நூற்பா 4, அதிகரணம் 2:உதாரணம்; நூற்பா 10:3.

91. சிவஞான சித்தியார், 177.

92. சிவப்பிரகாசம். 32: 1-2.

# 6
# திருவாசகத்தில் 'நால்வகை நெறிகள்'

## முன்னுரை

திருவாசகத்தில் இயம்பப்படும் 'நால்வகை நெறிகள்' குறித்து ஆராய்வது இவ் இயலின் நோக்கம்.

## 'நால்வகை நெறிகள்' - ஒரு விளக்கம்

> *"பாசப்பற்று விடுதற்பொருட்டு, முதல்வனைப் பற்றும் முறையே 'கடவுள் வழிபாடு' எனப்படும். அது, 'பொதுவும் சிறப்பும்' என இருவகைப்படும். வழிபாடு - பின் நிற்றல், இறைவன் திருக்குறிப்பின்வழி நின்று ஒழுகுதல். வழிபாடு, பிற்றைநிலை என்பவை ஒரு பொருட் சொற்கள். 'பொது வழிபாடா'வது இறைவனது அருளாணை ஆகிய அறத்தின்வழி நிற்றல் . . . 'சிறப்பு வழிபாடா'வது, முதல்வனது உண்மையியல்பைத் தெளியக் கண்டு அவனைச் சார்தலால், அவன்றன் அருட்குணங்கள் நம்மிடத்து மேம்பட்டு விளங்குமாறு ஒழுகும் ஒழுக்கம். இஃது அருள் நூல்களை ஓதி உணர்ந்து, அவற்றுள் கூறியபடி முதல்வனை வணங்குதல், வாழ்த்துதல், நினைதல், உள் நோக்கி உணர்தல் என்னும் வடிவில் நிகழத்தக்கது...இது,* ***'சரியை, கிரியை, யோகம், ஞானம்'*** *என* ***நான்கு வகையுள்*** *வைத்துணர்த்தப்படும்!"*[1]

என்பது க. வச்சிரவேல் முதலியார் கூற்று.

> *"முத்தி அடையத் தேவையான ஒழுக்கமுறை நால்வகைப் படும். அவை 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்பனவாம். சரியா மார்க்கமானது, கடவுளுக்கு நமது மனம், மொழி, மெய் ஆகியவற்றால் தொண்டு செய்தலாகும். அடியவர் கொண்டுள்ள செயல், எண்ணம், வாக்கு ஆகிய அனைத்தும் இறைவனைப் பற்றியே இருத்தல் வேண்டும். உலகச் செயல்களுக்கும் ஆன்மீகச் செயல்களுக்கும் எவ்வித முரண்பாடும் இல்லை. எல்லாத்தொண்டுகளும் தெய்வப் பணிகளாகவே செய்யப்படுகின்றன. அப்பொழுது அவை, தெய்வீகத் தன்மைபெறுகின்றன. இதுவே* **'தாசமார்க்கம்'** *ஆகும். ஆன்மா, தன்னை ஒரு பணிவுடன் கூடிய அடிமையாகக் கருதி, இறைவனாகிய தலைவனுக்குத் தொண்டு செய்கிறது. இறைவனுக்குப் பணிவுடனும் பக்தியுடனும் தனது முழுத்திறமையுடனும் பணியாற்றவே விழைகிறது. 'கிரியை' என்பது உபாசனை முதலாக வரும் காரியங்களின் தொகுப்பை உடையது . . . . . இந்த மார்க்கம்* **'சத்புத்திரமார்க்கம்'** *ஆகும் . . . . . . . 'யோகம்' என்பது* **'சகமார்க்கம்'** *ஆகும். இம் மூன்று மார்க்கங்களும், கடைசி மார்க்கமான ஞானமார்க்கத்திற்கான ஏற்பாடுகளேயாகும். ஞானமார்க்கமே,* **'சன்மார்க்கம்'** *என வழங்கப்படும்"*[2]

என்று இந் 'நால்வகை நெறி' அல்லது 'மார்க்கம்' குறித்து ர. ராமானுஜாசாரி கூறுவர்.

மும்மலங்களின் சார்பால், உயிர்கள், பலவகைப் பிறப்புக்களை எய்தி, இன்ப துன்பங்கட்கு உள்ளாகின்றன. இவற்றை நீக்கி இறைவனின் பேரருளுக்கு உட்பட இந் 'நால்வகை நெறிகள்' உறுதுணை புரிகின்றன. இந் 'நெறிகள்' பற்றிச் சைவ சித்தாந்தச் சாத்திர, தோத்திர நூல்கள் விரிவாக எடுத்துரைக்கின்றன. 'சரியை' முதலிய மூன்றும், 'ஞானத்'தை அடைவிக்கும். 'முத்தி'யாகிய பெரும் பயனைப் பெற, இந்த ஞானமே வாயிலாகும். 'ஞானம்' மும்மலங்களையும் அகற்றி உயிரைத் தூய்மைப் படுத்தும்; பின்பு, இறைவனை அடைவிக்கும்: அவனது பேரின்பத்தில் திளைத்திருக்கச் செய்யும். 'சரியை.

கிரியை, யோகம், ஞானம்' எனும் நான்குமே, இறைவனுக்கு உயிர்கள் செய்யும் பணிகள் ஆகும்.

> *"வாழ்க்கையில் ஒவ்வொரு படியையும் கடந்த பின்னரே மேல்நிலைக்குச் செல்ல முடியும். அதுபோன்றே சமயத்துறையிலும் படிகள் உண்டு. ஊனில் அரும்பி, உணர்வு நிலையில் சாய்ந்து, உயிரில் கலந்து நிற்கும் சமயமானது, படிப்படியாக அமைக்கப்பட்ட ஒன்று. 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்னும் நான்கும், சமயப்படிகளாகும். வாழ்க்கைப் படிக்கும், சமயப்படிக்கும் ஒரு வேறுபாடு உண்டு. வாழ்க்கையில் ஒவ்வொரு படியாகவே கடந்து சென்று மேல்நிலைக்குச் செல்ல முடியும். ஆயின் சமயத்தில் ஒவ்வொரு படியாகக் கடந்து சென்றும் மேல்நிலை அடையலாம். தனித்தனி ஒவ்வொரு படியில் இருந்தேயும் மேல்நிலை (வீட்டுநிலை) அடையலாம்"*[3]

என்று ம.சா. அறிவுடைநம்பி கூறுவதும் இங்கு எண்ணத்தகும்.

**'சரியை'**

சிவபெருமானது முதன்மையைச் சிறிதளவேனும் உணர்ந்து, அப்பெருமானுக்குப் பணி செய்தல் வேண்டும் என்ற விருப்பம் சிறிதளவேனும் நிகழுமானால் அதுவே 'சத்தி நிபாதத்'தின் அடையாளமாகும். இச் 'சத்திநிபாதத்'தின் தன்மைக்கு ஏற்பவே சிவ வழிபாட்டில் ஈடுபாடும் ஏற்படும்.

> *"சரியை என்பது சிவபெருமானது* ***உருவத்*** *திருமேனியை மட்டும் உணர்ந்து, அதனைப்* ***புறத்தொழிலால்*** *மட்டும் வழிபடுதல் ஆகும். திருக்கோயிலிற் சென்று புலர்வதன்முன் அலகிடுதல், மெழுக்கிடுதல், விளக்கேற்றுதல், மாலைகட்டிக் கொடுத்தல், தலையாரக் கும்பிட்டுக் கூத்தாடுதல், பாடுதல் முதலியன 'சரியை' யாகும். 'சத்தி நிபாதம்' மிக மெல்ல நிகழ்வதாகிய 'மந்ததரம்' என்னும் நிலையில் நின்றோர், 'சரியை'த் தொண்டினை விரும்பிச் செய்வர்"*[4]

எனச் 'சரியை' என்பதற்கான விளக்கத்தை ஆ. ஆனந்தராசன் கூறுவர்.

"நந்தவனம் அமைத்தல், சிவனடியார்களைக் கண்டால் (சிவ வேடம்) அவர்களை வணங்கி, அவர்களுக்குச் செய்ய வேண்டிய பணி யாதெனக்

கேட்டு அதனைச் செய்தல்” ஆகியனவும் ‘சரியை’ என்பதனுள் அடங்கும்.[5] திருக்கோயிலில் உள்ள இலிங்கம் அருவுருவத் திருமேனியையும் புறத்தொழிலளவில் வழிபடுவதால், அவ்வழிபாடும் ‘சரியை’யில் அடங்கும் எனலாம்.[6]

“சரியா மார்க்கம், ஆணவத்தடிப்பைக் குறைக்கும். இந் நிலையில் பெறும் வெற்றியானது, ‘சாலோகத்’தை (கடவுளின் இருப்பிடத்தை) அளிக்கும். அதாவது, பக்தன் இம் மார்க்கத்தின் மூலம் ஈசனுலகை அடைகிறான்”7 என்பது ர. ராமானுஜாசாரி கூற்று.

ஆனால், ‘சரியை’ முதலான நெறிகளைக் கைக்கொள்வதற்கும் இறைவனின் திருவருள் வேண்டும்.

எனவே, மணிவாசகர், இந்நெறிகளைப் பின்பற்ற இறைவனின் இன்னருளை வேண்டுகின்றார்:

*“பாட வேண்டும்நான் போற்றி நின்னையே*
*பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்*
*காட வேண்டும்நான் போற்றி அம்பலத்*
*தாடும் நின்கழற் போது நாயினேன்*
*கூட வேண்டும்நான் போற்றி இப்புழுக்*
*கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்*
*வீட வேண்டும்நான் போற்றி வீடுதந்*
*தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே!”*[8]

என்பது சிவபெருமானிடம் மணிவாசகர் வேண்டுவது!

அடிகள், தாம் இச் ‘சரியைநெறி’யில் நில்லாது போனமைக்காகவும் வருந்துகின்றார்:

*“பாடிற்றி லேன்பணி யேன்,மணி*
*நீயொளித் தாய்க்குப் பச்சூன்*
*வீடிற்றி லேனை விடுதிகண்*
*டாய்வியந் தாங்கலறித்*
*தேடிற்றி லேன்,சிவன் எவ்விடத்*
*தான்எவர் கண்டனரென்*
*றோடிற்றி லேன்,கிடந் துள்ளுரு*
*கேன்,நின் றுழைத்தனனே!”*[9]

எனும் திருப்பாட்டில் மணிவாசகரது ஏக்கம் புலனாகின்றது.

'எம்பெருமானே எம்பெருமானே' என்றெல்லாம் அரற்றி உருக வேண்டும் என்ற தமது ஆசையை இவ்வாறு வெளிப்படுத்துகின்றார் மணிவாசகர்:

*"கையால் தொழுதுன் கழற்சே வடிகள்*
*கழுமத் தழுவிக் கொண்டு*
*எய்யா தென்றன் தலைமேல் வைத்து, எம்*
*பெருமான் பெருமான் என்(று)*
*ஐயா என்றன் வாயால் அரற்றி*
*அழல்சேர் மெழுகொப்ப*
*ஐயாற் றரசே ஆசைப்பட்டேன்*
*கண்டாய் அம்மானே!"*[10]

"ஆனாலும் நான் எண்ணியவாறு நடக்க என்னால் இயலவில்லை; இறைவா நீயே அதற்கும் அருள் புரியவேண்டும்!" என்ற பொருளில்,

*". . . . . . . . . உன் நாமம்*
*பிதற்றி நயனநீர்*
*மல்கா வாழ்த்தா வாய்குழறா வணங்கா*
*மனத்தால் நினைந்துருகிப்*
*பல்கால் உன்னைப் பாவித்துப் பரவிப்*
*பொன்னம் பலம்என்றே*
*ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி அருளாய்*
*என்னை உடையானே!"*[11]

என வேண்டுகின்றார்.

இறைவன், குருபரனாகித் தமக்கு அருள்செய்த அந்நிலையிலேயே,

*"தழலது கண்ட மெழுகது போலத்*
*தொழுதுள முருகி யழுதுடல் கம்பித்(து)*
*ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்"*[12]

அவனை வழிபடுகின்றார் மணிவாசகர்.

*"மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உன்விரை யார்*
*கழற்குஎன்*
*கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி*
*உள்ளம்*
*பொய்தான் தவிர்ந்து உன்னைப் போற்றி, சயசய போற்றி*
*என்றும்*

*கைதான் நெகிழவிடேன் உடையாய் என்னைக்*
*கண்டுகொள்ளே!"*[13]

என்பவர், தம் நெஞ்சைப் பார்த்து,

*"ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை என்புருகிப்*
*பாடு கின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை!"*[14]

என்றெல்லாம் கடிந்துரைக்கின்றார்.

"சோதியை யாம்பாட; சிவனென்றே வாய்திறப்பாய்; பொற்பாதம் ஏத்தி; நெடுந்தாரை கண்பனிப்ப"[15] என்றெல்லாம் திருவெம்பாவையில் கூறுகின்றார் மணிவாசகர்.

*"இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்!*
*இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்!*
*துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்!*
*தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்!*
*சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்!"*

என்றும்;

*"சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு*
*திரண்டுன் திருவார்த்தை*
*விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வேறு)*
*இருந்துன் திருநாமம்*
*தரிப்பார் பொன்னம் பலத்தாடும் தலைவா*
*என்பார்!"*[16]

என்றும், சிவனடியார்களின் செயல்திறம் குறித்து ஏத்துகின்றார் மணிவாசகர்.

**'கிரியை'**

*"சிவபெருமானின் அறிவுருவத் திருமேனியாகிய இலிங்க மூர்த்தத்தை அணுகியிருந்து, அதன்கண் அப்பெருமானை 'மந்திரம், கிரியை, பாவனை' என்ற மூன்றினாலும்* ***அகத்திலும் புறத்திலும்*** *பலவகை உபசாரங்களையும் முறைப்படி செய்து வழிபடுதலே 'கிரியை' என்பது. திருமுழுக்கு (அபிடேகம்), ஆடை அணிகலன், சந்தனம், மலர் முதலியவற்றால் செய்யும் ஒப்பனை (அலங்காரம்), படையல் (நிவேதனம்), புகை, ஒளி (தூபம், தீபம்) குடை, கொடி, கண்ணாடி, கவரி*

முதலிய மங்கலப் பொருட்கள் இவற்றை ஏற்பித்து, வலம் (பிரதட்சிணம்) செய்தல், அடிபணிதல் (நமஸ்காரம்), புகழ்ச்சி (தோத்திரம்) என்பவற்றைச் செய்து வேண்டி (பிரார்த்தித்து) நிற்றல் என்னும் இவ்வகை அணுக்கத் தொண்டுகள் 'கிரியை'யுள் அடங்கும். 'சரியை' நிலையிலும் 'திருமுழுக்கு' முதலியவற்றைச் செய்யினும் அவை, மேற்குறிப்பிட்ட 'மந்திரம்' மூன்றாலும் அகத்தும் புறத்தும் நிகழாது, செயலளவில் புறத்துமட்டிலும் நிகழ்தலின் அவை 'கிரியை' எனப்படுதல் இல்லை!"[17]

எனக் 'கிரியை'க்கான விளக்கம் தருவர் ந. சுப்புரெட்டியார்.

இது, வழிபாட்டில் நிகழும் செயல்களைப் பற்றியது; மேலும் அகத்தொடு புறமும் கலந்த பயிற்சியாகும். அஃதாவது, உடல் உறுப்புக்களாகிய கைகளைக் கொண்டு இயற்றப்படும் இவ் வழிபாட்டில் உள்ளமும் ஈடுபடுகிறது.

"பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி ஆகிய ஐந்து சுத்திகள் செய்யப்பெறு கின்றன. முழுமுதல் எழுந்தருளுவதற்காக இடம் (ஆசனம்), நினைத்த உருவம் (மூர்த்தி) அவ்வுருவத்தின் உள்ளீடாக உள்ள இறைஒளி (மூர்த்திமானாம் சோதி) உள்ளத்தால் கருதப்பெறுகின்றன (பாவித்தல்). இவ்வாறு, மெய்யன்போடு அர்ச்சனை செய்து, பரவிப் போற்றிப் பரிவினுடன் ஏரிஓம்பல் நாள்தோறும் செய்பவர்கள் இறைவனுக்கு அணுக்கராவர் (சாமீப்யம்)"[18]

என்று மேலும் விளக்கம் தருவர் வ.ஆ. தேவசேனாபதி.

'சரியைத் தொண்டி'னைச் செய்து வந்த முதிர்ச்சியினால், ஆணவமலம் மேலும் பரிபாகமுற்றுச் 'சத்தி நிபாதம்' மந்தமாய் நிகழும். அப்பொழுது 'கிரியைத் தொண்டி'ல் விருப்பம் ஏற்படும்.[19]

மணிவாசகர், இக் 'கிரியைத் தொண்டு' பற்றியும் ஆங்காங்கே இயம்புகின்றார்:

"தண்மலர் இட்டு முட்டா திறைஞ்சேன்"

"பரந்துபல் ஆய்மலர் இட்டு முட்டாதடியே இறைஞ்சி"

"இருந்து நலமலர் புனையேன்"

"பூமாலை புனைந் தேத்தேன்"

"சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கி"

"திருநீறே பூசப்பட்டேன்"

"அரும்பெரும் சோதி"

"அருவாய் உருவமும் ஆயபிரான்"

"ஆண்டுகொண்ட பரஞ்சோதி"

"உருமூன்றுமாகி உணர்வரிதாய் ஒருவன்"

"விரிசுடராய் நின்றமெய்யன்"

"தூவெள்ளை நீறணிவான் எம்பெருமான் சோதி"[20]

எனவரும் திருவாசகத் தொடர்கள் 'கிரியை' பற்றி எழுந்தன எனலாம்.

**'யோகம்'**

'கிரியைத் தொண்டி'னால். ஆணவமலம் மேலும் பரிபாகமுற்றுச் 'சத்தி நிபாதம்' தீவிரமாய் நிகழும். அந்நிலையில் இறைவனது அருவத் திருமேனியை உணரும் பக்குவத்தைப் பெற்று, அகத்தொழிலில் மட்டும் வழிபடுதல் 'யோகம்' ஆகும். மனத்தை அடக்கி, அகத்தே நிறுத்தி, ஒளி வடிவினனாகிய இறைவனோடு ஒன்றச்செய்தல் எனலாம்.[21]

"ஐம்பொறிகளை ஒடுக்கி, உயிர்ப்பை நிலைநிறுத்தி, 'மூலாதாரம்' முதலான ஆறு ஆதாரங்களில் உள்வழிகளை அறிந்து அவ்விடங்களில் பொருத்தித் தியானித்துச் சந்திர மண்டலத்திலுள்ள அமிர்தத்தை உடல் முழுதும் நிரப்பி, முழுச்சோதியை நினைந்திருந்து, வினைகள் கெடுதற்குரிய யோக நெறியைக் கடைப்பிடித்தவர் சிவனது உருவத்தைப் (சாரூபம்) பெறுவர்"[22] என்பர் வ.ஆ. தேவசேனாபதி.

'யோகம்' என்பதற்குக் 'கூடுதல்' அல்லது 'ஒன்றுதல்' என்று பொருள். இஃது எட்டுக் கூறுகளாகப் பகுத்துச் சொல்லப்படும். அவை: இயமம், நியமம், ஆசனம், பிரணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன. இவற்றை 'அட்டாங்கயோகம்' என்பர். இவற்றுள் 'சமாதி' என்பது, தன்னை மறந்து இறைவனோடு ஒன்றிவிடுதலாகும். சிவபெருமானைத் தியானித்தலும், அவனிடத்து அழுந்துதலும் 'சிவயோகம்' எனப்படும்.[23]

மணிவாசகர், தம்மை மறந்து சிவபெருமானோடு ஒன்றி நின்றவர்.

*"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்*
*சங்கரா ஆர்கொலோ சதுரர்?*
*அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்*
*யாதுநீ பெற்றதொன் றென்பால்?"*[24]

என்று கூறுவது, இதற்குச் சான்றாகும்.

*"கயன்மாண்ட கண்ணிதன் பங்கன்,எனைக்*
*கலந்து ஆண்டலுமே"*

*"நாம் ஒழிந்து* **சிவமான வாபாடித்** *தெள்ளேணங்*
*கொட்டாமோ"*[25]

என்று அடிகள் கூறுவது கொண்டு, தாம் இறைவனோடு ஒன்றி நின்ற தன்மையைச் சுட்டினார் எனலாம்.

**'ஞானம்'**

சிவபெருமானை நோக்கிச் செய்யும் 'சரியை, கிரியை, யோகம்' என்ற 'வழிபாடும் தொண்டும்'. சைவத்தில் 'தவம்' என்று சொல்லப்படும். 'மந்ததரம், மந்தம், தீவிரம்' என்னும் 'சத்தி நிபாத' நிலைகளுக்கு ஏற்பச் சிலவழிபாடாகிய தவமும் 'சரியை, கிரியை, யோகம்' என மூன்றாய் நிகழும், இம் மூன்றையும், பயன் கருதாமல், சிவனிடம் கொண்ட பேரன்பின் காரணமாகச் செய்து வந்தால், இத்தவ முயற்சியால் 'இருவினையொப்பு' உண்டாகும். அதனால் ஓடும் செம்பொன்னும் ஒன்றாகவே கருதும்நிலை ஏற்படும். இவ் 'இருவினையொப்பு' நிகழவே, 'வினை' நீங்கும்; 'வினை' நீங்கவே, உயிரறிவு உள்ளவாறு விளங்கும்; அந்நிலை 'உயிரினது பக்குவம்' எனப்படும். இது, ஞானத்தை உணர்தற்கு ஏற்ற பருவம் ஆகும். எனவே 'இருவினையொப்பு' வருங்காலமே உயிருக்கு 'ஞானம்' வரும் காலம் ஆகும். அப்போது, முழுமுதலே ஞானாசிரியராக எழுந்தருளி வந்து, அவ் உயிருக்குப் பொருளியல்பை முற்றும் உணர்தலாகிய 'ஞானத்'தை அருளுவார். அவ்வாறு 'ஞானம்' விளங்கியபொழுது, அவ்வுயிர், அசத்தை அசத்து என்று உணர்ந்து, கழித்துச் சத்தாகிய சிவத்தோடு கூடி இன்புறுதலாகிய 'முத்திநிலை' பெறும்.[26]

மணிவாசகர் தாம் பல்வேறு நிலைகளினின்றும் பிழைத்து, இறுதியில், 'ஞானம்' பெற்ற தன்மையைப் பலபடப் பேசுவர் :

"மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்
தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி"

"தன்மை பிறரால் அறியாத தலைவா
பொல்லா நாயான
புன்மை யேனை ஆண்டையா புறமே
போக விடுவாயோ?"

"கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி . . . . . . . . . . . . . . ."

"ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
ஊழிமுதற் சிந்தாத நன்மணிவந் தென்பிறவித்
தாழைப் பறித்தவா தோணோக்கம் ஆடாமோ"[27]

என்பன அவற்றுட் சில.

இத்தகு 'ஞானநிலை' எய்துதற்குச் 'சிவோகம்பாவனை' இன்றியமையாதது.

**'சிவோகம் பாவனை'**

'சிவோகம் பாவனை' என்பதற்கு, உயிரானது, தன்னைச் 'சிவமாகவே பாவித்தல்' என்று பொருள். இதனைக் 'கருட தியானத்'திற்கு ஒப்பிடுவது மரபு.

"கருட பாவனையில் மாந்திரிகன், தன்னைக் கருடனுக்கு அதிதெய்வமாகப் பாவித்தலால், பாம்பின் நஞ்சைக் கடியுண்டவனிடமிருந்து நீக்க இயலுகிறது. இவ்வாறே சிவமாகத் தன்னைப் பாவிக்கும் உயிர், தளையினின்றும் விடுபட முடிகிறது. நஞ்சு நீங்குவதற்காகக் 'கருட பாவனை' செய்யப்பட்டு, அது நீங்கியவுடன், மாந்திரிகன் தன் நிலைக்கு மீள்வதைப் போல, உயிர், பாசத்தினின்றும் நீங்குவதற்காகச் 'சிவோகம் பாவனை' செய்து, பாசத்தினின்றும் நீங்கியவுடன், களிம்பு

*நீங்கப்பெற்ற செம்பைப் போல் ஆகிறது. 'சிவோகம்பாவனை' பாச நீக்கத்திற்கான பயிற்சி என்பது கருதத்தக்கது".*[28]

என இதனை வ.ஆ. தேவசேனாபதி விளக்குவர்.

உயிருணர்வு, ஒரு பொருளைப் பற்றும்போது, அதன்கண்ணேயே அழுந்தி, அதன் தன்மையே தனது தன்மையாகக் கொண்டு நிற்பதாகிய 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்பது முன்னரே விளக்கப்பட்டது. இவ்வியல்பினாலேதான், உயிர் பாசத்தோடு கூடியபோது பாசமாகவே நிற்கும். உயிரானது, பாசப்பொருளோடு எவ்வாறு ஒற்றுமைப்பட்டு நிற்கிறதோ அவ்வாறுதான் பதியாகிய சிவத்தோடும் கூடி ஒற்றுமைப்பட்டு நிற்கும். ஆனால் பற்பல பிறவிகளிலும் பாசப் பொருளோடு கூடியிருந்த பழக்கத்தால், அவற்றோடு ஒற்றுமைப்படுதல் உயிர்க்கு எளிதாகிறது. மெய்யுணர்வு பெற்றதனால் சிவமுதற் பொருளோடு ஒற்றுமைப்படுதல் உயிர்க்கு அத்துணை எளிமையாக இல்லை. எனவே சாதனைகள் சிலவற்றை மேற்கொண்டால் சிவத்தோடு இடைவிடாது ஒற்றுமைப்படும் நிலை உண்டாகும்.

*"சிவமும் உயிரும் பொருளால் இரண்டாயினும், இரண்டு என்னும் தன்மையின்றி ஒற்றுமைப்பட்டு நிற்பவை. சிவம் வியாபகமாய் மேம்பட்டு நிற்க, உயிர் அதில் வியாப்பியமாய் அடங்கிப் பிரிப்பின்றி இயைந்து நிற்பது. இவ்வாறு இருவரும் பிரிந்து நில்லாது ஒற்றுமைப்பட்டு நிற்கின்ற நிலையை உயிர் இடைவிடாது உணர்ந்து, 'சிவன் நான்' எனப் பிரித்தல் வேண்டும். அவ்வாறு பன்னாள் பாவனையால் உணர்ந்து நிற்பின் பின்பு உண்மையிலேயே சிவமாம் தன்மை உண்டாவதாகும். அப் பாவனையே 'சிவோகம்பாவனை' எனச் சிவாகமங்கள் கூறுகின்றன. சிவோகம் - சிவ + அகம் - சிவன் நான் (ஆனேன்.)".*[29]

என்பர் ஆ. ஆனந்தராசன்.

உயிரானது, இச் 'சிவோகம்பாவனை'யில் உறைத்து நின்று, பிறவுணர்வுகள் தோன்றாதபடித் திருவருள் உணர்வு ஒன்றையே பற்றி நிற்குமானால் 'மலவாசனை' அடியோடு நீங்கும். எனவே 'சிவோகம்பாவனை' யாகிய தியானத்தில் பழகுவதே 'பசுத்தன்மை' நீங்குதற்குரிய வழியாகும்.

வேப்பமரத்தில் வாழ்ந்து, கசப்பான காய், இலை முதலியவற்றையே தின்று தின்று பழகிப்போன புழு, அருகில் இருந்த கரும்பின்மேல் தற்செயலாக விழுந்து அக்கரும்பின் தீஞ்சுவையை இனிது நுகர்ந்தாலுங்கூட, முன்னைப் பழக்கம் காரணமாக அந்த வேப்பங்காயினையே மீண்டும் மீண்டும் விரும்பித் தின்னும். அதுபோல, அசத்தாய் உள்ள உலகப்பொருள்களை 'அசத்து' என்று கண்டு கழித்த உயிர்களுக்குப் 'பதிஞானம்' விளங்கி, அதனால் 'பதி' காட்சிப்பட்ட போதிலும், முன்னைப் பழக்க வாசனையால், 'அசத்து' என்று ஒதுக்கிய அவ் உலகப்பொருள்களின்மேல் விருப்பம் நிகழ்தலும் கூடும். எனவே அவ்வாறு நிகழாதிருக்க இறைவனின் திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதவேண்டும்.

மணிவாசகப் பெருந்தகை அருளிய திருவாசகத்தின் பெரும்பகுதி 'சிவோகம்பாவனை'யாக அமைந்திருப்பது அறிந்து இன்புறுதற்குரியது.

> *"ஏனை மக்களுட் சிறந்த குடிப்பிறந்த மகாரைப்போல், அஞ்ஞான்றுள்ள கலைகளையெல்லாம் பல்லாண்டுகள் முயன்று கற்று, அறிவு நிரம்பித், தாய் தந்தையர் சுற்றத்தவரால் மணஞ் செய்விக்கப்பெற்று, அவரிடையே செல்வ வாழ்க்கையில் வாழ்ந்து, பின் பாண்டிய அரசற்கு அமைச்சராய் அமர்ந்து, உலகியலுள் விரசிக் காணப்படும் நலந்தீங்குகளையெல்லாம் மாறிமாறி நுகர்ந்து, பின்னர்ச் சடுதியிலே திருப்பெருந்துறையில் இறைவனைக் கண்ணாரக் காணப்பெற்று, அவன்றிருவடிக்கு ஆளானவர்"*[30]

என, 'மணிவாசகர், இவ்வுலக வாழ்வில் நுகரவேண்டுவனவெல்லாம் நுகர்ந்து, பின்னர் இறைவனது திருவருளுக்கு ஆளான' பான்மையினை எடுத்து மொழிவர் மறைமலையடிகளார்.

> *"மாடும் சுற்றமும் மற்றுள போகமும்*
> *மங்கையர் தம்மோடும்*
> *கூடி அங்குள குணங்களால் ஏறுண்டு*
> *குலாவியே திரிவேனை*
> *வீடு தந்தென்றன் வெந்தொழில் வீட்டிட*
> *மென்மலர்க் கழல்காட்டி*
> *ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோர்*
> *அற்புதம் அறியேனே!"*

*". . . . . . . . . . கண்கெட்ட*
*ஊரே றாயிங் குழல்வேனோ கொடியேன்"*

*"தரிக்கிலேன் காய வாழ்க்கை"*

*"காருறு கண்ணியர் ஐம்புல*
*னாற்றங் கரைமரமாய்*
*வேருறு வேனை விடுதிகண்*
*டாய்!"*

*"வைத்த நிதிபெண்டிர் மக்கள்குலங் கல்வியென்னும்*
*பித்த உலகிற் பிறப்போ டிறப்பென்னும்*
*சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த*
*வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ!"*[31]

என்று அடிகள் பாடுவனவெல்லாம், உலகப் பொருள்களை 'அசத்து' என உணர்ந்து, ஒதுக்கி, முழுமுதற் பரம்பொருளைத் தலைப்பட்ட பான்மை உரைப்பனவாம்.

*"தனித்துணை நீநிற்க யான்தருக்*
*கித்தலை யால்நடந்த*
*வினைத்துணை யேனை விடுதிகண்*
*டாய்,வினை யேனுடைய*
*மனத்துணை யே!என்றன் வாழ்முத*
*லே!எனக் கெய்ப்பினில் வைப்பே!*
**தினைத்துணை யேனும் பொறேன்** *துயர்*
*ஆக்கையின் திண்வலையே!"*

*"தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே*
*நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறும்* **எப்போதும்**
*அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியும்*
*குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ!"*

*"அன்பினால் அடியேன் ஆவியோ டாக்கை*
**ஆனந்த மாய்க்கசிந் துருக**
*என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்!"*[32]

என்று அடிகள், பாடுவனவெல்லாம் 'சிவோகம்பாவனை'யின்பாற்படும்.

**'திருவைந்தெழுத்து'**

சிவஞானபோதப் 'பாயிரத்'துள், 'பெரும்பெயர்' எனுந் தொடர் காணப்படுகின்றது. இதற்குச் சி. அருணைவடிவேலு முதலியார்,

> *"இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களில் ஒவ்வொன்றிலும் விரித்துச் சொல்லப்படும் கருத்தைச் சுருக்கமாகத் தொகுத்துக் கூறும் 'மகாவாக்கியம்' ஒவ்வொரு வேதத்திற்கும் உண்டு. அவ்வாறே சிவாகமங்களின் ஞானபாதக் கருத்தைத் தொகுத்துக் கூறும் மகாவாக்கியமும் உண்டு. எனினும் இங்குப் '**பெரும் பெயர்**' என்றது 'சிவமூலமந்திரம்' ஆகிய '**பஞ்சாக்கரம்**' அல்லது '**திருவைந்தெழுத்தை**'யே என்பது யோகிகள் (சிவஞான முனிவர்) கருத்து"*[33]

என்று, 'திருவைந்தெழுத்தி'ன் சிறப்பை எடுத்துரைப்பர்.

உலகப் பொருள்களை வெறுத்து ஒதுக்கித் திருவருளைப் பற்றி நின்று, அத்திருவருளே கண்ணாகச் சிவத்தைக் காணும் நிலை வாய்த்தபோதுங்-கூடப் பழைய பயிற்சியினால் மீண்டும் உலகினை நோக்கும் விருப்பம் உண்டாதல் கூடும். அந்நிலையை நீக்கத் 'திருவைந்தெழுத்தை'ச் சாதனமாகக் கொள்ளவேண்டும்.

சிவமூலமந்திரம் - திருவைந்தெழுத்து. 'சிவாயநம' - என்பது 'திருவைந்தெழுத்து'. இதன்கண் ஐந்து எழுத்துக்கள் உள. ஒவ்வொன்றும் ஒவ்வோர் ஆழ்ந்த பொருளைத் தன்பாற் கொண்டது. 'சி'-பேரின்பப் பொருளாகிய 'சிவத்'தைக் குறிக்கும்; 'வா'-சிவத்தின் ஞானமாகிய 'அருளை'க் குறிக்கும்; 'ய'-உயிரைக் குறிக்கும்; 'ந'-திரோதான சத்தியையும், அதன் வழிப்பட்டனவாகிய 'மாயை, கன்மம், மாயேயம்' முதலானவற்றையும் குறிக்கும்; 'ம' - மூலமலமாகிய 'ஆணவத்'தைக் குறிக்கும்.

இதன் உட்பொருளை ஆ.ஆனந்தராசன் விளக்கும் முறை வருமாறு:

> *"நடுவில் உள்ள 'ய' ஆகிய 'உயிர்', பின்னுள்ள 'ம' ஆகிய ஆணவமலத்துட்பட்டு, அறியாமையில் அழுந்தியும்; 'ந' ஆகிய இறைவனது திரோதான சத்தியால் செலுத்தப்பட்டு, 'மாயை, கன்மங்களை'ப் பொருந்தி, உலகபோகத்தில் அழுந்தியும் நிற்கும். எனவே, 'நம' ஆகிய ஈரெழுத்துக்களும் முறையே சகல நிலையையும்,*

*கேவல நிலையையும் குறிக்கின்றன என்பது விளங்கும். உயிர், 'நம'வில் அழுந்தியிருக்கும் நிலையே கட்டுநிலை.*

*"'ய' ஆகிய உயிருக்கு முன்னுள்ள, 'சி,வா' என்பவை தந்தையும் தாயுமாய் உள்ள சிவமும், அதனைப் பிரியாத திருவருளும், உயிருணர்வில் உடலாகக் கலந்திருப்பதை உணர்த்தும். உயிர், தனக்கு முன்னாக உள்ள அம்மையப்பரைத் தன் அறிவின்கண் காணமுற்படாமல், உலகத்தை மட்டுமே அறிந்து அனுபவித்து வருகிறது.*

*"உயிர், 'நம'வை விடுத்து, 'வா' ஆகிய திருவருளைச் சார்ந்து நிற்பதே 'சுத்தநிலை'யாகும். திருவருள் அவ்வுயிரைச் சிவத்திடம் சேர்ப்பிக்கும். சிவத்தில் அழுந்தி நிற்றலே இன்புறுநிலையாகும்.*

*"'நகாரம்' முதலாக உள்ள* **'நமசிவாய'** *என்பது 'தூலபஞ்சாக்கரம்' எனவும்; 'சிகாரம்' முதலாக உள்ள* **'சிவாயநம'** *என்பது 'சூக்குமபஞ்சாக்கரம்' எனவும் கூறப்படும்.*

*"'நகாரம்' முதலாக ஓதுவார்க்கு உலகப்பயன் கிடைக்கும் என்றும்; உலகப்பயனில் நாட்டமின்றிப் பிறவி நீக்கத்தை வேண்டுவோர் 'சிகாரம்' முதலாக ஓதுதல் வேண்டும் என்றும் நூல்கள் கூறும்."*[34]

பதி ஞானத்தைப் பெறுதற்கு முன்பு, அதனைப் பெறும்நிலை கைகூடுதற்பொருட்டும்; பதிஞானத்தைப் பெற்ற பின்பும் 'மலவாசனை' தாக்காதிருத்தற் பொருட்டுமாக, இத் 'திருவைந்தெழுத்'தை முறைப்படி ஓதுதல் வேண்டும்.

மணிவாசகப் பெருந்தகை, இத் 'திருவைந்தெழுத்தை'த் தம் திருவாசகத்தே எடுத்து மொழிகின்றார்:

நூலின் தொடக்கத்திலேயே, 'சிவபுராணத்'தில்,

*"நமச்சிவாய வாஅழ்க! நாதன்தாள் வாழ்க!"*[35]

என்பர். "சிவபரம் பொருளின் திருப்பெயராதலின் 'நமச்சிவாய' என்பதை முதற்கண் ஓதி, இதற்குரிய ஓசைக்கும் பொருட்கும் முதல்வனாதலால் 'நாதன்' என்றும் கூறினார்" என ஒளவை சு. துரைசாமி கூறுவர்.[36]

'நமச்சிவாய' எனும் இத் திருமந்திரம் குறித்துக் கா. சுப்ட
பிள்ளை விளக்கும் திறம் வருமாறு :

"'நமச்சிவாய' என்னும் சொற்றொடர், வடமொழியி 'வணக்கம் சிவனுக்கு' என்று பொருள்படும். நமஸ் வணக்கம்; சிவாய - சிவனுக்கு. சித்தாந்த நூ முறைப்படி 'நமசிவாய' என்பதற்கு எழுத்துப் பொரு கொள்ளுமிடத்து, 'நகரம்' உயிர்கள் உலகியலி செல்லுதற்குத் துணைபுரிந்து நிற்கும் கடவுள **மறைப்புச்** சக்தியைக் குறிக்கும். 'மகரம்', மலமாகிய உல **பாசத்தைக்** குறிக்கும். 'சிகரம்', சிவமாகிய **கடவுளை** குறிக்கும். 'வகரம்' வீடடைதற்குத் துணைபுரியு **அருட்சக்தியைக்** குறிக்கும். 'யகரம்', **உயிரைக்** குறிக்கு ஆணவத்துட் கிடக்கும் உயிரினைப் பிறவி கட்டினுட்படுத்தி, உலகியலிற் செலுத்தியும்; ஆணவ நீக்குதற்குரிய பக்குவம் வந்தபோது, கட்டுக்களை யொழித்து அருட்சத்தி வாயிலாகத் தன்பால் வீ பெறுவித்தும், உயிருக்கு நன்மை புரியும் கடவுளின் பெருந்தன்மையைத் திருவைந்தெழுத்து விளக்குதலால் 'நாதன் நாமம் நமச்சிவாய' எனப்பட்டது. நாதனை அவன் நாமத்தால் வழுத்தியபின், நாதனது சக்திக் வாழ்த்துக் கூறப்பட்டது. **'நமசிவாய'** என்பதைப் 'பரு ஐந்தெழுத்து' (தூல பஞ்சாக்கரம்) எனவும், 'சிவாயநம என்பதை 'நுண்ணிய ஐந்தெழுத்து' (சூக்கும பஞ்சாக்கரம்) எனவும் கூறுப. 'கட்டுநிலை'யை 'நமசிவாய' என்பதும், 'வீட்டுநிலை'யைச் 'சிவாயநம என்பதும் குறிக்கும்!"[37]

"போற்றியோ நமச்சி வாய புயங்கனே
மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம்
பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனைப்
போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய சயசய
போற்றி போற்றி!"[38]

இத் திருப்பாட்டுக்கு மு. கதிரேசச் செட்டியார் கூறும் நயவுரை இவண் குறிக்கத்தகும் :

*"திருவைந்தெழுத்தை 'நகாரம்' முதலாக ஓதுதல் 'மறை' வழக்கும்; 'சிகாரம்' முதலாக ஓதுதல் 'ஆகம' வழக்கும் ஆம். திருவாசகம், தமிழ்மறை ஆதலின், இதன் தொடக்கத்திலே, 'நமச்சிவாய வாஅழ்க' என்று கூறப்பட்டுள்ளது. ஏனைய மந்திரங்கள் எல்லாம் பிரணவத்தோடு கூடியே எண்ணப்படுவது ஆம். சிவபெருமானைப் பற்றிய இத் 'திருவைந்தெழுத்து மந்திரம்', பிரணவம் இன்றியே எண்ணப்படுவதாகும்; காரணம், திருவைந்தெழுத்திற்கும் பிரணவத்துக்கும் வேறுபாடு இன்மையாம் என்க"*[39]

மணிவாசகர், இப்பிறவிப் பெருங்கடலில் சிக்கித் தவித்துத் திருவைந்தெழுத்தின் புணை பற்றி உய்ந்ததைப் பின்வரும் திருப்பாட்டால் கூறுவர் :

*"தனியனேன் பெரும்பிறவிப் பெளவத் தெவ்வத்*
*தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்*
*கனியைநேர் துவர்வாயார் என்னுங் காலாற்*
*கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு*
*இனியென்னே உய்யுமா றென்றென் றெண்ணி*
**அஞ்செழுத்தின் புணைபிடித்துக்** *கிடக்கின் றேனை*
*முனைவனே முதலந்தம் இல்லா மல்லற்*
*கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே!"*[40]

மேலும் அடிகள்,

*"நமச்சி வாயஎன் றுன்னடி பணியா"*

*"எண்ணி லேன்திரு நாமஅஞ் செழுத்தும்"*

*"நானேயோ தவஞ்செய்தேன்* **சிவாயநம** *எனப்பெற்றேன்"*[41]

என்றெல்லாம் இத் திருவைந்தெழுத்தின் பெருமை பேசுவர்.

இவண் கூறிய 'சரியை' முதலாயின பற்றிய கருத்துக்கள் சைவ சித்தாந்தத் தோத்திர நூல்களிலும் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. இங்கே சில சான்றுகள்:

*"கைவினை செய்துஎம் பிரான்கழல் போற்றும்"*

"பூவினைக் கொய்து மலரடி போற்றுதும்"[42]

எனும் சம்பந்தர் தேவாரமும்;

"கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக்கோ நமனால் முனிவுண்பதே!"[43]

எனும் அப்பர் தேவாரமும்;

"நொச்சியம் பச்சிலையால் நுரைதீர் புனலால் தொழுவர்"[44]

எனும் சுந்தரர் தேவாரமும், 'சரியை' பற்றியன.

"தேனெய் பால்தயிர் தெங்கிளநீர் கரும்பின்றெளி
ஆனஞ் சாடு முடியானுமை யாறுடை ஐயனே!"[45]

எனும் சம்பந்தர் வாக்கும்;

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே! நீவா
நித்தலும் எம்பிரா னுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப் பூமாலை
புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா! சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே"[46]

எனும் அப்பர் வாக்கும், 'கிரியை' பற்றியன.

"தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத்தூர்எம் அடிகட்கே!"[47]

என்னும் சுந்தரர் தேவாரம் 'யோகத்'தைக் குறித்தது.

"ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி"[48]

எனும் சம்பந்தர் கூற்றும்;

"விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்

*உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்*
*முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே!"*[49]

எனும் அப்பர் கூற்றும் 'ஞானம்' உணர்த்துவன.

*"விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்*
*அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே!"*[50]

என்னும் தாயுமானவர் வாக்கும் ஒப்புநோக்கத்தகும்.

திருஞானசம்பந்தப் பெருமான், 'பஞ்சாக்கரத் திருப்பதிகம்' என்று ஒரு பதிகமே அருளி, அதன்கண் திருவைந்தெழுத்தின் சிறப்பினை ஓதுகின்றார். அவற்றுள் ஒன்று:

*"தும்ம லிருமல் தொடர்ந்த போழ்தினும்*
*வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்*
*இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்*
*அம்மை யினுந்துணை அஞ்செ ழுத்துமே!"*[51]

இவ்வாறே திருநாவுக்கரசரும், 'நமச்சிவாயத் திருப்பதிகம்' ஒன்றை அருளிச் செய்துள்ளார்.

*"மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்*
*பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ*
*நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்*
*தேத்த வல்லார்தமக் கிடுக்க ணில்லையே!"*[52]

என்பது அப்பதிகத்துள் வரும் ஒரு பாட்டு.

சுந்தரரும், திருப்பாண்டிக்கொடுமுடித் திருப்பதிகத்தில் ஒவ்வோர் பாடலின் ஈற்றடியிலும்,

*"நற்றவா வுனை நான்மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயவே!"*[53]

என்று கூறுவது நோக்கத்தகும்.

இனி, இவை தொடர்பாகச் சைவ சித்தாந்தச் சாத்திர நூல்களில் வரும் கருத்துக்களாவன:

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்(டு)*
*அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே"*[54]

என்பது, "வீடுபேறாகிய பயனை அடைவதற்குச் சிறந்த சாதனம் ஞானமே; அந்த ஞானத்தைப் பெறுதற்கான வழிவகை" உணர்த்தும் சிவஞான போத நூற்பாவாகும்!

*"சரியை கிரியா யோகங்களைச் செய்துழி*
*நன்னெறி யாகிய ஞானத்தைக் காட்டியல்லது*
*மோட்சத்தைக் கொடா"*[55]

என்பதும் இதன்கண் வரும் 'ஏது'வாகும்.

*"ஊனக்கண் பாசம் உணராப் பதியை*
*ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி"*

*"ஈண்டு அம்முதலை ஞானக் கண்ணாலே*
*காண்க"*[56]

என்பதூஉம் மெய்கண்டார் வாக்கே.

இந் 'நால்வகை நெறிகள்' குறித்து அருணந்தி சிவாசாரியர் கூறும் பாடலும் இவண் குறிக்கத்தகும்:

*"சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கம்*
*தாதமார்க் கம்,என்றும் சங்கரனை அடையும்*
*நன்மார்க்க நாலவைதாம் ஞான யோக*
*நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்!*
*சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய*
*சாருப்பிய சாயுச்சிய மென்றுசதுர் விதமாம்*
*முன்மார்க்க ஞானத்தால் எய்து முத்தி*
*முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபத மென்பர்!"*[57]

இதற்கு மு. திருவிளங்கம்,

*"நான்கு மார்க்கங்களின திலக்கணங்களையும்*
*தமிழுலகில் ஒழுகிக் காட்டியுள்ளார் சிவஞானச்*
*செல்வர்களாகிய மாணிக்கர், சுந்தரர், சம்பந்தர்,*
*அப்பர் என்னுஞ் சமயகுரவப் பெருந்தகையாளர்*
*என்ப"*[58]

என்று கூறுவது கொண்டு, மாணிக்கவாசகப் பெருமான் 'சன்மார்க்க நெறி'யை மேற்கொண்டவர் என்பது போதரும்.

இனிச் 'சிவோகம்பாவனை'யின் இயல்பும் பயனும் குறித்து அருணந்தி சிவாசாரியர் கூறுவது வருமாறு :

*"கண்டவிவை யல்லேனான் என்றகன்று காணாக்*
*கழிபரமு நானல்லேன் எனக்கருதிக் கசிந்த*
*தொண்டினொடு முளத்தவன்றான் நின்றகலப் பாலே*
*சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்,வே றின்றி*
*விண்டகலு மலங்களெலாங் கருடதியா னத்தால்*
*விடம்ஒழியும் அதுபோல விமலதையும் அடையும்*
*பண்டைமறை களும்அதுநான் ஆனேன் என்று*
*பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே!"*[59]

'திருவைந்தெழுத்தி'ன் சிறப்பை மெய்கண்டதேவர் அருளுவது இது :

*"ஊக்கண் பாசம் உணராப் பதியை*
*ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி*
*யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்*
*தண்ணிழலாம் பதிவிதி எண்ணுமஞ் செழுத்தே!"*

*"அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை*
*அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி - லஞ்செழுத்தாற்*
*குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி*
*லண்டனாஞ் சேடனா மங்கு"*[60]

சிவஞான சித்தியாரில்,

*"ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்க*
*உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலாம் ஓட!"*[61]

என வருவதும்: 'திருவருட்பயனி'ல், 'ஐந்தெழுத்தருள்நிலை' என்ற ஓர் அதிகாரமே இடம்பெற்றிருப்பதும் ஒப்புநோக்கத்தகும்.

**முடிபுகள்**

இவ் 'இயல்' வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. இறைவனை அடைதற்குரிய நெறிகள் நான்கு. அவை, 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்பன;
2. 'புறத்தொழில்' பற்றிய 'சரியை' எனும் நெறியில், இறைவனது திருக்கோயிலுக்குச் சென்று, 'அலகிடுதல், மெழுக்கிடுதல், மாலை சாத்தல், அவனை நினைந்து ஆடுதல், பாடுதல்' போல்வன அடங்கும்;
3. அகத்திலும் புறத்திலும் இறைவனுக்குச் செய்யும் 'திருமுழுக்கு, படையல், புகை, ஒளி, காட்டல்' ஆகியன 'கிரியை' என்ற நெறியில் அடங்கும்;

4. மனத்தை அடக்கி, அதனை இறைவனோடு ஒன்றச் செய்தல் 'யோகம்' எனப்படும்;

5. 'இருவினையொப்பு' வருங்காலம் 'ஞானம்' எனப்படும்;

6. இத்தகு நெறிகளால் 'சிவோகம்பாவனை' எனும் நிலை உண்டாகும்;

7. 'மலவாசனை' நீங்கற்பொருட்டுத் 'திருவைந்தெழுத்தை' முறைப்படி ஓதவேண்டும்;

8. இவற்றைக் குறித்து மணிவாசகர் தம் நூலில் விரிவாக எடுத்துரைக்கின்றார்;

9. சாத்திர, தோத்திர நூல்களிலும் இவை விரித்துரைக்கப்படுகின்றன.

## சான்றெண் விளக்கம்


1. க. வச்சிரவேல் முதலியார், '**சைவம்**', சைவமும் வைணவமும், ப.81.
2. ர. (இ)ராமாநுஜாசாரி. சைவ சித்தாந்தம், பக். 95-98.
3. ம.சா. அறிவுடைநம்பி. '**போதமும் சுபக்கமும்**', சைவத்தமிழ், ப.172.
4. ஆ. ஆனந்தராசன், சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை. ப.182.
5. வ.ஆ. தேவசேனாபதி, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், ப.119.
6. ந. சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, ப.295.
7. ர. (இ)ராமாநுஜாசாரி. மு.கா.நூல், ப.96.
8. திருவாசகம். 5:100.
9. மேலது, 6:45.
10. மேலது, 25:8.
11. மேலது, 21:10.
12. மேலது, 4:60-62.
13. திருவாசகம், 5:1.
14. மேலது, 5:31:1-2.
15. மேலது, 7:1; 7; 12; 15.
16. மேலது, 20:4:1-3; 21:9-1,3.
17. ந. சுப்புரெட்டியார், மு.கா.நூல், ப.296.
18. வ.ஆ. தேவசேனாபதி, மு.கா.நூல், ப.120.
19. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.182
20. திருவாசகம், 5:5:1; 5:6:1; 5:13:2; 5:14:2; 5:26:1-2; 5:82:1-2; 7:1:1; 11:2:3; 11:4:2; 13:6:3; 18:8:3; 43:9:1.
21. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.182
22. வ.ஆ. தேவசேனாபதி. மு.கா.நூல், ப.120.

23. ந. சுப்புரெட்டியார், மு.கா.நூல். பக்.298-300.
24. திருவாசகம், 22:10:1-2.
25. மேலது, 11:11:1; 11:4:3-4.
26. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.183,184.
27. திருவாசகம், 4:13-14, 41-42, 5:59:1-2; 8:5:1-4; 15:13.
28. வ.ஆ.தேவசேனாபதி, மு.கா.நூல். ப.125.
29. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், ப.243.
30. மறைமலையடிகள், மாணிக்கவாசகர் மாட்சி, பக்.10,11.
31. திருவாசகம், 41:5; 5:53:3-4; 5:7:1-1; 6:3:1 2; 10:6.
32. மேலது, 6:39; 10:3; 22:2:1-2.
33. சி. அருணைவடிவேலு முதலியார், சிவஞானபோத மாபாடியப் பொருள் நிலைவிளக்க ப.25
34. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், ப.246.
35. திருவாசகம், 1:1.
36. ஔவை சு. துரைசாமி, சிவபுராணம் விரிவுரை, ப.10.
37. கா. சுப்பிரமணியபிள்ளை, திருவாசகம் மூலமும் உரையும், ப.2.
38. திருவாசகம், 5:62.
39. மு. கதிரேசன் செட்டியார், திருவாசகம் - திருச்சதகம் கதிர்மணி விளக்கம், ப.314.
40. திருவாசகம், 5:27.
41. மேலது, 23:7:2; 26:6:1; 38:10:1.
42. சம்பந்தர் தேவாரம், 1249:3; 1250:3.
43. அப்பர் தேவாம், 6127.
44. சுந்தரர் தேவாரம், 8221:3.
45. சம்பந்தர் தேவாரம், 1528:3 4.
46. அப்பர் தேவாரம், 6555.
47. சுந்தரர் தேவாரம், 7688.
48. சம்பந்தர் தேவாரம், 3033:1-2.
49. அப்பர் தேவாரம், 6121.
50. தாயுமானவர் பாடல்: பராபரக்கண்ணி ப.157.
51. சம்பந்தர் தேவாரம், 3036.
52. அப்பர் தேவாரம், 4271.
53. சுந்தரர் தேவாரம், 7712:1.
54. சிவஞானபோதம், நூற்பா 8.
55. மேலது, அதிகரணம்:1:ஏது.

56. மேலது, நூற்பா 9:1-2; அதிகரணம்:1.

57. சிவஞான சித்தியார், 270.

58. மு. திருவிளங்கம், மேலது உரை, ப.463.

59. சிவஞான சித்தியார், 298.

60. சிவஞானபோதம், நூற்பா:9; அதிகரணம்:3:உதாரணம்.

61. சிவஞான சித்தியார், 292:4.

# 7
# திருவாசகத்தில் 'சிவப்பேறு'

### முன்னுரை

எல்லாம் வல்ல பரம்பொருளாம் சிவபெருமானின் திருவருட்பேறு பெற்ற மணிவாசகப் பெருந்தகை, தாம் அருளிய திருவாசகத்தில் 'சிவப்பேறு' எனப்படும் 'முத்திநிலை' குறித்துப் பேசுகின்றார். அதுகுறித்த ஆய்வு, இவண் மேற்கொள்ளப்படுகின்றது.

### 'சிவப்பேறு' - ஒரு விளக்கம்

'சிவப்பேறு' அல்லது 'முத்திநிலை' குறித்து முரு.பழ. இரத்தினம் செட்டியார் கூறும் விளக்கம் வருமாறு :

> *"இறைவன் பரமவியாபகமாக இருக்கின்றான். நாம் உடம்பிற்குள் கட்டுப்பட்டிருக்கிறோம். உலகப்பற்றையும் உடல்பற்றையும் நீக்கிவிட்டால், பரமவியாபகனான இறைவனோடு ஒன்றாகக் கலந்து, என்றும் மாறாத பேரின்பத்தை அனுபவிப்போம். இதனையே 'சாயுச்சிய முத்தி' எனச் சாத்திரம் சொல்லும். சாயுச்சிய முத்தியில் நமக்கு எந்தவிதமான உடம்பும் இல்லை. தூலம், சூக்குமம், பரம் ஆகிய மூன்று உடம்புகளும் நம்மைவிட்டுப் போய் விடும் . . . . . இறைவன் எப்படி வியாபகமாக இருக்கின்றானோ அப்படியே ஆன்மாவும் இறைவனோடு கலந்து, வியாபகமாக நிற்கும் என்பது சித்தாந்தக் கொள்கையாகும். கலந்து நிற்பதன் பொருள். 'நாம் அங்கு இல்லை' என்பதன்று; சிவானந்தத்தில்*

நம்மை முழுதும் மறந்த நிலையில் இருப்போம். நம்மை மறக்கின்ற காரணத்தால் நாம் இருந்தும் இல்லாதவர்கள் போல் ஆகிவிடுவோம். எனினும், 'சிவானந்த நுகர்ச்சி' நமக்கு இருப்பதால் நாம் அங்கு இருக்கிறோம் என்பது தெளிவு.

*"இறைவன், உயிர், மலம் ஆகிய மூன்றும் 'முத்தி'யில் உண்டு. இறைவன், உயிருக்குப் பேரின்பத்தை வழங்குவான்; உயிர், தன்னை மறந்து அதனை அனுபவிக்கும்; மலம், அதனைப் பாதிக்க முடியாமல் வலி குன்றிக் கிடக்கும் . . . . . . . முத்தி நிலையிலும் இறைவன்* **ஒன்றாகவும் வேறாகவும் உடனாகவும்** *இருக்கின்றான். அவனுடன் நாம்* **முழுமையாகக் கலப்பதால்தான்** *பேரின்பம் குறைவுபடாது கிடைக்கின்றது. அவன்* **வேறாக நிற்பதால்,** *பேரின்பத்தை அவன் நமக்கு ஊட்ட முடிகின்றது; அவன்* **உடனாக நிற்பதால்** *அந்தப் பேரின்பத்தை நாம் அனுபவிக்கின்றோம். இது சைவ சித்தாந்தம் சொல்லும் 'முத்திநிலை'யாகும்!"*[1]

## அணைந்தோர் தன்மை

இறைவன், சிந்தனைக்கு அப்பாற்பட்டவன்; எனவே, அவனை மாயா காரியங்களாகிய கருவி, கரணங்களைக் கொண்டு அறிதல் இயலாது. கருவிகளினின்று நீங்கிய முத்தரே அவனைக் காணமுடியும். கருவிகளினின்று நீங்கி அவனைக் கண்டோர், பின்னர்க் கருவிகளோடு கூடி, உலகத்தோடு தொடர்புற்ற காலத்திலும் அவனைக் காணுதல் இயலும். அவ்வாறு கண்டு வழிபடுவோரே 'சீவன்முத்தர்' அல்லது 'அணைந்தோர்' எனப்படுவர்.

சிவத்தை அணைந்த 'சீவன்முத்தர்', இறைவனது திருவடியில் அணைந்து நிற்க ஒட்டாது விலகும்படிச் செய்வனவாகிய 'மும்மலங்கள்' என்னும் அழுக்கை, 'ஞானம்' என்னும் நீரால் கழுவிப் போக்குவர். தம்மைப்போல் அயரா அன்பினையுடைய மெய்யடியார்களோடு கூடியிருந்து அவர்களது திருவேடத்தையும், திருக்கோயிலில் உள்ள திருமேனிகளையும் 'சிவன்' என்றே எண்ணி, அவற்றை வழிபடுவர்.

இறைவன் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து நிற்பவன்; எனினும் தன் அடியாரிடத்திலும், திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் திருமேனிகளிலும் மட்டுமே, அவன், தயிரில் நெய் போல இனிது விளங்கித் தோன்றுவன். ஏனைய இடங்களில், பாலில் நெய் போல விளங்காது நிற்பன். எனவே இவ்விரண்டு இடங்களில் மட்டுமே வழிபடல் இன்றியமையாதது.

சிவனடியார்கள் 'சிவோகம்பாவனை'யால் சிவனை உணர்ந்தவர்களாவர். இறைவனும், அவ் அடியார்களைத் தனது வியாபகத்துள் அடக்கிக் கொண்டு, அவர்களைத் தானாக்கிக் கொள்கின்றான். இவ்வகையில் அவ் அடியார் 'சிவனே'யாவர். அவர்களிடத்தில் இறைவன் தயிரில் நெய் போல விளங்கி நிற்பன்.

சிவஞானியர், **'அத்துவிதநிலை'** பற்றி அனைத்தையும் சிவமாகவே காண்பர். அவ்வகையில் திருக்கோயிலில் உள்ள திருமேனிகளையும் அவனாகவே கண்டு வழிபடுவர். இதனால் இறைவன், அவர்களிடத்தில் எக்காலத்தும் விளங்கி நின்று அருள் புரிவன்.

இறைவன், மிகப் பெரிய கருணை வள்ளல்; தன்னை அறியாது கிடந்த சிற்றறிவுயிர்க்கு ஞானக்கண்ணைக் கொடுத்துத் தன்னை உணருமாறு செய்பவன். கைம்மாறு கருதாத இறைவனது இப்பேருதவியை உயிரானது மறந்துவிடாமல், 'குரு'வாக எழுந்தருளி வரும் அவனை வழிபடுதலே உறுதி தருவதாம்.[2]

**திருவாசகத்தில்!**

மணிவாசகர், தம் உள்ளத் தாமரையில் எழுந்தருளியிருக்கும் சிவபரம்பொருள் ஓங்காரமாய் விளங்குவதையும், ஏனை அபரஞானமாகிய கலை ஞானங்களால் காணுமிடத்து, அந்த ஞான எல்லையைக் கடந்து நிற்பதையும், பரஞானக் காட்சியில் அபரமாகிய 'பசு, பாச' ஞானங்கள் நீங்குவதையும், பாசம் காரணமாக உண்டாகும் அஞ்ஞானம் ஒழிவதையும் விளக்குமுகத்தான் பின்வருமாறு கூறுகின்றார் :

*"உய்யவென் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற*
*மெய்யா! விமலா! விடைப்பாகா! வேதங்கள்*
*'ஐயா' எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே!*
*வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா!*
*பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி*
*மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!*

*எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே!*
*அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே!"*[3]

என்பது அடிகள் திருவாக்கு.

இறைவன், தாமாக வந்து தமக்குத் 'திருவடி' காட்டிய விந்தையை வியந்து,

*"நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி . . . .*
*பாசமாம் பற்றறுத்து . . . . .*
*ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே!"*[4]

என்றும் ஏத்துகின்றார்.

"இறைவா! நின் அடியவர் எல்லாருமே நின்தாள் சேர்ந்தனர். நானும் நின் அடியான் அல்லனோ?" என்று வினவுகின்றார் மணிவாசகர்:

*"அடியேன் அல்லேன் கொல்லோ? தான்எனை*
*ஆட்கொண் டிலைகொல்லோ?*
*அடியார் ஆனார் எல்லாரும்*
*வந்துன் தாள்சேர்ந்தார்!"*[5]

என்பது அவர் கூற்று.

*"அடியார் சிலருன் அருள்பெற்றார்*
*ஆர்வங்கூர யான்அவமே*
*முடையார் பிணத்தின் முடிவின்றி*
*முனிவால் அடியேன் மூக்கின்றேன்!"*[6]

என்று, அவனருள் பெற்ற அடியாரைக் குறிப்பிடுகின்றார்.

தாம் எப்போதும் சிவனடியார் திருக்கூட்டத்துள் ஒருவராக இருக்க வேண்டும் என்ற வேட்கையைப் பலவிடங்களில் குறிப்பிடுகின்றார் மணிவாசகர்:

*"உடையாள் உன்றன் நடுவிருக்கும்*
*உடையாள் நடுவுள் நீயிருத்தி*
*அடியேன் நடுவுள் இருவீரும்*
*இருப்ப தானால் அடியேன்உன்*
*அடியார் நடுவுள் இருக்கும்அரு*
*ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்*
*முடியா முதலே! என்கருத்து*
*முடியும் வண்ணம் முன்னின்றே!"*

*"புகுவேன் எனதே நின்பாதம்*
*போற்றும் அடியா ருள்நின்று*
*நகுவேன்!"*

*"அப்பன் ஆண்டு,தன் அடியாரிற்*
*கூட்டிய அதிசயம் கண்டாமே!"*

*"ஊச லாட்டும்இவ் உடல்உயி ராயின*
**இருவினை அறுத்தென்னை**
*ஓசை யால்உணர் வார்க்குணர் வரியவன்*
*உணர்வுதந் தொளியாக்கிப்*
**பாச மானவை** *பற்றறுத் துயர்ந்ததன்*
*பரம்பெருங் கருணையால்*
*ஆசை தீர்த்தடி யார்அடிக் கூட்டிய*
*அற்புதம் அறியேனே!"*[7]

என்பன அவற்றுட் சில.

**'சிவப்பேறு'**

உயிரானது, சிவனை உலகத்துப் பொருள்களை அறிவது போல அறிவதில்லை. உலகப் பொருள்கள் உயிருக்கு வேறாக, 'அது' என்று சுட்டியறியும்படியாக நிற்கின்றன. அவ்வாறு, 'சிவன்' உயிருக்கு வேறாய், அதனால் சுட்டியறியப்படுபவன் அல்லன். அவன், தன்னை அறியும் அவ்வுயிரின் அறிவினுள்ளே 'அத்துவிதமா'ய்க் கலந்து நிற்பவன். அதனால், அவனை அறிகின்ற உயிரும், அவனுக்கு வேறாய் நின்று அறியாமல் ஒன்றாய் நின்றே அறியும். அஃதாவது உயிராய் நின்று அறியாமல் சிவமாய் நின்று அறியும். எனவே, 'முத்தி'யில் உயிர், சிவத்தோடு இரண்டறக் கலந்து நின்றுதான் அத்னை அறிந்து அனுபவிப்பதாகிறது.[8]

'முத்தி'க்குச் சாதனம் 'ஞானம்'; ஞானமாகிய சாதனத்திற்குச் சாதனம் 'சரியை' முதலான தவங்கள்; தவங்களுக்குக் காரணம், 'மந்ததரம்' முதலிய 'சத்தி நிபாதங்கள்'.



என்று இதனை விளக்கலாம்.

'முத்தி'ப் பயனை அடைவதற்குச் சிறந்த சாதனம் 'ஞானம்' என்பது இதனால் அறியலாகும்.

உயிரானது, திருவருளில் அழுந்தி நிற்கும்நிலை 'அருள்நிலை' எனப்படும். திருவருள் வழியாகச் சிவத்தில் அழுந்தி நிற்கும்நிலை 'ஆனந்தநிலை' எனப்படும். எனவே அருள்நிலைக்கும் அப்பால் உள்ளது 'ஆனந்தநிலை'யே எனலாம். உயிர், சிவத்தில் அழுந்துதலாகிய ஆனந்தநிலையே 'முத்தி' எனப்படும்.

'சிவம்' இன்பப்பொருள் ஆதலின் **'சிவப்பேறு'** என்பது 'இன்புறுநிலை' ஆயிற்று. இவ் இன்புறுநிலையில், சிவத்தைச் சார்ந்த உயிரானது, 'தான்' என்பது சிறிதும் தோன்றாமல், சிவமாகவே நிற்கும். எனினும், முத்தியில் உயிர், சிவமாகிவிடாது! ஆனால் சிவத்தின் தன்மையைத் தன் தன்மையாகக் கொண்டு நிற்கும்.

இம் முத்திக் காலத்தில், உயிருக்குத் தன்னைப்பற்றிய உணர்வு தோன்றாமல், பேரின்பம் ஒன்றே தோன்ற, அதில் மூழ்கி விடுதலால் 'சிவம்' ஆகிய ஒருபொருளே உள்ளது போலத் தோன்றும்.

முத்தியில் 'உயிரும் சிவமும்' ஆகிய இரண்டும், உண்மையில் உள்ளவையாம். ஆயினும் பிரிந்து வேறு நில்லாது ஒரு பொருள் போல நிற்கும். கலப்பினால் ஒன்றாய் நிற்கும். அக்கலப்பே **'அத்துவிதம்'** எனப்படும்.[9]

இதனால், உயிரானது சிவத்தில் அழுந்தி அதன் இயல்பை உணருந்தோறும் 'சிவபோகம்' வரம்பின்றிப் புதிது புதிதாய் விளைந்து, உயிர்க்கு இன்பம் செய்யும்.

**திருவாசகத்தில்!**

மணிவாசகர், 'சிவப்பேறு' ஆகிய இம் 'முத்திநிலை' குறித்துப் பலபடப் பேசுவர்.

"சிவகதி, சிவலோகம், சிவபுரம், வீடு, முத்தி, சிவபதம், அறியாப்பதம்" முதலான பல சொற்களால் இதனைக் குறிப்பிடுகின்றார்.[10]

சிவபெருமான், தமக்கு அளித்த இப் பேரின்பநிலை குறித்து, மணிவாசகர் கூறும் இடங்கள் பல. அவற்றுட் சில வருமாறு:

*"மெய்யே உன்பொன்னடிகள் கண்டின்று* ***வீடுற்றேன்!****"*

*"................... நெஞ்சத்து*
*இருள்அகல வாள்வீசி இன்பமரு முத்தி*
*அருளுமலை"*

*"சிந்தைதனைத் தெளிவித்துச்* **சிவமாக்கி** *எனையாண்ட*
*அந்தமிலா ஆனந்தம் அணிகொள் தில்லை கண்டேனே"*

*"செம்மையே ஆய* **சிவபதம்** *அளித்த*
*செல்வமே சிவபெரு மானே"*

*"***முத்தி தந்திந்த** *மூவுலகுக்கும் அப்புறத்தெமை வைத்திடும்*
*அத்தன்"*

*"என்னால்* **அறியாப்பதம்** *தந்தாய்"*[11]

இவ்வாறெல்லாம் பாடும் அடிகள், இறைவன் தமக்கருளிய இச் 'சிவப்பேறு' குறித்துப் பரவசமுற்று, "இத்தகைய பெருங்கருணைத் திறத்தை என்னைத்தவிர வேறு யார் பெறக்கூடும்?" என்று எண்ணி வியக்கின்றார்.

*"***முத்திநெறி** *அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்*
*பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்*
*சித்தமலம் அறுவித்துச்* **சிவமாக்கி** *எனையாண்ட*
*அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே!"*[12]

என்பது அவர் திருவாக்கு.

இத் திருப்பாடலில் மணிவாசகர் மொழியும் 'அத்தன் எனக்கு அருளியவாறு' என்பதற்கு ஆழ்ந்த பொருள் உண்டு என்றும்; சைவ சித்தாந்த உண்மைகளை உணர்த்தும் தீந்தமிழ்ப் பாட்டு இது என்றும் கூறுவர் ச. சாம்பசிவனார்.[13]

இறைவன் **'திருவடி அடைதல்'** என்பதும் சிவப்பேறுதான். மணிவாசகர் ஒல்லும்வாயெல்லாம் சிவனின் 'திருவடிகளை' ஏத்துதல் காணலாம்.

'சிவப்பேறு' எப்போது கிட்டியதோ அப்போதே பிறவிப் பிணியும் இல்லாதொழிகிறது. இதனையும் மணிவாசகர்,

*"இப்பிறவி ஆட்கொண் டினிப்***பிறவா மே***காத்து"*

*"பிறப்பறுத்த அத்தன்"*

*"இப்பிறப் பறுத்தெமை ஆண்டருள் புரியும்"*

*"மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன்*
*கழற்கே புகுமாறும்"*

*"பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட*
*பிஞ்ஞகா!"*[14]

என்பன சான்றுகள்.

மணிவாசகர், தமக்குக் கிட்டிய 'சிவப்பேறு' மன்பதைக்கும் கிட்டவேண்டும் எனும் பெருங்கருணையால்,

*"புகழ்மின்! தொழுமின்! பூப்புனைமின்!*
*புயங்கன்தாளே புந்திவைத்திட்(டு)*
*இகழ்மின் எல்லா அல்லலையும்*
*இனியோர் இடையூ றடையாமே*
*நிகழும் சீரார்* **சிவபுரத்துச்**
**சென்று சிவன்தாள் வணங்கி***நாம்*
*நிகழும் அடியார் முன்சென்று*
*நெஞ்சம் உருகி நிற்போமே!"*[15]

என 'யாத்திரைப்பத்து' எனும் பகுதியில் கூறுகின்றார்.

இங்ஙனம் மணிவாசகர் 'சிவப்பேறு' பெறுதற்குக் கையாண்ட நெறி - எளிய நெறி - அன்புநெறி - அதுவே 'பத்திநெறி'. இந்நெறியை அறிவித்தவனும் இறைவனே!'பத்திநெறி அறிவித்து' என்னும் திருவாசகம் இதனை உணர்த்தும். "நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே நிறைந்து நிறைந்து, ஊற்றெழும் கண்ணீர் அதனால் உடம்பு நனைந்து நனைந்து" இறைவனை ஏத்துதல் வேண்டும். "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி"னால் இறைவன் அருள் புரிவன். இதனை மணிவாசகர்,

*"வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே!"*[16]

என்பதால் சுட்டுவர்.

பத்திநெறியால் பரமனின் திருவருளுக் காளாகி, முத்திநெறியாகிய சிவப்பேற்றில் ஆரா இன்பம் துய்த்தலே மனித்தப் பிறவியின் மாண்பயன்!

*"இடரினும் தளரினும் எனதுறு நோய்*
*தொடரினும்* **உனகழல்** *தொழுதெழுவேன்!*

*"மாதில் பங்கன்* **மலரடி** *சேரவும் வல்லரே"*[17]

எனும் சம்பந்தர் வாக்கும்;

"மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப்பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகில் **சிவகதி** விளையு மன்றே"[18]

எனும் அப்பர் தேவாரமும்;

"தானெனை முன்படைத்தான் அதறிந்துதன் **பொன்னடிக்கே**
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர் கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்தான்மலை உத்தமனே!"[19]

எனும் சுந்தரர் பாடலும் இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

மெய்கண்டதேவர்,

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே!"

"செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே!"[20]

என்று அருளிச் செய்ததும்;

அருணந்தி சிவாசாரியர்,

"காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்
காட்டிக்கண் டிருந்தன்மை யுடைய கண்ணுக்
கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல
ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை
ஆயுமறி வுடையவனா யன்பு செய்ய
அந்நிலைமை இந்நிலையி னடைந்தமுறை யாலே
மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீழ் இருப்பன்
மாறாத சிவாநுபவ மருவிக் கொண்டே"

"செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்
திரிமலங்க ளறுத்தீச னேசரொடுஞ் செறிந்திட்

*டங்கவர்தந் திருவேடம் ஆலயங்கள் எல்லாம்*
*அரன்எனவே தொழுதிறைஞ்சி ஆடிப் பாடி*
*எங்கும்யாம் ஒருவர்க்கும் எளியோ மல்லோம்!*
*யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்*
*திங்கள்முடி யாரடியார் அடியோம் என்று*
*திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே!*"[21]

என்று அருளிச் செய்ததும், இவண் எண்ணி இன்புறத்தகும்.

## முடிபுகள்

இவ் 'இயல்' வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன:

1. இறைவன், உயிர்களோடு 'ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும்' இருக்கின்றான்; இதுவே சைவ சித்தாந்தம் சிறப்பாகப் பேசும் **'அத்துவிதநிலை'**யாகும்; 'முத்தி நிலை' எனப்படும் 'சிவப்பேற்' றிலும் இந்நிலை உண்டு;

2. சிவஞானியர், 'அத்துவிதநிலை' பற்றி அனைத்தையும் சிவமாகவே காண்பர்;

3. இவ்வுலகத்திலிருந்து கொண்டே இந்நிலை பெற்றவர் 'சீவன்முத்தர்' அல்லது 'அணைந்தோர்' எனப்படுவர்;

4. மணிவாசகர் இப்பெறற்கரும் நிலை பெற்றவர்;

5. முத்திநிலையில் உயிரானது சிவத்தில் அழுந்தி நிற்க, அதனால் 'சிவபோகம்' அளவின்றிப் பெருகப் பேரானந்தங் கொள்ளும்;

6. மணிவாசகர், திருவாய்மலர்ந்தருளிய இக்கருத்துக்கள், 'சம்பந்தர்' ஆகியோர் திருப்பாடல்களிலும்; 'மெய்கண்டார்' முதலானோர் நூல்களிலும் கண்டு மகிழமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்


1. முரு. பழ. இரத்தினம் செட்டியார், இதோ சைவ சித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள், பக்.33 34
2. ஆ. ஆனந்தராசன். சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை. பக். 299, 308, 311.
3. திருவாசகம், 1:59, 64, 74.
4. மேலது, 1:59, 64, 74.
5. மேலது, 5:83.
6. மேலது, 32:2:1 2.
7. மேலது, 21:1; 5:60:1-2: 26:1:4; 41:8.

8. ஆ. ஆனந்தராசன். மு.கா. நூல், பக். 151, 152.
9. மேலது, பக். 278, 280
10. திருவாசகம், 6:41:4; 8:11:3; 45:6:3; 5:100:4; 42:6:3; 37:3:3; 50:2:1.
11. மேலது. 1:32;19:5:2-4; 31:1:3-4; 37:3; 42:6:3-4; 5:2:1.
12. மேலது. 51:1.
13. ச.சாம்பசிவனார், '**அத்தன் எனக்கு அருளியவாறு**'. உலக சைவப் பேரவை 4ஆவது மாநாட்டுச் சிறப்புமலர்.
14. திருவாசகம், 8:12:3; 11:16:2-3; 20:6:4; 33:9:3; 37:6:2.
15. மேலது, 45:6.
16. மேலது, 5:90:2.
17. சம்பந்தர் தேவாரம், 2834:1 2; 2899:11:4.
18. அப்பர் தேவாரம், 4895.
19. சுந்தரர் தேவாரம். 8241.
20. சிவஞானபோதம், நூற்பா:11;12.
21. சிவஞானசித்தியார், 310, 322.

# 8

# முடிவுரை

இவ் ஆய்வேட்டின் இயல்களில் கூறப்பட்ட முடிபுகள் இவண் தொகுத்துரைக்கப்படுகின்றன.

மணிவாசகர், திருவாதவூரிற் பிறந்து, பாண்டியனின் முதலமைச்சராய் விளங்கித் திருப்பெருந்துறையில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டுப் பல திருத்தலங்கட்கும் சென்று, 'திருவாசகம்' அருளி, இறுதியில் தில்லைக்கூத்தன் திருவடியில் இரண்டறக் கலந்தார். 'திருவாசகம்' முத்திப் பயன் நல்கும் திறத்தது.

'பதி' என்பது இறை முதற்பொருள்; 'பதி' ஒன்றே. 'தன்வயத்தன் ஆதல்' முதலிய எண்குணங்கள் கொண்டது. 'உரு, அரு, அருவுரு'வாக விளங்குவது; '**அத்துவித**' நிலையில் உயிர்களோடு ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்பது. இக்கருத்துக்களைத் திருவாசகம் தெளிவாக உணர்த்துகிறது.

'பதி'யினைப் போல் 'பசு'வாகிய உயிரும் அநாதி; அறிவித்தால் அறியக்கூடியது; சார்ந்ததன் வண்ணமாக இருப்பது; 'பதி'யின் வியாகத்தில் அடங்கியிருப்பது; உயிர்கள் பல; எனினும் 'மலத்தால்'மூவகைப்படும்; 'மலங்களினின்று நீங்குதல் உயிருக்குத் தூய்மை' முதலான கருத்துக்கள் திருவாசகத்தில் இடம்பெற்றுள்ளன.

'பதி, பசு'வைப் போல் 'பாச'மும் அநாதியே; இது, 'ஆணவம், கன்மம், மாயை' என மூவகைப்படும். உயிர்கட்குப் பகை 'ஆணவமே'; அந்த ஆணவம் அளவற்ற சத்திகளையுடையது; இறைவன் திருவருளால் 'ஆணவமலம்' உயிரைப் பற்றாது நிற்கும். 'கன்மம்' என்பது 'வினை', இது. 'சஞ்சிதம்,

பிராரத்தம், ஆகாமியம்' என மூவகைப்படும்;திருவருளில் திளைப்போர்க்கு வினைத்துன்பம் இல்லை. உலகமும் அதன் பொருள்களும் தோன்றுதற்கு 'மாயை' காரணம். உயிரானது அறிவுபெறத் துணை செய்வது 'மாயை'. 'ஆணவம், கன்மம், மாயை' எனப்படும் இப் பாசங்கள் குறித்தும், மணிவாசகர் தம் நூலில் குறிப்பிடுகின்றார்.

இறைவனை அடைதற்குரிய நெறிகள் 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' எனும் நான்காகும். 'இருவினையொப்பு' வரும் காலமே உயிர்களுக்கு 'ஞானம்' வரும் காலம். ஞானநிலை எய்தச் 'சிவோகம்பாவனை' இன்றியமையாதது. 'மலவாசனை' நீங்கத் திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதுதல் வேண்டும். இவையனைத்தையும் மணிவாசகர் அருளிய திருவாசகத்தில் காணலாம்.

'முத்திநிலை'யைச் 'சிவப்பேறு' எனலாம். கருவிகளினின்று நீங்கி இறைவனைக் காண்போர் 'அணைந்தோர்' அல்லது 'சீவன்முத்தர்' எனப்படுவர். மணிவாசகர் இத்தகு நிலை எய்தியவர். திருவாசகத்தில், 'அணைந்தோர்' இயல்பையும், சிவனடியாரோடு எப்போதும் சேர்ந்திருக்கும் நிலையையும் அவர் குறிப்பிடுகின்றார். 'சிவப்பேறு' அடைதற்கு மணிவாசகர் கண்ட நெறி - உலகிற்குக் காட்டிய நெறி - 'பத்திநெறி'யாகும்.

மணிவாசகர் கூறும் இச் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பலவும், 'சிவஞானபோதம்' முதலான சாத்திர நூல்களிலும் பேசப்பட்டுள்ளன.

இவ் ஆய்வினால்,

'சைவ சித்தாந்தம்' எனும் தெய்வப் பழச்சாற்றின் பிழிவே 'திருவாசகம்'; சைவ சித்தாந்தச் சாத்திர நூல்கள் தோன்றுதற்கான மூல நூல்களுள் முதன்மையான இடத்தைப் பெறுவது இத் 'திருவாசகம்' எனும் உண்மையைப் பலரும் அறிந்து இன்புற முடியும்.

திருவாசகத்தை நாளும் ஓதி வழிபடுவோர்க்குச் 'சைவ சித்தாந்தம்' பற்றி அறிந்து கொள்ளவும்; அதனால், நால்வகை நெறிகளைக் கடைப்பிடித்து, இறைவன் அருள் பெற்றுச் 'சிவப்பேறு' எய்தவும் முடியும்.

இவ்வகையில் இச் 'சிற்றாய்வு'பெரிதும் பயன்படும் எனலாம். மணிவாசகர் அருளியுள்ள ஒவ்வொரு பகுதியையும் - பகுதியிலுள்ள ஒவ்வொரு பாடலையும், இந்த ஆய்வுக் கண்ணோட்டத்தில் ஆராய்ந்து, மிகப்பெரியதொரு ஆராய்ச்சி நூலைத் தமிழுலகிற்கு வழங்குவதற்கும் இடனுண்டு.

'மணிவாசகர் திருவடி போற்றி!'

# பின்னிணைப்பு

## துணைநூற் பட்டியல்

### முதன்மை ஆதாரம்

#### தமிழ் நூல்


திருவாசகம், (ப.ஆ.) கே.சுப்பிரமணியபிள்ளை. ஸ்ரீகுமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம், 1969.


### துணைமை ஆதாரங்கள்

#### தமிழ் நூல்கள்


அருணைவடிவேலு முதலியார்,சி.. சிவஞானபோத மாபாடியப் பொருள்நிலை விளக்கம். தமிழ்ப் பல்கலைக்கழகம். தஞ்சாவூர், 1991.

முப்பொருள் இயல்பு சைவ சித்தாந்த சமாசம்,சென்னை. 1976.

அறிவுடைநம்பி. ம.சா., 'போதமும் சுபக்கமும்', சைவத்தமிழ், கருமணி பதிப்பகம், மதுரை, 1992.

ஆனந்தராசன், ஆ., சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை. அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம். திருநெல்வேலி. 1994.

இரத்தினசபாபதி, வை., திருமுறைத் தெளிவே சைவ சித்தாந்தம், செ.ப.க.. சென்னை, 1979.

இரத்தினம் செட்டியார். முரு.பழ., இதோ சைவ சித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள், மலேசியத் திருமுறை மாணவர்கள், மலேசியா, 1991.

இராமநாதபிள்ளை, ப.. (வி.உ) திருவாசகம், கழகம், சென்னை, 1968.

(இ)ராமானுஜாசாரி,ர., சைவ சித்தாந்தம், அ..ப.க., அண்ணாமலைநகர், 1963.

கங்காதரன், ச., சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும். அங்கயற்கண்ணி அகம். மதுரை, 1992.

கதிரேசச் செட்டியார், மு., திருவாசகம்-திருச்சதகம், கதிர்மணி விளக்கம், மேலைச்சிவபுரி சன்மார்க்க சங்கம், (2ஆம் பதிப்பு), 1965.

திருவாசகம்-திருவெம்பாவை, கதிர்மணி விளக்கம், மேலைச் சிவபுரி சன்மார்க்க சங்கம், (2ஆம் பதிப்பு), 1965.

கந்தர் அனுபூதி, முத்துக்குமரன் பிரஸ், சென்னை, (?)

கோமதி சூரியமூர்த்தி, திருஞானசம்பந்தர் தேவாரமும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும், ஈஸ்வரகம், மதுரை, 1994.

சாம்பசிவனார், ச., 'அத்தன் எனக்கு அருளியவாறு', நான்காவது உலக சைவ மாநாட்டுச் சிறப்பு மலர், கொழும்பு, 1995.

________., நாவலர் சோமசுந்தர பாரதியாரின் தமிழ் இலக்கியப்பணி, வளவன் வெளியீடு, மதுரை, 1994.

________., 'மாணிக்கவாசகர் சிந்தனைகள்', தெய்வத்தமிழ் அலங்கல், வளவன் வெளியீடு, மதுரை, 1994.

சிவஞான சித்தியார் சுபக்கம், மு. திருவிளங்கம் புத்துரை, யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற்பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், (2ஆம் பதிப்பு), 1971.

சுப்பிரமணியபிள்ளை,கா., திருவாசக மூலமும் உரையும், பி. இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை, (?).

சுப்பிரமணியபிள்ளை, பொன்., ஸ்ரீ மாணிக்கவாசகர் வரலாறு (அல்லது) நீத்தார் பெருமை, திருவாவடுதுறை ஆதீனம், 1969.

சுப்புரெட்டியார், ந., சைவ சமய விளக்கு, (வி.உ) பாரி நிலையம், சென்னை, 1984.

ஞானசம்பந்தன், அ.ச., மணிவாசகர், அ.ப.க., அண்ணாமலைநகர், 1974.

தாயுமானசுவாமிகள் திருப்பாடற்றிரட்டு, பி. இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை, (?)

திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், ஆறுமுக நாவலர் பதிப்பு, (13ஆம் பதிப்பு), சென்னை, சர்வதாரி.

திருமந்திரம், ஸ்ரீ குமரகுருபரன் சங்கம், ஸ்ரீ வைகுண்டம், 1976.

திருவருட்பா-திரு ஆயிரம், இளங்கோ புத்தக நிலையம், ஈரோடு, 1965.

திருவிளையாடற்புராணம், நா. கதிரைவேற்பிள்ளை பதிப்பு, வித்தியா ரத்நாகரத அச்சுக்கூடம், சென்னை, 1928.

துரைசாமி, ஔவை சு. சிவபுராணம் விரிவுரை, (தனி வெளியீடு), மதுரை, 1982.

________., தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை 65ஆம் ஆண்டு நிறைவு விழாத் தலைமைப் பேருரை, (தனி வெளியீடு), மதுரை, 1986.

தேவசேனாபதி, வ.ஆ., சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், செ.ப.க., சென்னை, 1981.

தேவார அடங்கன் முறை, மயிலை இளமுருகனார் பதிப்பு, சென்னை, 1953.

நால்வர் நான்மணிமாலை, (ப.ஆ.) ஐயன்பெருமாள் கோனார், பழநியப்பா பிரதர்ஸ், திருச்சி, 1966.

பதினோராந்திருமுறை, காசிமடத்துப் பதிப்பு, திருப்பனந்தாள், 1963.

பாலசுப்பிரமணிய முதலியார், ம., நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும், தருமை ஆதீனம், 1941.

பெரியபுராணம், திருவாவடுதுறை ஆதீனம், 1988.

மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி, கழகம், 1971.

_______., மாணிக்கவாசகர் மாட்சி, கழகம், சென்னை, 1971.

மெய்கண்ட சாத்திரம் (சைவ சித்தாந்தம்), தருமை ஆதீனம், 1988.

வச்சிரவேல் முதலியார், க., 'சைவம்', சைவமும் வைணவமும், தமிழ்நாடு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, (2ஆம் பதிப்பு), சென்னை, 1976.

## ஆங்கில நூல்கள்

Devapoopathy Nadarajah. *The Strength of Shaivism*. University of Malaya, Kuala Lumpur.

Radha Thiyagarajan, *A Study of Mysticism in Tiruvacakam*, M.K.U., Madurai, 1983.

Siddhalingaiah. T.B., *Origin and Development of Saiva Siddhanta*, M.K.U., Madurai, 1979.

முனைவர் ச. சாம்பசிவனார்

எழுதிய

'திருவாசகத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்'

முற்றும்!